**CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும்
அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது**

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள்.
# மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

## ப்ரூக் பாண்ட் நிபுணர்களால் பக்குவம் செய்யப்பட்டிருப்பதே அது சிறந்து விளங்கக்காரணம்




*க்ரஷ், டியர், கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக் கிடைக்கவும் உறுதியளிக்கிறது.

சிறுகதைச் சிறப்பிதழ்

# கல்கி

## பொருளடக்கம்



சாதாரண, வைகாசி, 17 – 1970, மே 31






| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

சோஷலிஸ விளையாட்டு!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 ❋ இதழ் 44

# வாக்கு மீறும் படலம்

மூன்னுள் மன்னர்களுக்கு எதிரிடையான மசோதாவை விடாப்பிடியாகப் பிரதம மந்திரியும் அவரது மந்திரி சபையும் பிரகரித்துள்ளன. வாக்குறுதிகளையும், பிரதிக்ஞைகளையும் இம்மாதிரி புறக்கணிப்பது இந்தியாவின் மதிப்பையோ அந்தஸ்தையோ உயர்த்தக் கூடியது அல்ல. இதன் மூலம் குறிப்பிடத்தக்க அளவு பணமும் தேசத்துக்கு மிச்சப்படப் போவதில்லை. வாக்குறுதிகளைப் புறக்கணிக்கும் செய்கையை ஏற்பதில்லை என்று முன்னுள் மன்னர்கள் உறுதியாக இருக்கிறார்கள். இது எனக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது.

வெளிப்படையாக அறிவித்துவிட்ட ஒரு நிலையிலிருந்து பின்வாங்குவதற்கு விசேஷ தைரியம் தேவை. வெற்றி போல மேலுக்குத் தோன்றுவது பல சமயங்களில் தோல்வி தரக்கூடும்; மேலுக்குத் தோல்வியாகத் தோன்றுவது உண்மையான லாபத்தை அளிக்கக் கூடும். ராஜமானிய மசோதாவை ஸ்ரீமதி இந்திரா காந்தி வாபஸ் பெறுவாராளுல் அது எல்லா வகைகளிலும் அவருக்கும் அவரது புதிய காங்கிரசுக்கும் பெரிய அளவில் லாபத்தை அளிக்கும். நமது அரசியல் சாஸனத்தின் மூலகர்த்தர்கள் அளித்த புனிதமான வாக்குறுதியை மீறுவது அவர்கள் எல்லோரையும் அவமதிப்பதாகும். குறிப்பாக, ஸர்தார் வல்லப பாய் பட்டேலை அவமதிப்பதாகும். அவரது காரிய காரண விளக்கங்களையும், வேண்டுகோளையும் கேட்டு, அவற்றை முழு அளவில் ஏற்று அரசியல் நிர்ணய சபையானது வாக்குறுதியை சாஸனத்தின் பகுதியாக்கியது. அத்தகைய ஏற்பாட்டை மக்கள் அளித்த பெரும்பான்மை வாக்கு பலத்தைக் கொண்டு புறக்கணிப்பது வெற்றியாகாது. உண்மையில் இது இந்தியாவின் கௌரவத்துக்கு ஏற்பட்ட தோல்வியே ஆகும்.

சத்தியம் என்பதில் கொடுத்த வாக்குறுதிகளை விசுவாசத்துடன் நடத்தி வைப்பதும் அடங்கும். நமது மறைகள் அப்படித்தான் கூறுகின்றன. மறைகள் ஒருபுறமிருக்க, ஒப்பந்தங்களின் புனிதத்தை மதித்து நடந்து கொள்வது கடமையும் ஆகும். அது இன்றைய நாகரிகத்தில் ஒன்றிவிட்டிருக்கும் ஓர் அம்சம். கொடுத்த வாக்கைத் தனி நபர்கள் மீறினுல் கோர்ட்டில் விவகாரம் செய்யலாம். ஆனுல் சர்க்கார்களும் பார்லிமெண்டுகளும் கொடுத்த வாக்கை மீறுவதுடன் கூட, தங்களைக் கோர்ட்டுகளால் ஒன்றும் செய்ய முடியாது என்று வாதாடுகின்ற நிலையில் நாகரிகம் மீட்க இயலாதபடி பாழ்பட்டுப் போகிறது.

ஆண்டுதோறும் தரும் ராஜமானியத்தை நிறுத்திவிட்டு ஒரு மொத்தத் தொகையாக நஷ்டஈடு கொடுத்துவிடலாம் என்கிற யோசனை அரசின் பரிசிலனையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனுல் ஒரு பெரிய தொகையை மொத்தமாகக் கொடுத்து விடுவதைவிட ஆண்டுதோறும் சிறு தொகைகளாகக் கொடுத்து வருவதே புத்திசாலித்தனமானது. தேசத்தின் மற்ற கொள்கைகளுக்கும் அதுவே இசைவானது. இந்த உண்மையைப் பிரதம மந்திரிக்கு எடுத்துரைக்கக்கூடிய தொழில் முறை நாணயமும் தைரியமும் உள்ள காரியதரிசி எவரும் நிதி அமைச்சகத்தில் இன்று இல்லாமல் போய்விட்டாரா? பழைய காலத்தில் இருந்த காரியதரிசிகள் தைரியமாக இதைச் சொல்லுவார்கள். நாம் அளித்த வாக்குறுதிகள் தரும நியாயப்படி புறக்கணிக்க இயலாதவை. நஷ்டஈடு கொடுத்துச் சமாளிப்பதால் நாம் அடைகின்ற லாபந்தான் என்ன? இதில் வீண் ஜம்பம் தவிர வேறு ஒன்றுமில்லை. முன்னுள் மன்னர்களுக்கு ஆண்டுதோறும் கொடுபட வேண்டியதை நிறுத்திவிடுவதால் மீதப்படும் பணம் எப்படிச் செலவாகப் போகிறது? அது பாதுகாப்புச் செலவை உயர்த்துவதற்குப் பயன்படலாம்; அல்லது பெருகி வருகின்ற சிப்பந்திப் படைக்குப் போய் விடும். நஷ்டஈட்டை மொத்தமாகக் கொடுத்தால் கடன் பளு ஏறும். அதற்காக ஆகின்ற தவணை வட்டி இப்போது மன்னர்களுக்குத் தரப்படும் மானியத்தின் அளவில் இருக்கும்.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)

# நீதிமன்றத்தின் மீது யுத்தமா?

டாக்டர் ஆர். ஸி. கூப்பர்

**1895**ம் ஆண்டில் லோகமான்ய திலகர் ஸ்வராஜ்ய மசோதா ஒன்றை உருவாக்கினர். பேச்சுரிமை, சொத்துரிமை, சட்டத்தின் முன் சமநிலை போன்ற ஜீவாதார உரிமைகளை உத்தரவாதம் செய்கின்ற அரசியல் சாஸன நகலாக அது அமைந்தது. 1928ம் ஆண்டில் மோதிலால் நேரு கூறினர்: ''நமது ஜீவாதார உரிமைகளை, எந்த நிலைமையிலும் பின்னர் வாபஸ் பெறுவதற்கு வாய்ப்பு இல்லாத வகையில் அவற்றுக்கு உத்தரவாதங்களை ஏற்பாடு செய்ய வேண்டும். அதுவே நமது முதல் சிரத்தையாக இருக்க வேண்டும் என்பது தெள்ளத் தெளிந்த உண்மை.''

அமெரிக்க அரசியல் சாஸனம் பின்வருமாறு திட்ட வட்டமாகக் கூறுகிறது:

''சட்டத்தின் வரம்பு முறைகளுக்குப் புறம்பாக எவருடைய உயிரையோ, சொத்தையோ, சுதந்திரத்தையோ பறிமுதல் செய்யலாகாது. நியாயமான நஷ்டஈடு தராமல் பொது உபயோகத்துக்காகத் தனியாரின் சொத்துரிமையை எடுத்துக்கொள்ளக் கூடாது.''

இந்திய அரசியல் சாஸனத்தில் செப்பியுள்ள ஜீவாதார உரிமைகளில் பேச்சுரிமை, சங்கமாகச் சேருவதற்குள்ள உரிமை, மத உரிமை ஆகியவை மட்டுமின்றிச் சொத்துரிமையும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

மனிதன் உழைப்பது தனது அன்றாட வாழ்க்கைக்கு உடனடியாகத் தேவைப்படும் பொருட்களைப் பெறுவதற்காக மட்டுமல்ல. முதுமையில் பாதுகாப்பாக இருப்பதற்குச் சேமித்து வைப்பதற்காகவும் அவன் உழைக்கிறான்.

எல்லா ஜீவாதார உரிமைகளையுமே நமது அரசியல் சாஸனத்திலிருந்து நீக்கி விடப் பார்லிமென்டுக்கு அதிகாரம் தருவதுதான் நாத்பாய் தாக்கல் செய்திருக்கும் மசோதாவின் நோக்கம். ஜீவாதார உரிமைகளின் பட்டியலிலிருந்து சொத்துரிமையை விலக்கி விடவேண்டும் என்ற கூச்சல் முதலில் கம்யூனிஸ்டுகளிடமிருந்து கிளம்பியது இயல்பே. ஆளும் காங்கிரஸ் கட்சி நாத்பாயின் மசோதாவை ஆதரிப்பது தன் உத்தேசமென அறிவித்திருக்கிறது.

அரசியல் சாஸன கர்த்தாக்களில் ஒருவரான அம்பேத்கர் கூறியதாவது: ''எந்த ஷரத்து இல்லாமல் இருந்தால் அரசியல் சாஸனம் அடியோடு பயனற்றதாகிவிடும் என்று சொல்லுமாறு என்னைக் கேட்டால், நான் சுட்டிக்காட்டுவது இந்த ஒரு ஷரத்தாகத்தான் (ஜீவாதார உரிமைகளைப் பற்றியது) இருக்க முடியும். அது பிற அனைத்துக்குமே மையமாக உள்ளது.'' சுப்ரீம் கோர்ட்டானது ஜீவாதார உரிமைகளுக்குக் காவலனாகவும் உத்தரவாதியாகவும் ஆக்கப்பட்டுள்ளது. நாத்பாயின் மசோதா நிறைவேறினால், பிரஜையின் ஜீவாதார உரிமைகளில் ஒன்றாகிய சொத்துரிமையைப் பறிப்பதுதான் அதன் விளைவாக இருக்கும். சொத்து என்றால் பணக்காரருடைய செல்வம் அல்லது மன்னர்களுடைய ராஜ மானியம் என்று மட்டும் பொருளாகாது. ஓர் ஏழை விவசாயியின் சிறிய பண்ணை, குடியானவனின் சாகுபடி உரிமை, சிறிய கிராமக் கடைக்காரர் உடைமை, ஆலைத் தொழிலாளிக்கும் ஆபீஸ் சேவகருக்கும் இருக்கும் பிராவிடெண்ட் நிதி, ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி, சிறுசேமிப்பு, பாங்கு டெபாஸிட்டுகள், சர்க்காரின் கடன் பத்திரங்கள், ஏழைக் குடும்பத்தின் தட்டு முட்டுச் சாமான்கள் ஆகியவையும் சொத்து என்பதில் அடங்கும்.

சொத்துரிமை ஜீவாதாரமானது என்ற ஏற்பாடு இல்லாத பல கம்யூனிஸ்ட் நாடுகளில், தனிப்பட்ட டாக்ஸி சொந்தக்காரர்கள் போன்ற சிறு உரிமையாளரின் டாக்ஸிகள் பறிமுதலாகியுள்ளன. கடைக்காரரின் கடைகள் பறிமுதலாகியுள்ளன. குடியானவர்களின் பண்ணைகள் பறிமுதலாகியுள்ளன. பாங்கு டெபாஸிட்டுகள் கொடுபடாமல் போய் விட்டன. அதற்கப்புறம் மக்கள் சர்வாதிகார ஆட்சிக்கு அடிமைகளாகி விட்டனர்.

நாத்பாயின் மசோதா சட்டமாகும் பட்சத்தில், அதன் விளைவுகள் நாட்டில் ஒவ்வொரு பிரஜையையும் கடுமையாகப் பாதிக்கும். இந்த மசோதா விஷயத்தில் சாமான்ய மக்கள் காட்டி வரும் அலட்சியப் புத்தி.



## வருந்துகிறோம்

கோபிசெட்டிபாளையம் எம். எல். ஏ. திரு கே. எம். ராமசாமிக் கவுண்டரின் திடீர் மரணம் சுதந்திரக் கட்சிக்கு மட்டும் ஏற்பட்ட பெருநஷ்டமல்ல. தமிழ் நாட்டுக்கும், ஜனநாயகத்துக்கும், நேர்மையான பொது வாழ்க்கைக்கும் ஏற்பட்ட நஷ்டம். 1959 முதல் 1962 வரையில் சென்னை மேல்சபை உறுப்பினராகவும் சென்னை பல்கலைக் கழக உறுப்பினராகவும் பணியாற்றிப் பல கூட்டுறவு சங்கங்களில் சிறப்புச் சேவை புரிந்துள்ளார் திரு ராமசாமிக் கவுண்டர். சுதந்திரக் கட்சியின் சட்டசபை உறுப்பினராக 1967 தேர்தலில் வெற்றி பெற்ற திரு ராமசாமிக் கவுண்டர் இக் கட்சிக்கு ஒரு தூண்போல விளங்கினர். அவர் மறைவுக்கு வருந்துவதுடன் அன்னரின் குடும்பத்தினருக்கு எமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## சூரி மறைந்தார்!

சென்னையின் புகழ் பெற்ற சார்ட்டர்ட் அக்கவுன்டன்ட்களில் ஒருவரான ஸ்ரீ எஸ். சூரிய நாராயணன் அவர்களின் மறைவு, அவரது ஏராளமான நண்பர்களுக்கும், தொழில் முறையில் அவருடன் தொடர்பு கொண்டிருந்த ஏராளமான நிறுவனங்களுக்கும் பெரிய இழப்பாகும்.

''சூரி'' என்று அன்போடு அழைக்கப் பெற்ற ஸ்ரீ சூரியநாராயணன் ''சூரி அண்டு கம்பெனி'' நிறுவனத்தின் ஸ்தாபகராவார். இந்திய சார்ட்டர்ட் அக்கவுன்டன்ட் நிலையத்தின் உப தலைவராகப் பணி ஆற்றியிருக்கிறார்.

கல்கி தொடங்கியதிலிருந்து இருபத்தெட்டு ஆண்டுகளாக நமது கணக்குகளைப் பரிசீலித்து வந்துள்ளவர் ஸ்ரீ சூரி. இதுபோல் பல நிறுவனங்களில் தமது உயர்ந்த சேவை நெறியாலும், இதயபூர்வமான ஆலோசனைகளாலும் பேரன்புக்கும் நன்றிக்கும் பாத்திரராகி யிருக்கிறார்.

சூரி அவர்களின் சுறுசுறுப்பு பெயர்பெற்றது. தர்ம சிந்தனை படைத்தவர். அன்னதான சிவன் நினைவு விழாவில் பெரும் பங்கு கொண்டவர். மகா கும்பாபிஷேகம், மகாமக உத்ஸவம் — இப்படி எந்தத் திருப்பணி நடந்தாலும் அங்கு யாத்ரிகர்களுக்கு அன்னதானம் செய்வதில் ஸ்ரீ சூரி குறிப்பிடத்தக்க பங்கினைப் பெற்றிருப்பார்.

நிதித் துறை கணக்கில் சூரராக இருந்தார். கணக்கில்லாத நல்ல காரியங்களில் ஈடுபட்டு, கணக்கற்ற நண்பர்களைப் பெற்றிருந்தார்.

ஸ்ரீ சூரியின் குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவிக்கிறோம்.



பெரும் கவலை தருவதாக இருக்கிறது. மசோதா நிறைவேறிய பிறகுதான் அதன் விளைவுகள் எவ்வளவு கடுமையானவை என்பதைப் புரிந்து கொள்ளக்கூடும்.

அரசியல் சாஸனத்தின் கீழ் பார்லிமென்டுக்குத்தான் மேலாதிக்கம் உண்டு என்ற கோட்பாட்டை நிலைநிறுத்துவது நாத்பாய் மசோதாவின் நோக்கம் என்று கூறப்படுகிறது. கோலக்நாத் வழக்கில் சுப்ரீம் கோர்ட் அளித்த தீர்ப்பினால் ஏற்பட்டுள்ள நிலைமையை ரத்துச் செய்வதுதான் அதன் நோக்கம் என்று மேலும் கூறப்படுகிறது. அரசியல் சாஸனத்தின் மூன்றாவது பாகத்தில் கூறப்பட்டுள்ள ஜீவாதார உரிமைகளை நீக்கவோ, குறைக்கவோ, திருத்தவோ, பார்லிமென்டுக்கு அதிகாரம் இல்லை என்று அந்தத் தீர்ப்பில் சுப்ரீம் கோர்ட் கூறியுள்ளது. இன்று நாட்டிலுள்ள சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் கவனிக்கும் போது, ஒரு முக்கியமான பிரச்னை எழுகிறது. தேசத்திலுள்ள எல்லா அரசியல் கட்சிகளும் தர்ம நியாயத்துக்கு மதிப்புத் தராமல் நடந்து கொள்ளும் நிலை மிக மோசமாகி விட்டது. இந்த நிலவரத்தில், ஜீவாதார உரிமைகளை விலக்கவோ திருத்தவோ பார்லிமென்டுக்கு வரம்பற்ற அதிகாரம் தருவது பத்திரமான ஏற்பாடாகுமா?

நாத்பாயின் மசோதா நிறைவேறினால் பார்லிமென்டுக்குத்தான் மேலாதிக்கம், சுப்ரீம் கோர்ட்டுக்கு அல்ல என்று ஏற்பட்டு விடும். அதற்குப் பிறகு ஜீவாதார உரிமைகளின் காவலனாக சுப்ரீம் கோர்ட் இருந்து வந்த நிலைமை மாறிவிடும். அந்த அதிகாரம் பார்லிமென்டுக்கு வந்து விடும். அப்பொழுது ஜீவாதார உரிமைகளைத் தன் இஷ்டப்படி பார்லிமென்ட் மாற்றிக் கொள்ள முடியும்.

பார்லிமென்டின் இப்படிப்பட்ட ஆதிபத்தியத்தை நமது அரசியல் சாஸனம் உண்மையில் அங்கீகரிக்கவில்லை. அதன்படி ஆதிபத்திய அதிகாரம் இந்திய மக்களிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது; பார்லிமென்டிடம் அல்ல. மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களைக் கொண்டது பார்லிமென்ட் என்பது உண்மையே. ஆனால் ஆதிபத்திய அதிகாரம் உட்படத் தமது உரிமைகள் அனைத்தையும் தேர்தலின் மூலம் பார்லிமென்டிடம் மக்கள் ஒப்படைத்து விட்டார்கள் என்று கொள்வது தவறு. சர்க்கார் மூன்று வெவ்வேறு பிரிவுகளைக் கொண்டது: 1. நிர்வாகம், 2. சட்ட சபை, 3. நீதி மன்றம்.

இவை சிருஷ்டிக்கப்பட்டுள்ள விதமும், இவை ஒவ்வொன்றுக்கும் அளிக்கப்பட்டுள்ள அதிகாரமும் இதைத் தெளிவுபடுத்துகின்றன.

# ராஜாஜியின் கருத்துக்கள்

உற்பத்தியிலும் வியாபாரத்திலும் ஈடுபட்டுள்ள சில நல்லவர்கள், தங்களது துறையினரிடம் எவ்வித தார்மிகச் சீர்திருத்தத்தையும் எதிர்பார்ப்பதற்கு இடமே இல்லை என்று என்னிடம் அந்தரங்கமாகக் கூறினர். தகுதி வாய்ந்த ஒரு ராஷ்டிரபதிக்கோ, அல்லது சர்வாதிகாரிக்கோ உட்பட்டுச் சக்தி வாய்ந்த ராணுவ ஆட்சி ஏற்பட்டால்தான் இவ்வினத்தில் தீமையை விலக்க முடியும் என்பது அவர்களது கருத்து. மக்களில் எண்பது சதவிகிதத்தினர் நல்லவர்களாகவும் நேர்மையாகவும் இருக்கின்றனர்; இவர்களின் நலனை முன்விட்டு மற்றோரை ராணுவ ரீதியில் சமாளிக்க வேண்டும் என்பது அவர்களது வாதம்.

எனினும், அவர்கள் விரும்புவது போல் என்னால் இவ்விஷயத்தைக் கைவிட்டு விட முடியவில்லை. கருணையைக் கோரி நாம் அடக்கத்துடன் பிரார்த்தித்தால் நமக்கு உதவி புரிய ஒரு மகாசக்தி இருக்கவே இருக்கிறது என நம்புகிறேன்.

✶

தமிழக அரசின் புதிய நில வரம்புச் சட்டத்தால் பாதிக்கப்பட்ட எவருமே இது செல்லத்தக்கதா என்று நீதிமன்றம் பரிசீலிப்பதற்கு நடவடிக்கை எடுக்கக் காணோம். இதுகுறித்து வருந்துகிறேன். மிகவும் காலதாமதம் செய்வதால், அது காரணமாகவே நீதிமன்றம் மூலம் நிவாரணம் காண இடமில்லாமல் போகக்கூடும்.

★

பிரிட்டிஷ் பிரதமர் ஸ்ரீ வில்ஸன் இடைக்காலத் தேர்தல் நடத்த முற்பட்டிருப்பதைப் பார்த்தவுடன், நம் நாட்டுப் பத்திரிகை விமர்சகர்கள் இந்தியாவிலும் இடைத் தேர்தல் என்ற கிளர்ச்சிகரமான நிகழ்ச்சி நடக்கக் கூடும் என எதிர்பார்க்கிறார்கள். ஆனால் ஸ்ரீ வில்ஸனுக்கும் ஸ்ரீமதி இந்திராகாந்திக்கும் இடையே பெருத்த வேறுபாடு உள்ளது. வில்ஸனின் கட்சி என்ற கார் உருளை, ஸ்தாபன அமைப்பு என்ற அகன்ற அடித்தளத்தில் உறுதியாக நிற்கிறது. ஆனால் இந்திராவின் கட்சியோ, அதன் பலவீனமான முனையில் (பம்பரம் போல்) தலைகீழாகத் தடுமாறிக் கிடக்கிறது. சர்க்காரில் அவருக்குள்ள பதவி ஒன்றுதான் அவரது பலம். எனவே இங்கு இடைத்தேர்தல் நடந்தால், பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியில் அவர் எவ்வளவு சக்தி பெற்றிருப்பினும் சரி — அவர் தோல்வி காண வேண்டியே நேரும்.

✶

செய்தி ஸ்தாபனங்களின் அறிக்கைகளின்படி லவோஸில் அமெரிக்கத் துருப்புகள் இருப்பது குறித்து இந்திய அரசாங்கம், தான் பெரும் கவலை கொண்டிருப்பதாகக் கூறுகிறதாம். ஹனோயும் வியட்காங்கும் இந்தோ — சீனு முழுவதையும் ஒன்றாகக் கருதி எங்கெல்லாம் தங்கள் ராணுவ நடவடிக்கைகளை விஸ்தரிக்கின்றனரோ, அங்கெல்லாம் அமெரிக்கத் தரைப் படையும் செல்ல வேண்டியிருக்கிறது. இந்திய அரசாங்கம், ஒரு காரணமுமின்றி அமெரிக்கப் படைகள் சென்றிருப்பதாகவும், யுத்தத்தை மேலும் தூண்டத்தான் அப் படைகள் போவதுபோலவும் பேசுகிறது. கம்யூனிஸ்ட் ராணுவப் படைகள் முன்னதாகச் செல்வதன் காரணமாகத்தான் அமெரிக்கத் துருப்புகளும் அங்கு வலுக்கட்டாயமாகச் செல்ல வேண்டியிருக்கிறது என்று யோசிக்காமலே முடிவு செய்து கொள்ளலாம்.

## இசைக் கலைஞர் இழப்பு

பழம் பெரும் சங்கீத வித்துவான்களில் ஒருவராக விளங்கி வந்த மதுரை ஸ்ரீரங்கம் அய்யங்கார் அவர்கள் காலமாகி விட்டார். ஸ்ரீரங்கம் அய்யங்கார் மகா வித்வானுகிய நாமக்கல் நரசிம்ம அய்யங்காரிடம் சிட்சை பெற்று, அதன்பின் முப்பதாண்டுகள் தமது தமையனுருடன் சேர்ந்து கச்சேரி செய்து வந்தார். தியாகையர், தீட்சிதர் இருவருக்கும் நேர் சிஷ்யபரம்பரையில் சேரும் பாக்கியம் பெற்றார். தியாகப் பிரம்ம உத்ஸவத்திலும், நாமக்கல் நரசிம்ம அய்யங்கார் நினைவு விழாவிலும் மனமார ஈடுபட்டு, தமது குருவிடமும், சங்கீத சத்குருவிடமும் தமக்குள்ள பக்தி சிரத்தையை வெளிப்படுத்திக் கொண்டவர் ஸ்ரீரங்கம் அய்யங்கார். லயத் துறையில் விசேஷ கவனம் செலுத்தியவர். அடக்கமும் அன்பும் ஆசாரமும் நிறைந்தவர்.



தில்லி சங்கீத நாடக அகாடெமி, தமிழக சங்கீத நாடக சங்கம் இவற்றால் கௌரவிக்கப்பட்ட ஸ்ரீ ஸ்ரீரங்கம் அய்யங்கார் சென்ற ஆண்டில் மியூஸிக் அகாடெமியின் 'சங்கீத கலாநிதி' விருதைப் பெற்றார்.

ஸ்ரீரங்கம் அய்யங்காரின் மறைவில் நமது இசையுலகம் மற்றொரு பெரிய வித்துவானை இழந்து விட்டிருக்கிறது.

# சோப்பென சொல்லவோ, சுகந்தம் அல்லவோ!




**புதிய கோத்ரேஜ் லக்சுரி சந்தன சோப்!**

என்ன விந்தை! ஒரு சோப்பில் எத்தனை சோபித சுகந்தம்! எப்படித்தான் சந்தனத்தின் உண்மையான வாசனையை கோத்ரேஜ் இந்த சந்தன சோப்பின் உள்ளடைத்தனரோ! மணம், மணம், மணமோ மணம், கரைந்து முடியும் வரை மணம். கோத்ரேஜின் புதிய லக்சுரி சந்தன சோப் புத்துணர்வூட்டும் சந்தன சுகந்தமேதான்! அதுவும் மிகக் குறைந்த செலவில்!

Godrej

லக்சுரி

## சந்தன

சோப்

ULKA-GSS-1 TAM



- அலங்காரத்துடன் பவனிக்குக் காத்திருக்கும் தேர்.
- திரு வி.எஸ். தியாகராஜ முதலியார்

கீழே :

- தேரிழுக்க வந்த திரளான மக்கள்



# திரும்பவும் ஓடியது திருத்தேர்!

'திருவாரூர் தேர் அழகு' என்பது ஒரு பழமொழியாகவே ஆகிவிட்டது. ஐந்து வேலிப் பரப்பில் பெரிய திருக் கோயிலும், ஐந்து வேலிப் பரப்பில் கமலாலயத் திருக்குளமும் பெற்ற ஆரூரில் தமிழகத்தின் தலைசிறந்த திருத்தேரும் விளங்கி வருவது விசேஷம்.

பாரதத்தின் சமயக் கலைக்கு இரு உருவங்கள், கோயிலும், தேரும் ஆகும். கல்லில் அமைந்தது கோயில். மரத்தில் அமைந்த தேரையோ நகரும் கோயில் என்றே சொல்லலாம். கோயிலைத் தேடிப் பக்தர்கள் போவது போல், பக்தர்களைத் தேடி இறைவன் வீதி உலா புரிவதற்காக ஏற்பட்டது ரதோத்ஸவம். உயர்ந்தவர் — தாழ்ந்தவர் என்ற பேதமின்றிச் சமுதாயத்தின் சகல பிரிவினரும் சேர்ந்து நின்று வடம் இழுக்கும் ஐக்கியத் திருநாள் ரதோத்ஸவம்.



எந்த ஊரிலுமே தேர்த்திருவிழா உண்டு. ஆயினும் திருவாரூர் தேர்த் திருவிழா தனிச் சிறப்பு பொருந்தியது. பிரம்மாண்டமான அத்தேரைப் பல்லாயிரம் மக்கள் நாட்கணக்கில் இழுத்து வருவது தனிப்பட்ட ஒரு பக்தியெழுச்சியை அளிக்கும் நிகழ்ச்சியாகும்.

பலப் பல தலைமுறைகளாகப் புகழ்பெற்றிருந்த திரு ஆரூர் தேர் 1926ம் ஆண்டில் தீ விபத்துக்கு ஆளாகியது. ஆஸ்திகர் உள்ளங்களில் எல்லாம் அப்போது தீப்புண் கட்டது போலாயிற்று. மீண்டும் ரதம் நிர்மாணிப்பதில் பக்தர்கள் ஈடுபட்டனர். இவர்களில் ஏழூரார் சுப்பராய வாத்தியாரைக் குறிப்பிட வேண்டும். இத்திருப்பணிக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவாள் பூரண ஆதரவும், நிதி உதவியும் அளித்ததோடு, தாம் 1927ல் கேரள திக்விஜயம் செய்த போது அங்கிருந்து மரமும் அனுப்பி வைத்தார்கள். 1928ல் புதுத் தேரின் வெள்ளோட்டம் நடைபெற்றது.

இருபத்தியொரு ஆண்டுகள் தேர் விழா சிறப்பாக நடைபெற்றது. அதற்குப்பின் இருபத்தியொரு ஆண்டுகள் துரதிருஷ்டவசமாக இந்த மகத்தான விழா நின்று போய்விட்டது. நம்பிக்கை, மலையையும் நகர்த்தும் என்பார்கள். முன் தலைமுறையில் நம் மக்களின் நம்பிக்கையானது மலையளவான ஆரூர் தேரை

இழுத்து வந்தது. ஆனால் பிற்பாடு சூழல் மாறியது. பல்லாயிரம் மக்கள் பக்தியுணர்வு ஒன்றின் மீதே வடம் பிடித்திழுக்கும் புனிதப் பாங்கு நலிந்தது. கூலிக்கு ஆள் அமர்த்தித் தேர் இழுக்க வேண்டியதாயிற்று. எத்தனை ஆயிரம் பேர்களை இப்படிக் கூலிக்கு அமர்த்திக் கொள்ள முடியும்? அப்படியே செலவுக்கு ஏற்பாடு செய்தாலும் கூட இந்த 'நாகரிக' யுகத்தில் தேரிழுக்க ஆயிரக்கணக்கில் ஆட்கள் கிடைப்பார்களா? இந்த நிலையில் திருவாரூர்த் திருத்தேர் நிலையை விட்டுக் கிளம்பாது இருபத்தியொரு ஆண்டுகள் இருந்துவிட்டது.

ஆயினும் நம் சமய உணர்வின் சின்னமான ஆரூர் தேர் விழா நின்றுவிடலாகாது என ஆஸ்திகர்கள் பலர் தீவிரமாக இருந்தனர். இவர்களில் வடபாதி மங்கலம் ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்களின் பெயரை நன்றியுடன் குறிப்பிட்டுச் சொல்லிப் போற்ற வேண்டும். தியாகேசன் கோயிலுடன் பின்னிப் பிணைந்தது தியாகராஜ முதலியாரின் குடும்பம் என்பதற்கு அத்தாட்சியாக இருந்தது அவரது அயராத முயற்சி.

திருஆரூர் திருத்தேரைப் பிராசீன ஆசாரத்துக்குக் குந்தகம் இன்றியே, நவீன உபகரணங்களைக் கொண்டு, ஆட் பலம் அதிகம் இல்லாமலே ஓட்டுவதற்கு வழிவகைகள் ஆலோசிக்கப்பட்டன. இந்தத் திவ்வியமான பணியைத் திருவெறும்பூர் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் பிரதம அதிகாரி ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மேற்கொண்டார். 'சபாஷ் கிருஷ்ணமூர்த்தி' என்று அனைவரும் மெச்சும் வண்ணம் தேருக்கு விசைச் சக்கரம், இருசு, ஹைட்ராலிக் பிரேக், நூதன வடங்கள், புல்டோஸர் உந்தல் முதலிய வசதிகளை அமைத்துத் தந்தார்.

தியாகேசன் திரு அருளில், புகழ்பெற்ற திருஆரூர் திருத்தேர் இம்மாதம் 17ந் தேதி திரும்பவும் ஓடியது.



இயந்திர வசதி காரணமாக முன்னெப்போதையும் விட விரைவாகப் பவனி முடிந்து நிலைக்கு வந்தது. லட்சோப லட்சம் மக்கள் நேரில் கண்டு பேருவகை கொண்டனர். கோடானு கோடி மக்கள் செய்தித் தாள்களின் மூலம் விழாவில் பங்கு கொண்டு களிப்பு எய்தினர்.

ஆண்டுதோறும் இந்த அற்புத விழா அமோகமாக நடக்கத் தியாகேசன் அருள் புரிவாராக!

மேலே:

☐ திருவெறும்பூர் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் பிரதம அதிகாரி திரு வி. கிருஷ்ணமூர்த்தி.

☐ 'நகரும் கோயிலாக'ப் பக்தர்களுக்குக் காட்சி தரப் புறப்பட்டு விட்டது திருஆரூர்த் தேர். மே மாதம் 17ந் தேதி நடைபெற்ற இந்தத் தேர்த் திருநாளில் மக்கள் வெள்ளம்.

# குரோட்டன் செடிகள்

மாலை ஐந்து மணி ஆயிற்று. அப்போது தான் களைத்துப் போய் வீடு திரும்பினேன், சர்வகலாசாலையிலிருந்து. என்னைப் பார்த்தவுடனே, "டேய் சீனு! அக்கா வந்துட்டாடா, வேலைக்காரியை பாத்ரூமில் வெந்நீரை விளாவி வைக்கச் சொல்லு" என்று கூக்குரலிட்டாள், கார்த்திகை விளக்குகளுக்குத் திரி தயாரித்துக் கொண்டிருந்த அம்மா. சீனு ஓட்டமாய் ஓடி ஒரு நிமிடத்தில் திரும்பி வந்தான்.

"வெந்நீர், சோப்பு, டவல் — எல்லாம் தயார்!" என்றான்.

இரண்டாவது தங்கை ஊர்மிளா, மூன்று வயதுக்காரி "ஜோதியக்கா! உன் புடவை ஜாக்கெட்டு நான் வச்சிருக்கேன். வாங்கிக்கோ" என்று குளியலறை நோக்கிப் போய்க் கொண்டிருந்த என் கைகளில் துணிகளைக் கொடுத்தாள்.

அவளுடைய கைகளிலிருந்து நழுவித் தரையில் உராய்ந்த புடவையைப் பார்த்த அம்மா, "ஏண்டி, ராட்சசி முண்டம்! உனக்கு எத்தனை தடவை சொல்றது, பெரியக்கா துணிகளைத் தொடக் கூடாதுன்னு? இழு போட்டு இப்படிப் பரசினு துணி அழுக்காயிடாது?" என்று கத்தினாள்.

ஊர்மிளா சோர்ந்து தலை கவிழ்ந்தாள்.

அவளிடமிருந்து துணிகளை வாங்கிக்கொண்டு நான் குளியலறைக்குள் சென்றேன்.

நான் குளித்து முடித்து வந்த போது, டிபன் தட்டு வைத்து, பக்கத்தில் குடிநீர்த் தம்ளர், ஒரு மூகவை ஜாடி, காப்பி பிளாஸ்க் எல்லாவற்றையும் சாப்பாட்டு மேஜையில் தயார் செய்து வைத்திருந்தான் சீனு.

சீனு 'மல்ட்டி பர்ப்பஸ்' பன்னிரண்டாவது வகுப்பு இங்கிலீஷ் மீடியத்தில் படித்துக் கொண்டிருக்கிறான். சாதாரணமாக அந்த வயதுள்ள பையன்கள் இந்த மாதிரி வேலைகளைக் கட்டாயப்படுத்தினால் கூட



வீட்டில் எவருக்கும் பணிந்து செய்ய மாட்டார்கள். ஆனால் சீனு தன் வயதுக்கும் மீறிய அடக்கத்துடன் பணி புரிகிறான் என்றால் அதற்கு எங்கள் வீட்டுச் சூழ்நிலையின் மகிமையே காரணம்! அந்த

# பரிமளா சோமேசுவர்



ஹைதராபாத்தில் ரசாயன விரிவுரையாளராக வேலை பார்க்கும் ஸ்ரீமதி பரிமளா சோமேசுவர், கடந்த ஐந்தாண்டுகளில் தெலுங்கு இலக்கியத்தில் குறிப்பிடத்தக்க சாதனைகளைப் புரிந்திருக்கிறார். பெயர்பெற்ற தெலுங்குப் பத்திரிகைகளில் சிறுகதைகள், கட்டுரைகள், நாவல்கள் எழுதியிருக்கிறார். தற்பொழுது 'ஸ்ரீமதுரா', 'விஸ்வ ரசன' ஆகிய இரு பத்திரிகைகளில் தொடர்கதைகள் எழுதிக் கொண்டிருக்கிறார். இவருடைய கதைகள் ஆங்கிலம், கன்னடம், ஹிந்தி ஆகியவற்றில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'குரோட்டன் செடிகள்' என்ற இந்தச் சிறுகதை இலக்கியப் பூங்காவுக்கு அழகூட்டும் அருமையான கதை. ❀

வகையான சூழ்நிலைக்கு நானே மையப் புள்ளி என்று அறியும்போது விரக்தி கலந்த வேதனை என்னுள் எழுகிறது.

என் அம்மா பெற்றெடுத்த செல்வங்களுள் நான் மூத்தவள். எனக்கு அடுத்தவள் விஜயா. பி. எஸ்ஸி. படித்துக் கொண்டிருக்கிறாள். . ; அடுத்து சீனு. கடைக்குட்டி ஊர்மிளா.

தந்தை ஓய்வுபெற்ற தலைமையாசிரியர்.

நான் ஒரு எம். ஏ., பி. எச்டி. வரலாற்றுத் துறை 'ரீடராக' பல்கலைக் கழகத்தில் பணியாற்றுகிறேன். என் வயது முப்பத்து நான்கு.

தற்போதைக்கு எங்கள் குடும்பத்தை நான் தான் பாதுகாக்கிறேன். அதனால்தான் வீட்டில் எல்லோரும் என்னைத் 'தேவதை'யாகக் கவனித்துக் கொள்கிறார்கள்.

அம்மா உட்பட எல்லோரும் எனக்கு. 'மரியாதை' செய்வதைக் கண்டு என்றும் போல் அன்றைக்கும் என்னுள் வெறுப்பு ஏற்பட்டது. எவரோ ஆயிரம் சாட்டிகளை ஒரே

தெலுங்கு

நேரத்தில் என் நெஞ்சில் பாய்ச்சியது போல் வெலவெலத்துப் போனேன்.

“அம்மா! நானும் உன் மகள்தானம்மா. இவர்களைப் போல் ஒரு காலத்தில் நானும் உன் மடியில் படுத்திருந்து, உன் முன்றானையைப் பிடித்துத் திரிந்து கொண்டு, உன்னிடம் வசவு வாங்கிக் கட்டிக் கொண்டவள்தானே! ஆக, இன்றைக்கு என்னை இப்படிச் ‘சிம்மாசனத்’தில் உட்கார வைத்துக் கௌரவப் படுத்துவதெல்லாம் எதற்காக? யாரோ அயலாருக்குச் செய்வதுபோல் எனக்கு எதற்கு இந்த மரியாதையெல்லாம்? எனக்குத் தேவையானதெல்லாம் உன் பாசம் அம்மா, பாசம்!” என்று அம்மாவிடம் ஒரு தடவை சொல்லி விடவேண்டும் போலிருந்தது. ஆனால் எத்தனை முறை முயன்றாலும் துக்கம்தான் என் தொண்டை அடைத்துப் போய் விடுகிறது. என் கண்களில் நீர் துளித்துக் கட்டி விடுகிறது. ஏதோ இனம் புரியாத தாழ்வு மனப்பான்மை என்னைச் சூழ்ந்து கொள்கிறது அந்தச் சமயங்களில்.

பலகாரம், காப்பி முடித்துக் கொண்டு இப்புறம் வந்தேன். அந்த வீட்டில் நான் தனித்து விடப்பட்டவள். என்னிடம் எவரும் தம் போக்கில் பேச மாட்டார்கள். பொதுவாக அப்பாவுக்குக்கூட என்னிடம் பயம் தான். இவ்வளவு வயதாகியும் எனக்குக் கல்யாணம் செய்து வைக்கவில்லையே என்று. இனி மேலும் செய்து வைக்க முடியுமா என்றும் அப்படியே இதற்குப் பிறகு யாராவது வந்து கல்யாணம் செய்து கொள்வதாக அமைந்தாலும் அதற்குப் பிறகு யார் இந்த வீட்டைப் பராமரிப்பது என்றும் அவருக்கு வேதனை. அத்துடன் அநியாயமாகத் தம் பெண்ணின் வாழ்க்கையைப் பாழ்படுத்தி விட்டதாக ஒரு குற்ற உணர்ச்சி. அதனால் அவர் என் பக்கம் ஏறெடுத்துப் பார்க்கக்கூட வெட்கப்பட்டார்.

வழக்கம்போல் அப்பாவின் அறைக்குள் சென்று அவருடைய உடல் நலம் குறித்து விசாரித்தேன். அதென்ன விந்தையோ, நான் அவருடைய அறைக்குள் நுழைந்தபோதெல்லாம் அவருடைய கையில் ஒரு புத்தகமோ, செய்தித் தாளோ தவறாமல் இருக்கும். அவருக்கு அவ்வளவாகப் படிக்கும் பழக்கம் கூடக் கிடையாதுதான். ஆனாலும் நான் ஒவ்வொரு நாளும் அவர் பக்கம் போகும் வேளையைத் தெரிந்து கொண்டு முகம் கொடுத்து என்னைப் பார்ப்பதினின்றும் தப்பித்துக் கொள்வதற்காகக் கையில் ஏதாவதொன்றை எடுத்துக் கொள்கிறார்.

அந்த விஷயம் எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும் என்று அவருக்கும் தெரியும். அதனால்தான் வெறுப்புக் கலந்த அந்த நாடகக் காட்சியை விரைவில் முடித்துவிட்டு, விசாரித்து முடித்துவிட்டு வெளியே வந்தேன்.

அதன்பிறகு தோட்டத்துக்குச் சென்றேன். என்னிடம் இந்த வீட்டில் சிநேகபூர்வமாகப் பேசுபவை இந்தப் பூச்செடிகளே!

தோட்டத்திலிருந்த ஒரு சிறு கல் திண்டின் மீது அமர்ந்தேன். என் எதிரில் இருபுறமும் இதழ் விரித்த வகை வகையான பூக்கள். நடுவில் குறுகிய பாதை. அந்தப் பாதையின் இருபுறத்தும் குரோட்டன் செடிகள். அங்கு மட்டுமல்ல, எத்தனையோ பூந்தோட்டங்களில், மண் தொட்டிகளில் பல இனத்துக் குரோட்டன் செடிகள் பலவித வண்ணங்களில் இருக்கின்றன. இதழ் விரித்த மலர்ச் செடிகளுக்கிடையே எவ்வளவு அழகாகத் தென்பட்டாலும் அந்தக் குரோட்டன் செடிகள் என்னவோ வெறிச்சோடித்தான் கிடக்கின்றன.

அந்தக் குரோட்டன் செடிகளைப் பார்க்கும் போது என்னுள் எதற்காகவோ ஒரு வகை பயமும், இரக்கமும் உருவாகின்றன. என் வாழ்க்கைக்கும் அவற்றுக்கும் ஏதோ குறிப்பறியாத் தொடர்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது; என்னுள் நான் தாங்க முடியாத ஏதோ ஓர் உணர்ச்சி அந்தக் குரோட்டன் செடிகளில் பிரதிபலிப்பதாக உணர்கிறேன்.

அப்படியே சூனிய மனத்துடன் எவ்வளவு நேரம் உட்கார்ந்து விட்டேனோ? பத்தாம் நாள் சந்திரன் தென்னைக் கீற்றுக்களினூடே மெல்லத் தோட்டத்துக்குள் புகுந்தான். அந்த ஒளிக் கதிர்கள் மிருதுவாக என் கன்னத்தில் பட்டுப் பரவசம் கொள்ளச் செய்தன. ஏதோ ஒரு விசித்திரமான உணர்ச்சி என் உடல் அணு ஒவ்வொன்றையும் கிளர்ந்தெழச் செய்தது.

பகலெல்லாம் பல்கலைக் கழகத்தில் மாணவ மாணவியர், துணை ஆசிரியர்கள் ஆகியோரிடையே கழிவதனால் என் சொந்தப் பிரச்னைகள், தீராத கோரிக்கைகள் அனைத்தையும் மறந்து விடுகிறேன். ஆனால் வீட்டுக்கு வந்தால் இப்படித் தனியே உட்கார்ந்தவுடன் ஏதேதோ சிந்தனைகள் என்னைச் சூழ்ந்து கொள்கின்றன. குளிர்ந்த மாலை வேளைகளில் தனிமையில் உட்கார்ந்து விட்டால் என் மனம் வசமிழந்து முறை மீறி விடுகிறது. என் உடம்பு ஏதோ இனிய அநுபவத்துக்காக ஏங்கித் தவிக்கிறது.

என்னுள் எழுந்த வேதனை என்னால் பொறுக்கமுடியாத அளவுக்குத் தீவிரமடைந்தவுடன் எழுந்து உள்ளே சென்றேன். என்னை நான் மறக்கும் முயற்சியில் சீனு, விஜயா படிக்கும் அறைக்குள் நுழைந்தேன்.

விஜயா என்றாலே எனக்கு அந்தரங்கத்தில் காரணம் தெரியாத பயம். அவள் மகா அழுத்தக்காரி; தான்தோன்றி. தன்போக்குத்தான் அவளுக்கு. அந்தக் குணங்கள் என்னிடம் இல்லாததனாலோ என்னவோ, அவளிடம் எனக்கொரு வெறுப்பு.

அத்துடன் அவளுக்குத் தளதளக்கும் இருபது வயது. நிறை வாலிபம் தொடுத்தமைத்த அவளது உடலின் வளைவுகள், பால் ஏடு நிகர்த்த அவளுடைய கன்னங்கள் என் மீது காரத்தை வாரிப் பூசி எரிச்சல் உண்டாக்கின. எப்படிப் பார்த்தாலும், எந்தக் கோணத்தில் நின்றிருந்தாலும், எந்தப் புடவையைக் கட்டிக் கொண்டிருந்தாலும் என் கண்ணுக்கு அவள் அழகாகத்தான் தோன்றினாள். அதனால்தான் அவள் என்றால் உடம்பெரிச்சல் எனக்கு.

உண்மையில் ஒரு வகையில் விஜயாவை விட நான்தான் அழகு. ஆனால் என் அழகில் ‘உயிர்’ இல்லை. பிறரைக் கவரும் சக்தி இப்போது என்னிடம் இல்லை.

நேரடியாகச் சொன்னால் விஜயாவின் அழகு அவளுடைய வயதில்தான் அடங்கியிருக்கிறது. கனவு காணும் கண்கள், பூரித்த அவயவங்கள், அனுபவங்கள் ஏதும் கண்டறியாத மருட்சி, அனுபவிக்கத் துடிக்கும் நெஞ்சின் இளமையைப் பறைசாற்றும் மார்பகங்கள் — அது ஒரு வியப்பால் நிறைந்த பருவம். ஒரு காலத்தில் நானும் அத்தகைய பருவத்தில் இருந்தவள்தான் !

ஆனால் என்னுடையதைப் போல் விஜயாவின் வாழ்க்கை பாழ்படாது. பி. எஸ்ஸி. தேறியவுடன் அவளுக்குத் திருமணம் செய்து முடித்துவிட வேண்டும் என்கிறார் அப்பா.

எனக்குக்கூட பி. ஏ. தேறியவுடன் அப்பா திருமணம் செய்து வைத்திருந்தாரானால் நான் இன்றைக்கு என் சொந்தத் தங்கையைப் பார்த்துப் பொறாமைப்படும் அவல நிலைக்கு வந்திருக்க மாட்டேன். பி. ஏ. முடித்ததும் எம். ஏ. படிக்க வேண்டுமென்றேன். முதல் குழந்தை என்று செல்லம் கொடுத்து என் போக்கில் விட்டு விட்டார் அப்பா. அதற்குப் பிறகு பி. எச்டி. வாங்க வேண்டும் என்று அடம் பிடித்தேன். அப்பா சரி என்று தலையசைத்தார். நான் கனவு கண்டது போலவே நான்காண்டுகளில் 'டாக்டரேட்' வாங்கினேன். அப்போது என் வயது இருபத்தொன்பதைத் தாண்டிக் கொண்டிருந்தது. அப்பா முயன்று சம்பந்தங்களைத் தேடி அலுத்தும் எனக்குத் திருமணமாகவில்லை. அந்த அலைச்சலிலேயே அப்பாவின் உடலும் உள்ளமும் நலிந்து போயின. மறு முயற்சியாக என்னை வேலையில் சேர்த்து விட்டார். நாளாவட்டத்தில் எங்கள் வீட்டு விவகாரங்கள் எல்லாம் என் சம்பளத்தை அடிப்படையாகக் கொண்டே அமைந்தன. இரத்தத்தையும் மாமிசத்தையும் பகிர்ந்தளித்த பெற்றோர்களிடம்கூடத் தன்னலம் உருவெடுத்தது. அந்தத் தன்னலத்தின் பின்னணியில் அமைந்த முறையீடுகளும் தவிர்க்கப்படாதனவாயின. எது என்னவானால் என்ன, இறுதியில் பலியானது என் வாழ்க்கைதான்.

நான் அறைக்குள் நுழைந்தபோது சீனு நாற்காலியில் அமர்ந்தபடி முனைப்புடன் படித்துக் கொண்டிருந்தான். குனிந்த தலை நிமிராமல். சற்று உன்னிப்பாகக் கவனித்தால் எவரும் எளிதில் புரிந்து கொள்ளலாம், அது வெறும் ஏமாற்றுத்தனம் என்று. அவனுடைய கள்ளத்தனமெல்லாம் என் மதிப்பைச் சம்பாதித்து, அதன் மூலமாக ஓர் ஐந்து ரூபாயைச் சம்பாதித்துத் தன் நண்பர்களுடன் சவடாலாக ஹோட்டலுக்கும், சினிமாவுக்கும் போக வேண்டும் என்பதே. மாதத்துக்கு ஒரு முறை அவனுக்கு அந்த 'மாமூல்' செலுத்துவது என் வழக்கம். மூந்தா நாள்தான் முதல் தேதி.

''ஏண்டா சீனு, இங்கிலீஷ் பேப்பர் தந்துட்டாங்களா ?'' என்று கேட்டேன்.

''தந்தாச்சு அக்கா! நூத்துக்கு அறுபத்து மூணு மார்க்கு'' என்று கர்வத்துடன் பதிலளித்தான்.

நான் எங்கே நம்ப மாட்டேனோ வென்று மேஜை மீது தயாராக வைத்திருந்த விடைத்தாளை எடுத்துக் காண்பித்தான்.



ஒரு வேடிக்கை

இந்தப் படத்தை இசைத் தட்டுக்களில் அடிக்கடி பார்த்திருப்பீர்கள். இதில் இடம் பெற்றுள்ள நாய் ஆணா அல்லது பெண்ணா ?

உங்களால் கண்டு பிடிக்க முடியுமா?

(15ம் பக்கம் பாருங்கள்)

அவன் எவ்வளவு குறும்புக்காரனாயிருந்தாலும் படிப்பில் மட்டும் மகா சுட்டி. அதனால்தான் அவன் என்ன கேட்டாலும் நான் மறுப்பதில்லை.

அதற்குப் பிறகு விஜயா இருந்த பக்கம் கண்களைத் திருப்பினேன். எப்போது அவளுடன் பேச நேர்ந்தாலும் ஏதோ தாழ்வு மனப்பான்மை என்னைப் பற்றிக் கொள்கிறது. அவள் என்னை நேருக்கு நேர் பார்த்தால் எனக்கு வெட்கமாக, திகிலாக இருக்கிறது. நிர்மலமான அவளுடைய கண்களைப் பார்க்கும் போது கரு வளையம் சூழ்ந்த என் கண்கள் நினைவுக்கு வந்து வேதனையூட்டுகிறது. அதுவும் போக, அவள் என்னைப் பார்க்கும் போதெல்லாம் பாதி நரைத்த என் கூந்தலையும் இறுக்கம் விட்டுத் தளர்ந்துபோன என் உடம்பையும் கேலி செய்வது போன்ற பிரமை எனக்கு. அது வெறும் பிரமை மட்டுமல்ல. உண்மைதான் — அவளுடைய மனப்போக்கு எனக்குத் தெரியாதா, என்ன !

விஜயா கட்டிலில் படுத்துக் கொண்டு சுவரில் சாத்தியிருந்த தலையணையில் தலையைச் சாய்த்துக் கொண்டு அலட்சியமாகப் பாடப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தாள். நான் வந்திருப்பது தெரிந்தும் 'அதனால் தனக்கென்ன' என்ற போக்கில் இருந்தது என்னை வேதனைப்படுத்தியது.

ஆனாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தலை நிமிர்த்திக் கம்பீரமாக அவளைக் கேட்கலானேன்:

''உங்க பேப்பரெல்லாம் தந்துட்டாங்களா, விஜயா ?''

''இன்னிக்கு பாட்டனி, கெமிஸ்ட்ரி பேப்பர் தந்தாங்க.''

''மார்க் எப்படி வாங்கியிருக்கே ?''

''பாட்டனியில் நாற்பது சதம்; கெமிஸ்ட்ரியில் இருபத்து மூன்று சதம்.''

''ஏன் கெமிஸ்ட்ரியில் மார்க் குறைஞ்சது?''

''பரீட்சைக்குச் சரியாப் படிக்கலே.''

''படிக்கலேங்கிறது தெரிஞ்சதான் இருக்கு. எதுக்குப் படிக்கலேன்னுதான் கேட்கிறேன்?'' சற்று உரத்த குரலிலேயே கேட்டேன்.

சடக்கென்று எழுந்து உட்கார்ந்தாள் விஜயா. ''எதுக்குப் படிக்கலேன்னு என்ன அர்த்தம் ? படிக்கத் தோணலே, படிக்கலே. அவ்வளவுதான். அதுவுமில்லாமே கெமிஸ்ட்ரினாலே எனக்குப் 'படுபோர்'! எங்க லெக்சரர் சொல்லித் தர்றது அவங்களுக்கே சரியாப் புரியாது. போர்டில் ஒரு 'ஈக்வேஷன்' எழுதினால் அதை 'பாலன்ஸ்' பண்றதுக்கு அரை மணி நேரம் உதைக்கும் எங்க லெக்சரருக்கு. அதுவும் தவிர, எங்களுக்கு கெமிஸ்ட்ரி தியரி வகுப்பு எப்பொழுதும் சாயங்காலம் கடைசி

பிரியட்தான் இருக்கும். களைச்சுப் போய் இருக்கிறதனாலே எல்லாருக்கும் எப்போ வீட்டுக்குப் போகலாம்னு தோணுமே ஒழிய, பாடத்தைக் கவனிக்கத் தோணாது.'' மார்க் சரியாக வாங்காததற்குத் தன் பொறுப்பு எதுவும் கிடையாது என்று திட்டவட்டமாகக் கூறி விட்டாள் விஜயா.

அவள் சொன்ன காரணங்கள் உண்மையாகவே இருக்கலாம். ஆனால் அவள் அப்படிப் பானையைப் போட்டு உடைத்துச் சிதற அடித்தாற் போல் உண்மையைப் பேசியது என்னை அவமானப்படுத்தியது போல் உணர்ந்தேன். அந்த வயதுப் பெண்ணுக்கு அவ்வளவு தீவிர முரட்டுக் குணம் இருப்பது நல்லதுக்கு அறிகுறியல்ல என்பது என் கருத்து. மார்க்குகள் இன்னும் குறைவாக வாங்கியிருந்த போதிலும் சரி, விடைத் தாள்கள் இன்னும் கைக்கு வரவில்லை என்று அவள் பொய் சொல்லி யிருந்தாலும் எனக்கு அவ்வளவு கோபம் வந்திருக்காது.

''படிக்கிறதுக்குத் துப்பில்லாமே ஏதேதோ காரணம் சொல்லக் கத்துக்கிட்டிருக்கே. முதல்லே உனக்குப் புத்தி ஒரு போக்கிலே இருந்தாத்தானே படிப்பு வரும்? எவ எந்தப் புடவை கட்டியிருக்கிறா, எந்த லெக்சரர் 'ஹேர் ஸ்டைல்' அழகா இருக்கு, எந்தத் தியேட்டரிலே என்ன படம்? இதுதானே விமன்ஸ் காலேஜிலே நீங்க படிச்சிக்கிறது! கேட்டால் லெக்சரரையே நொள்ளை சொல்லறே?'' என்று இரைந்துவிட்டு, எங்கே எதிர்த்துப் பேசிவிடுவாளோ என்ற பயத்துடன், சடாரென்று வெளியேறி விட்டேன்.

இரவு சாப்பாடானதும் வழக்கம்போல் ஆங்கில நாவல் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு கட்டிலில் சாய்ந்தேன். கட்டவிழ்க்கும் குதிரையாக ஓட்டம் எடுக்கும் மனத்தை ஒரு கட்டுக்குள்வைக்க ஓய்வு நேரங்களில் இலக்கியங்கள் படிப்பதைப் பழக்கமாக்கிக் கொண்டு விட்டேன். ஆனால் நான் படிக்கும் புத்தகங்களில் கூட நான் எவற்றை மறக்க வேண்டுமென்று முயல்கிறேனோ அதே காதல், காமம், நிலா, இரவுகள், மல்லிகை போன்ற எல்லாமே இருந்தன. அனுபவங்களறியாத நான் அந்தப் பாத்திரங்களுடன் ஒன்றி அதனால் கிடைக்கும் ஒருவித விசித்திரமான இன்பத்தை அனுபவிக்கப் பழகிக் கொண்டேன்.

பொழுது விடிந்தது. எப்போதும்போலவே பற்பசை முதற்கொண்டு எல்லாவற்றையும் சீனு, ஊர்மிளா எடுத்துக் கொடுக்க வேலைகளை முடித்து, சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு ஒன்பதரை மணிக்குப் பல்கலைக் கழகம் செல்வதற்காக பஸ் ஸ்டாப்பை அடைந்தேன்.

அங்கு எனக்குச் சற்றுத் தொலைவில் என்னிடம் படிக்கும் இரண்டு பல்கலைக் கழக மாணவிகள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் என்னைப் பார்த்ததும் வணக்கம் தெரிவித்தார்கள். என் அருகில் வந்து நின்று கொண்டார்கள்.

என் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் எண்ணத்தில் அவர்களுடன் அதிகமாகப் பேச்சுக் கொடுக்கவில்லை.

பஸ் வந்தது.

பஸ்ஸில் இருந்தவர்களில் பெரும்பாலோர் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர்களே. அதிலிருந்த பெண்கள் எல்லோரும் வகை வகையாகக் கத்தரித்துத் தைக்கப்பட்ட ப்ளவுஸ்கள், வண்ண வண்ணச் சேலைகள், வெவ்வேறு வகையான 'ஹேர் ஸ்டைல்'கள் ஆகியவற்றுடன் கண்ணுக்கு நிறைவாக அமர்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருசிலரைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் திருமணம் ஆகாதவர்களே. அவர்களில் எழுபத்தைந்து சதம் இனியும் கூடத் திருமணம் ஆவதற்கு வாய்ப்பில்லை என்று நிச்சயமாகக் கூறத் தக்க வயதில் இருந்தார்கள். இந்த ஹைதராபாத்தில் மட்டுமில்லை — பாரத நாட்டில் உள்ள எல்லா நகரங்களிலும் பட்டணங்களிலும் இவ்வாறு வயது மீறிய திருமணமாகாதவர்களின் எண்ணிக்கை அதிகமாகவே இருக்கிறது. இதற்குக் காரணம் இன்றைய படித்த இளைஞர்களிடையே நாளுக்கு நாள் பெருகி வரும் வரதட்சிணைத் தாகமெனச் சிலர் சொல்கிறார்கள்; படித்து வேலை பார்க்கும் பெண்களைக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டால் பின்னர் குடும்பத்தைப் பராமரிப்பது எப்படி என்று அயர்ந்து விடும் மத்தியதரக் குடும்பத்துப் பெற்றோர்களின் தன்னலம்தான் காரணம் என்று சிலர் கூறுகிறார்கள்; உண்மையில் சாரதாச் சட்டம் அமுலாக்கப்பட்ட தேதியே சரியல்லவென்றும் அதனால்தான் நம் நாட்டில் 'முதிர் கன்னி'களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டிருக்கிறது என்றும் வாதிக்கிறார் ஒரு சோதிட விற்பன்னர்.

எது எப்படி இருந்தாலும் ஒரு காலத்தில் பால்ய விதவைகள் இருந்ததைப் போல் இந்நாட்களில் வயது மீறிய திருமணமாகாக் கன்னிகள் சமூகத்தின் இதயத்தைப் பாதிக்கும் பிரச்னைகளாக அமைந்துவிட்டார்கள்.

வெளியே வந்தால் கலகலப்பாக எந்த மனக் குறையும் இல்லாதது போல் தென்படுவோரெல்லாம் மனத்துக்குள் துன்பக் கடலின் எத்தனை ஆழத்தில் அமிழ்ந்து அவதிப்படுகிறார்கள் என்று அவர்களில் ஒருத்தியான எனக்கு நன்றாகத் தெரியும். அவ்வப்போது பஸ்ஸில் ஜன்னலுக்கு அருகே உட்கார்ந்து கொண்டு ரோட்டில் போகும் தம்பதிகளைப் பார்த்ததும் அவர்களுடைய முகங்களில் அலைபாயும் கருநிழல்களுக்குக் கணக்கே இல்லை.

கற்பிதமாய் அமைந்த வேடங்களைப் போர்த்திக் கொண்டு தங்களுக்குள் கனன்று கொண்டிருக்கும் எரிமலைகளைக் குளிர்வித்துக் கொண்டு செயற்கை வாழ்வு நடத்திக்கொண்டிருக்கும் இந்தத் துர்ப்பாக்கியவதிகள்மீது இரக்கப்படுவோர் யார்?

பஸ்ஸுக்குள் உட்கார்ந்திருக்கும்போது என்னுள் ஒவ்வொரு நாளும் இதே சிந்தனைதான்.

பஸ் கலைக் கல்லூரி முன்பு நின்றது. என் சிந்தனைகளும் நின்றன.

மீண்டும் வகுப்புகள், மாணவியர், துணை ஆசிரியர்கள் — அது ஒரு சந்தடி.

**மா**லையில் வீடு திரும்பியபோது என்றைக்கும் இல்லாதபடி வீடெல்லாம் ஒரே அமைதி. வழக்கத்துக்கு மாறான அமைதி என் நெஞ்சத்தை ஊடுருவிப் பாய்ந்தது.

என்னைப் பார்த்ததும் சமையலறை நிலைப் படியில் உட்கார்ந்திருந்த அம்மா உரக்கப் புலம்பத் தொடங்கி விட்டாள். நாற்காலியில் கால் மடித்து உட்கார்ந்து கொண்டிருந்த அப்பா உடனே எழுந்து தம் அறைக்குள் சென்று முடங்கிவிட்டார்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. "அம்மா, என்ன நடந்தது? ஏன் அழறே?" என்று ஆத்திரத்துடன் கேட்டேன்.

"இன்னும் என்னடி நடக்கணும்? அந்தத் துக்கிரி குடியை அழிச்சிட்டாளேடி!" என்று மீண்டும் ஒப்பாரியில் இறங்கி விட்டாள்.

விவரத்தைச் சொல்லாமல் அழத் தொடங்கிய அம்மாவைப் பார்த்ததும் ஏற்கனவே ஆத்திரத்துடனிருந்த எனக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. "டேய், சீனு!" என்று உரக்கக் கூவினேன்.

சீனு அறைக்குள்ளிருந்து வெளிவந்தான், தலையைக் குனிந்தபடியே.

"என்னடா நடந்தது இங்கே?" எரிச்சலுடன்தான் கேட்டேன்.

"ஆமாம்.... விஜயா அக்கா..." என்று சொல்ல வந்ததைத் துண்டித்து நிறுத்தினான், அம்மா இருந்த பக்கம் திகிலுடன் பார்த்தபடி.

"என்ன ஆச்சுடா விஜயாவுக்கு? சொல்லித் தொலையேன்!" வெறியில் கத்தினேன்.

"ம்...பிரகாச ராவின் இரண்டாவது மகன் வேணுகோபால் இல்லே...அவனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாளாம் விஜயா அக்கா. அவங்க ரெண்டு பேருக்கும் ஒரு மாதத்துக்கு முன்னாடியே ரிஜிஸ்தர் கல்யாணம் முடிஞ்சு போச்சாம். வேணுவுக்குத் திருப்பதியில் வேலை கிடைச்சிருக்கு. அதனாலே திருப்பதி போறேன்னுட்டு கடிதாக எழுதி வச்சுட்டுப் போயிருக்கா விஜயா."

சிறிது நேரம் விக்கித்து நின்றுவிட்டேன், சீனுவின் வார்த்தைகளைக் கேட்டு.

அவன் கூறியதைக் கேட்டு எனக்கு வியப்புணர்ச்சி ஏதும் தோன்றவில்லை. இது மாதிரி ஏதோ ஒன்று நடக்கும் என்பதை முன்கூட்டியே அறிந்திருந்தேன். ஆனாலும் எதிர்பார்த்திருந்தது நிகழ்ந்திருந்தபோதிலும் என் அகம் மெய்யானதைத் தாங்கிக்கொள்ளும் வலுப் பிறக்கவில்லை.

பேசுவதற்கு ஒன்றுமில்லாது என் அறைக்குச் சென்றேன். குளித்து முடித்தேன். துணிமணிகளை நானே தேடி எடுத்துக்கொண்டேன். அன்றைக்கு டிபன் தயாரானதற்கு அறிகுறி ஏதும் தென்படவில்லை. நானே ஸ்டவ் பற்ற வைத்துக் காப்பி தயாரித்துக் குடித்தேன். எவரும் எனக்குச் 'சேவை' செய்ய முன்வராததால் அன்று மனம் நிம்மதியாக — மகிழ்ச்சியாக இருந்தது.

வீடெல்லாம் ஒரே அமைதி. எவரிடத்தும் உற்சாகம் இல்லை. எனக்கு மட்டும் என்ன காரணத்தினாலோ சுமை இறங்கியது போன்ற உள்ளுணர்ச்சி. இன்று வரையில் கனன்று கொண்டிருந்த எரிமலை இன்றைக்கு வெடித்துப் பொடியாவது போல் எனக்குள் ஒரு பயங்கர அமைதி உருவெடுத்தது.

உறுத்திக் கொண்டு என் கண்ணில் தூசியாய் இருந்து வந்த விஜயாவைப் பார்த்துக் கொண்டிருக்கும் அவலநிலை இனிமேல் இல்லை. அதனால்தான் என்னில் ஒருவகையான நிறைவு பிறந்தது.

விடை :

இசைத்தட்டுக் கம்பெனியின் பெயரை ஊன்றிக் கவனியுங்கள். 'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்' அல்லவா? அதில் இடம் பெற்றுள்ள நாய் ஆணாக இருப்பதால்தானோ 'ஹிஸ்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்? -ரூபி

என் அறைக்குள் சென்றேன். பீரோவில் பதித்திருந்த கண்ணாடி முன் நின்றேன். வழக்கம்போல் கண்ணாடியைப் பார்த்த எனக்கு என் பிரதிபிம்பம் எள்ளி நகையாடுவதுபோல் தோன்றியது.

"உன்னால் செய்ய முடியாததை, நீ நிறைவேற்ற வேண்டுமென்று நினைப்பட்ட ஒரு வேலையை விஜயா செய்து முடித்துவிட்டாள். அதனாலேயே அவளுடைய வாழ்க்கை நிறைவடைந்துவிட்டது. உனக்குள் அந்தத் துடிப்பு, தைரியம், கெட்டிக்காரத்தனம் இல்லை. அதனால்தான் நீ இப்படி மூளித்தனமாய் நிற்கிறாய். உன் வாழ்க்கையில் இனி வசந்தம் இல்லை" என்று கண்ணாடிக்குள்ளிருந்த பிரதிபிம்பம் எக்காளமிட்டது.

என் பிரதிபிம்பத்தையே என்னால் பார்க்க முடியாது போயிற்று. அங்கிருந்து நழுவித் தோட்டத்துப் பக்கம் சென்றேன்.... இந்தத் தடவை அப்பாவிடம் பேச்சுக் கொடுக்காமலேயே நேராகப் போய்க் கல் திண்டின் மீது உட்கார்ந்தேன். என் எதிரில் இரு புறங்களிலும் இதழ் விரித்த வகை வகையான பூக்கள். நடுவே குறுகிய நடைபாதை. அந்தப் பாதையின் இருபுறத்தும் குரோட்டன் செடிகள். வண்ண வண்ண இலைகளுடன்கூடிய அந்தக் குரோட்டன் செடிகளைப் பார்த்தபோது காலையில் பஸ்ஸில் பார்த்த பெண்கள் நினைவுக்கு வந்தார்கள். பூ மலர்ந்த செடிகளுக்கிடையே அந்தக் குரோட்டன் செடிகள் ஏன் வெறிச்சென்று தோன்றுகின்றனவென்று எனக்குப் புரிந்தது. செடிக்கு எப்படிப் பூக்கள், காய்கள் அழகைத் தருகின்றனவோ, அப்படித்தான் பெண்களுக்குத் திருமணம், தாய்மை ஆகியவை அழகையும், நிறைவையும் தருகின்றன. மென்மேலும் அலங்கரித்துக் கொள்வதைத் தவிர வாழ்க்கையின் அதிமுக்கியமான அந்த இன்ப அனுபவங்களினின்றும் ஒதுக்கப்பட்ட நாங்கள் குரோட்டன் செடிகளுக்கு ஒப்பானவர்களே!

மீண்டும் விடிந்தது. வழக்கம்போல் பஸ்ஸில் பல்கலைக் கழகத்துக்குப் போவதும் திரும்புவதும்! வீட்டுக்குத் திரும்பி வந்ததும் வீட்டு விஷயங்களைப் பற்றிய நினைவுகள். "அப்பாவினுடைய மூக்குக் கண்ணாடி உடைந்து போயிற்று. புதிதாக வாங்க வேண்டும். அம்மாவினுடைய ஜாக்கெட் கிழிந்துவிட்டது; நான்கு துணிகளாவது வாங்க வேண்டும்; சீனுவினுடைய எக்ஸ்கர்ஷனுக்கு நாற்பது ரூபாய். விஜயாவுக்கு — சொன்னாற்போல அவளுக்கு நான் வாங்கித் தர வேண்டியது ஒன்றுமில்லை."

தமிழாக்கம்: இளம் பாரதி



இருமலும் ஜலதோஷமும் உங்களைப் பலவீனப்படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியத்துடனும் சக்தியுடனும் திகழுங்கள்

இருமலும் ஜலதோஷமும் உங்களைப் பலவீனப்படுத்தி நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், உங்களை இதர நோய்கள் பாதிக்கக்கூடும். எனவே சிவப்பு லேபிள் கொண்ட வாடர்பரீஸ் காம்பவுண்ட் ஒழுங்காக சாப்பிட்டு வாருங்கள். பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு நோய்த்தடுப்புச் சக்தியை அளிக்கும் பல ஊட்டப் பொருள்கள் அடங்கியது சிவப்பு லேபிள் வாடர்பரீஸ். அதிலுள்ள 'க்ரியோஸோட்' மற்றும் 'குவாகால்' இருமலிலிருந்தும் ஜலதோஷத்திலிருந்தும் துரிதநிவாரணம் அளிக்கின்றன. இக் காரணங்களாலே, சிவப்பு லேபிள் வாடர்பரீஸ், சக்தியையும் ஆரோக்கியத்தையும் காப்பாற்றுவதில் ஒப்பற்றதாக இருக்கிறது.




**வர்டர்பரீஸ் காம்பவுண்ட்**
**மிகவும் நம்பப்படும் டானிக்**

வார்னர்-லாம்பெர்ட்டின் சிறந்த தயாரிப்பு



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நாற்பத்தாறாம் அத்தியாயம்

## வானதி சிரித்தாள்!

நந்தி மண்டபத்தில் அமர்ந்து இளவரசரும் குந்தவை தேவியும் பேசிக் கொண்டிருந்தபோது, — வானதி தூண் ஓரமாக நின்று கேட்டுக் கொண்டிருந்த போது, — கால்வாயில் படகில் காத்துக் கொண்டிருந்த பூங்குழலிக்கும் சேந்தன் அமுதனுக்கும் முக்கியமான சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது.

''அமுதா! ஒன்று உன்னை நான் கேட்கப் போகிறேன். உண்மையாகப் பதில் சொல்வாயா?'' என்றாள் பூங்குழலி.

''உண்மையைத் தவிர என் வாயில் வேறு ஒன்றும் வராது, பூங்குழலி! அதனாலேதான் நாலு நாளாக நான் யாரையும் பார்க்காமலும் பேசாமலும் இருக்கிறேன்'' என்றான் அமுதன்.

''சில பேருக்கு உண்மை என்பதே வாயில் வருவதில்லை. இளவரசருக்கு ஓலை எடுத்துக் கொண்டு இலங்கைக்குப் போனானே, அந்த வந்தியத் தேவன் அப்படிப்பட்டவன்.''

''ஆனாலும் அவன் ரொம்ப நல்லவன். அவன் யாரையும் கெடுப்பதற்காகப் பொய் சொன்னதில்லை.''

''உன்னைப் பற்றி அவன் ஒன்று சொன்னான். அது உண்மையா பொய்யா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.....''

''என்னைப் பற்றி அவன் உண்மையில்லாததைச் சொல்வதற்குக் காரணம் எதுவும் இல்லை. இருந்தாலும், அவன் சொன்னது என்னவென்று சொல்!''

''நீ என்னைப் பற்றி மிகவும் புகழ்ந்து பேசியதாகச் சொன்னான்.''

''அது முற்றும் உண்மை.''

''நீ என்னிடம் ஆசை வைத்திருப்பதாகச் சொன்னான். என்னை நீ மணந்து கொள்ள விரும்புவதாகச் சொன்னான்.''

''அவ்விதம் உண்மையில் அவன் சொன்னானா?''

''ஆம், அமுதா!''

''அவனுக்கு என் நன்றியைத் தெரிவிக்க வேண்டும்.''

''எதற்காக?''

''நானே உன்னிடம் என் மனத்தைத் திறந்து தெரிவித்திருக்க மாட்டேன்; அவ்வளவு தைரியம் எனக்கு வந்திராது. எனக்காக உன்னிடம் தூது சொன்னான் அல்லவா? அதற்காக அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்.''

''அப்படியானால் அவன் சொன்னது உண்மைதானா?''

''உண்மைதான், பூங்குழலி! அதில் சந்தேகமில்லை.''

''உனக்கு ஏன் என்னிடம் ஆசை உண்டாயிற்று, அமுதா?''

''அன்பு உண்டாவதற்குக் காரணம் சொல்ல முடியுமா?''

''யோசித்துப் பார்த்துச் சொல்லேன். ஏதாவது ஒரு காரணம் இல்லாமலா இருக்கும்?''

''அன்பு ஏன் ஏற்படுகிறது, எவ்வாறு ஏற்படுகிறது என்று இதுவரை உலகில் யாரும் கண்டுபிடித்துச் சொன்னதில்லை, பூங்குழலி!''



"ஒருவருக்கொருவர் அழகைப் பார்த்து ஆசை கொள்வதில்லையா ?"

"அழகைப் பார்த்து ஆசை கொள்வதுண்டு: மோகம் கொள்வதும் உண்டு. ஆனால் அதை உண்மையான அன்பு என்று சொல்ல முடியாது. அது நிலைத்திருப்பதும் இல்லை. சற்று முன் வந்தியத்தேவன் என்று சொன்னாயே, அவன் என்னைப் பார்த்தவுடன் என்னிடம் சிநேகம் கொண்டுவிட்டான். அவனுக்காக நான் என் உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்தேன். என் அழகைப் பார்த்தா என்னிடம் அவன் சிநேகமானான் ?"

"ஆனால் உன் சிநேகிதன் என் அழகைப் பற்றி ரொம்ப, ரொம்ப வர்ணித்தான் இல்லையா?"

"உன் அழகைப் பற்றி வர்ணித்தான். ஆனால் உன்னிடம் ஆசை கொள்ளவில்லை. பழுவூர் ராணியின் அழகைப் பற்றி நூறு பங்கு அதிகம் வர்ணித்தான். அவளிடமும் அவன் அன்பு கொள்ளவில்லை."

"அதன் காரணம் எனக்குத் தெரியும்."

''அது என்ன ?''

''அதோ இளவரசருடன் பேசிக் கொண்டிருக்கும் இளையபிராட்டியிடம் அந்த வீரனின் மனம் சென்று விட்டது தான் காரணம்.''

''இதிலிருந்தே அழகுக்கும் அன்புக் கும் சம்பந்தமில்லையென்று ஏற்பட வில்லையா ?''

''அது எப்படி ஏற்படுகிறது? இளைய பிராட்டியைவிட நான் அழகி என்று சொல்லுகிறாய் ?''

''அதில் என்ன சந்தேகம், பூங்குழலி? பழையாறை இளைய பிராட்டியைக் காட்டிலும், அதோ தூண் மறைவில் நிற்கும் கொடும்பாளூர் இளவரசியைக் காட்டிலும், நீ எத்தனையோ மடங்கு அழகி. மோகினியின் அவதாரம் என்று பலரும் புகழும் பழுவூர் இளைய ராணி யின் அழகும் உன் அழகுக்கு இணை யாகாது. இப்படிப்பட்ட தெய்விகமான அழகுதான் எனக்குச் சத்துருவாயிருக் கிறது. அதனாலேயே என் மனத்தில் பொங்கிக் குமுறும் அன்பை என்னால் உன்னிடம் வெளியிடவும் முடியவில்லை. வானுலகத் தேவர்களும் மண்ணுலகத் தின் மன்னாதி மன்னர்களும் விரும்பக் கூடிய அழகியாகிய நீ எனக்கு எங்கே கிட்டப் போகிறாய் என்ற பீதி என் மனத்தில் குடிகொண்டிருக்கிறது!''

பூங்குழலி சற்று யோசனையில் ஆழ்ந் திருந்துவிட்டு, ''அமுதா! உன் பேரில் எனக்கு ஆசை இல்லை என்று நான் சொல்லி விட்டால், நீ என்ன செய் வாய் ?'' என்று கேட்டாள்.

''சில நாட்கள் பொறுமையுடன் இருப்பேன். உன் மனம் மாறு கிறதா என்று பார்ப்பேன் ?''

''அது எப்படி மாறும் ?''

''மனிதர்களின் மனசு விசித்திர மானது. சில சமயம் நம் மனத்தின் அந்தரங்கம் நமக்கே தெரியாது. புறம் பான காரணங்களினால் மனம் பிரமை யில் ஆழ்ந்திருக்கும். பிரமை நீங்கியதும் உண்மை மனம் தெரிய வரும்....''

''சரி; பொறுத்திருந்து பார்ப்பாய். அப்படியும் என் மனத்தில் மாறுதல் ஒன்றும் ஏற்படா விட்டால்?....''

''உன்னிடம் வைத்த ஆசையை நான் போக்கிக் கொள்ள முயல்வேன்.''

''அது முடியுமா?''

''முயன்றால் முடியும். கடவுளிடம் மனத்தைச் செலுத்தினால் முடியும். நம் பெரியோர்கள் பகவானிடம் பக்தி செலுத்தித்தான் மனத்தைக் கட்டுப் படுத்திக் கொண்டார்கள்....''

''அமுதா! நீ என்னிடம் வைத்திருக் கும் அன்பு உண்மையான அன்பு என்று எனக்குத் தோன்றவில்லை.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய் ? உண்மை அன்பின் அடையாளம் என்ன ?''

''என்னிடம் உனக்கு உண்மை அன்பு இருந்தால், நான் உன்னை மறுதளித்த தும் என்னைக் கொன்றுவிட வேண்டும் என்று உனக்குத் தோன்றும். உனக்குப் பதிலாக நான் வேறு யாரிடமாவது அன்பு வைப்பதாகத் தெரிந்தால் அவரையும் கொன்றுவிட வேண்டும் என்று நீ கொதித்து எழுவாய்....''

''பூங்குழலி! நான் கூறியது தெய்விக மான ஸத்வ குணத்தைச் சேர்ந்த அன்பு. நீ சொல்வது அசுர குணத்துக் குரிய ஆசை. பைசாச கணத்துக் குரியது என்றும் சொல்லலாம்....''

''தெய்விகத்தையும் நான் அறியேன்; பைசாச இயல்பையும் நான் அறியேன். மனித இயற்கைதான் தெரியும். அன்பு காரணமாக இன்பம் உண்டாக வேண் டும். அதற்குப் பதிலாகத் துன்பம் உண்டானால் எதற்காக அதைச் சகித் திருப்பது? நாம் ஒருவரிடம் அன்பு செய்ய அவர் பதிலுக்கு நம்மிடம் அன்பு செய்யாமல் துரோகம் செய்தால், எதற் காக நாம் பொறுத்திருக்க வேண்டும்? பழி வாங்குவதுதானே மனித இயல்பு?''

''இல்லை, பூங்குழலி! பழி வாங்கு வது மனித இயல்பு அல்ல. அது ராட் சஸ இயல்பு. ஒருவரிடம் நாம் அன்பு வைத்திருப்பது உண்மையானால் அவ ருடைய சந்தோஷம் நமக்கும் சந் தோஷம் தரவேண்டும். அவர் நம்மை நிராகரிப்பது முத லில் கொஞ்சம் வேதனையாயிருந் தாலும் பொறுத்



துக்கொண்டு பதிலுக்கு நன்மையே செய்தோமானால், பின்னால் நமக்கு ஏற்படும் இன்பம் ஒன்றுக்குப் பத்து மடங்காகப் பெருகியிருக்கும்....''

''நீ சொல்வது மனித இயல்பேயல்ல; மனிதர்களால் ஆகக்கூடிய காரியமும் அல்ல. வந்தியத் தேவனுடன் வைத்தியர் மகன் ஒருவன் வந்தான். அவன் என்னைப் பார்த்ததும் ஆசை கொண்டான். அது நிறைவேறாது என்று அறிந்ததும், அவனுடைய ஆசைக்குக் குறுக்கே நிற்பதாக அவன் எண்ணிய வந்தியத்தேவனைப் பழுவேட்டரையர் ஆட்களிடம் காட்டிக் கொடுக்க முயன்றான். என்னையும் அவன் கொன்றுவிட முயன்றிருப்பான்....''

''அப்படியானால் அவன் மனித குலத்தைச் சேர்ந்தவன் அல்ல; கொடிய அசுர குலத்தைச் சேர்ந்தவன்.''

''அதோ கொடும்பாளூர் இளவரசி நிற்கிறாள். அவள் பொன்னியின் செல்வருக்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்திருக்கிறாள். பொன்னியின் செல்வர் அவளை ஏற்றுக் கொள்ளா விட்டால், அவள் என்ன செய்வாள்? நிச்சயமாகப் பொன்னியின் செல்வருக்கு விஷம் வைத்துக் கொல்ல முயல்வாள். அவருடைய மனத்தை வேறு எந்தப் பெண்ணாவது கவர்ந்து விட்டதாக அறிந்தால், அவளையும் கொல்ல முயல்வாள்.''

''ஒருநாளும் நான் அப்படி நினைக்கவில்லை, பூங்குழலி! சாத்விகமே உருக்கொண்ட வானதி அப்படி ஒரு நாளும் செய்ய முயலமாட்டாள்.''

''இருக்கலாம்; நானாயிருந்தால் அப்படித்தான் செய்ய முயலுவேன்.''

''உன்னைக் கடவுள் மன்னித்துக் காப்பாற்ற நான் பிரார்த்தித்து வருவேன்......''

''கடவுள் என்ன என்னை மன்னிப்பது! நான்தான் கடவுளை மன்னிக்க வேண்டும்!''

''நீ தெய்வ அபசாரம் செய்வதையும் கடவுள் மன்னிப்பார்!''

''அமுதா! நீ உத்தமன். என் பெரிய அத்தையின் குணத்தைக் கொண்டு நீ பிறந்திருக்கிறாய்....''

''அது என்ன விஷயம்? திடீரென்று புதிதாக ஏதோ சொல்கிறாயே?''

''என் பெரிய அத்தை இறந்து போய் விட்டதாக நம் குடும்பத்தார் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா?''

''யாரைச் சொல்கிறாய்? என் தாய்க்கும் உன் தந்தைக்கும் உடன்பிறந்த மூத்த சகோதரியைத்தானே?''

''ஆமாம்; அவள் உண்மையில் இறந்துவிட வில்லை.''

''நானும் அப்படித்தான் பராபரியாகக் கேள்விப்பட்டேன்....''

''அவள் இலங்கைத் தீவில் இன்றைக்கும் பைத்தியக்காரியைப் போல் அலைந்து கொண்டிருக்கிறாள்....''

''குடும்பச் சாபக் கேட்டுக்கு யார் என்ன செய்ய முடியும்?''

''அவள் இன்று பைத்தியக்காரிபோல் அலைவதற்குக் குடும்ப சாபம் மட்டும் காரணம் அல்ல. சோழ குலத்தைச் சேர்ந்த ஒருவரின் நம்பிக்கைத் துரோகம்தான் அதற்குக் காரணம்.''

''என்ன? என்ன?''

''இளம் பிராயத்தில் என் அத்தை இலங்கைக்கு அருகில் ஒரு தீவில் வசித்து வந்தாள். அவளைச் சோழ ராஜகுமாரன் ஒருவன் காதலிப்பதாகப் பாசாங்கு செய்தான். அவள் நம்பி விட்டாள். பிறகு அந்த ராஜகுமாரன் இளவரசுப் பட்டம் கட்டிக் கொண்டதும் அவளை நிராகரித்து விட்டான்.....''

''இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது, பூங்குழலி?''

''என் ஊமை அத்தையின் சமிக்ஞை பாஷை மூலமாகவே தெரிந்து கொண்டேன். இன்னொன்று சொல்கிறேன், கேள்! சில காலத்துக்கு முன்பு பாண்டிய நாட்டார் சிலர் இங்கே வந்திருந்தார்கள். என் அத்தையை வஞ்சித்த இராஜ குலத்தினரைப் பழிக்குப் பழி வாங்குவதற்கு என் உதவியைக் கோரினார்கள். அப்போதுதான் என் அத்தையின் கதையை அறிந்திருந்த எனக்கு இரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது. அவர்களுடன் சேருவதென்றே முடிவு செய்து விட்டேன். அச்சமயம் என் பெரிய அத்தையின் மனப் போக்கை அறிந்து கொண்டேன். அவள் தனக்குத் துரோகம் செய்தவனை மன்னித்ததுமல்லாமல், அவனுக்கு இன்னொரு மனைவி மூலம் பிறந்த பிள்ளையைப் பல தடவை காப்பாற்றினாள் என்று அறிந்தேன். பிறகு பாண்டிய நாட்டாருடன் சேரும் எண்ணத்தை விட்டுவிட்டேன். நீ சொல்கிறபடி, என் அத்தையின் அன்பு, தெய்விகமான அன்புதான். ஆனால் என் அத்தையைப் போல் நான் இருக்க மாட்டேன்....''

''பின்னே, என்ன செய்வாய்?''

''என்னை எந்த இராஜகுமாரனாவது வஞ்சித்து மோசம் செய்தால் பழிக்குப் பழி வாங்குவேன். அவனையும் கொல்வேன்; அவனுடைய மனத்தை என்னிடமிருந்து அபகரித்தவளையும் கொல்லுவேன். பிறகு, நானும் கத்தியால் குத்திக் கொண்டு செத்துப் போவேன்!''

''கடவுளே! என்ன பயங்கரமான பேச்சுப் பேசுகிறாய்?''

''அமுதா! இரண்டு வருஷமாக என் மனத்திலுள்ள கொதிப்பை நீ அறிய மாட்டாய். அதனால் இப்படிச் சாத்வீக உபதேசம் செய்கிறாய்.''

''உன் அத்தைக்கு இல்லாத கொதிப்பு உனக்கு என்ன வந்தது?''

''அது என் அத்தையின் சமாசாரம்; இது என் சமாசாரம்!''

''உன்னுடைய சமாசாரமா? உண்மைதானா, பூங்குழலி! நிதானித்துச் சொல்!''

''ஆம், அமுதா! என் உடம்பிலிருந்து கொஞ்சம் இரத்தத்தையும், அந்த வானதியின் உடம்பிலிருந்து கொஞ்சம் இரத்தத்தையும் எடுத்து ஒத்திட்டுப் பார்த்தால், ஏதாவது வித்தியாசம் இருக்குமா?''

''ஒரு வித்தியாசமும் இராது.''

''அவள் எந்தவிதத்திலாவது என்னை விட உயர்ந்தவளா? அறிவிலோ, அழகிலோ, ஆற்றலிலோ?''

''ஒன்றிலும் உன்னைவிட உயர்ந்தவள் அல்ல. நீ அலைகடலில் வளர்ந்தவள். அவள் அரண்மனையில் வளர்ந்தவள். நீ காட்டு மிருகங்களைக் கையினால் அடித்துக் கொல்லுவாய்; கடும் புயற் காற்றில் கடலில் ஓடம் செலுத்துவாய்; கடலில் கை சளைத்துத் தத்தளிக்கிறவர்களைக் காப்பாற்றுவாய்! வானதியோ கடல் அலையைக் கண்டு பயப்படுவாள்; வீட்டுப் பூனையைக் கண்டு பீதி கொண்டு அலறுவாள்; ஏதாவது கெட்ட செய்தி கேட்டால் மூர்ச்சையடைந்து விழுவாள்!''

''அப்படியிருக்கும் போது இளைய பிராட்டி என்னைத் துச்சமாகக் கருதக் காரணம் என்ன? வானதியைச் சீராட்டித் தாலாட்டுவதின் காரணம் என்ன?''

''பூங்குழலி! இளையபிராட்டியின் மீது நீ வீண் பழி சொல்கிறாய். அவருக்கு வானதி நெடுநாளையத் தோழி. உன்னை இப்போதுதான் இளைய பிராட்டிக்குத் தெரியும். இளவரசரைக் கடலிலிருந்து காப்பாற்றி இங்கே கொண்டு வந்து சேர்த்ததற்காக உனக்கு எவ்வளவோ அவர் நன்றி செலுத்தவில்லையா?''

''ஆ! அந்த அரண்மனைச் சீமாட்டியின் நன்றி இங்கே யாருக்கு வேணும்? அவளே வைத்துக் கொள்ளட்டும். அமுதா! இளவரசரைப் படகில் ஏற்றிக் கொண்டு திரும்பப் புத்த விஹாரத்துக்குப் போக வேண்டுமாயிருந்தால், நீ மட்டும் படகைச் செலுத்திக் கொண்டு போ! நான் வந்தால், ஒரு வேளை வேண்டுமென்று படகைக் கவிழ்த்தாலும் கவிழ்த்து விடுவேன்....''




## வெற்றிகரமான வாபஸ்!

நிற பேதம் பாராட்டும் தென் ஆப்பிரிக்காவிலிருந்து கிரிக்கெட் கோஷ்டியை இங்கிலாந்துக்குத் தருவித்தது தவறு என்று பிரிட்டனில் இப்போது ஆர்ப்பாட்டம் நடப்பது விளையாட்டுப் பிரியர்கள் அறிந்ததே.

1936ல் பெர்லின் ஒலிம்பிக்கின் போதும் இந்தக் கறுப்பு-வெளுப்புப் பிரச்னை எழுந்தது.

ஹிட்லர் ஒவ்வொரு விளையாட்டிலும் வெற்றி பெற்றவருடன் கைகுலுக்கி வாழ்த்தி அனுப்புவார் என ஏற்பாடாகியிருந்தது. ஆனால் நீக்ரோ விளையாட்டுக் கலைஞர்களுடன் அவர் கரம் குலுக்க மாட்டார் என்று வதந்திகள் உலாவின. நீக்ரோ கார்னிலியஸ் ஒரு போட்டியில் வெற்றி பெற்றிருந்தார். அப்போது எல்லாருடைய கண்களும் ஜெர்மன் சர்வாதிகாரி ஹிட்லரின் இருக்கையை நோக்கின. அதே சமயத்தில் கசமுச பேச்சும் அதிகாரிகள் எழுந்து நிற்கும் காட்சியும் தென்பட்டன. ஒலிம்பிக் ஸ்டேடியத்தை விட்டு ஹிட்லர் வேகமாகச் சென்று விட்டார். இதற்கு அதிகாரபூர்வமாகக் கிடைத்த விளக்கம்: ''நேரம் கடந்து விட்டது. மழையும் பெய்யும் போலத் தோன்றுகிறது!''

ஆனால் மைதானத்தில் வெற்றி பெற்றுப் புகழ் சூடியிருந்த கறுப்பு மனிதன் கார்னிலியஸ் ஹிட்லரின் திடீர் ஓட்டத்தைக் கண்டு சிரித்தான்! பின்னால் பிரிட்டிஷ் படைகள் செய்யவிருந்த 'டன்கர்க்கை' அன்றே ஹிட்லர் செய்து காட்டிவிட்டார்! - குண்டுமணி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ஒருநாளும் நீ அப்படிச் செய்யமாட்டாய், பூங்குழலி! இளவரசர் என்ன குற்றம் செய்தார், அவர் ஏறியுள்ள படகை நீ கவிழ்ப்பதற்கு?''

''அமுதா! எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது. என் சித்தம் என் சுவாதீனத்தில் இல்லை. என் அத்தைக்கு இவர் தந்தை செய்த துரோகத்தை நினைத்துப் படகைக் கவிழ்த்தாலும் கவிழ்த்து விடுவேன். நீயே படகை விட்டுக் கொண்டு போ!''




திருமணம்

''அப்படியே ஆகட்டும்; நானே இளவர சரைக் கொண்டு போய் விட்டு வருகிறேன். நீ என்ன செய்வாய்?''

''நான் வானதியைப் பின்தொடர்ந்து சென்று, அவள் தலையில் ஒரு கல்லைத் தூக்கிப் போடுவேன்!''

இவ்விதம் கூறிக் கொண்டே பூங்குழலி குனிந்து கால்வாயின் கரையில் கிடந்த ஒரு கூழாங் கல்லை எடுத்தாள். அச்சமயம் கால்வாயின் கரையிலிருந்த அடர்த்தியான தென்னந் தோப்புக்குள்ளிருந்து கம்பீரமான ராஜ ரிஷபம் ஒன்று வெளியேறி வந்தது. அதைப் பார்த்த பூங்குழலி தன் கோபத்தை அக் காளையின் மேல் காட்ட எண்ணிக் கூழாங் கல்லை அதன் மேல் விட்டெறிந்தாள்.

அந்தக் கூழாங்கல், ரிஷப ராஜனின் மண்டை மீது விழுந்தது.

காளை ஒரு தடவை உடம்பைச் சிலிர்த்துக் கொண்டது. கல் வந்த திசையை உற்றுப் பார்த்தது.

''ஐயோ! பூங்குழலி! இது என்ன காரியம்? மாட்டின் மீது கல்லை விட்டெறியலாமா?'' என்றான் அமுதன்.

''எறிந்தால் என்ன?''

''வாயில்லாத ஜீவன் ஆயிற்றே! அதற்குத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் தெரியாதே?''

''என் குலத்தில் வாயில்லாத ஊமைப் பெண் ஒருத்தி இருந்தாள்! அவளுடைய மனத்தைப் புண்படுத்தியவர்களை என்ன செய்வது? அவள் தன்னைத் தானே பாதுகாத்துக் கொள்ள முடியாமையால்தானே, அவளை அரச குமாரன் ஒருவன் வஞ்சித்து அவளுடைய வாழ்க்கையைப் பாழாக்கினான்?''

''உன் அத்தைக்கு யாரோ செய்த அநீதிக்கு இந்த மாடு என்ன செய்யும்?''

''இந்த மாடு அப்படியொன்றும் நிராதரவான பிராணி அல்ல. இதற்குக் கூரிய கொம்புகள் இருக்கின்றன. தன்னைத் தாக்க வருகிறவர்களை இது முட்டித் தள்ளலாம். காது கேளாத, பேச முடியாத, உலகமறியாத ஏழைப் பெண்ணால் என்ன செய்ய முடியும்? என்னிடம் அப்படி ஒரு ராஜகுமாரன் நடந்து கொண்டால் நான் அவனை இலேசில் விட மாட்டேன்!''

''இலேசில் விடமாட்டாய்! காளை மாட்டின் மேல் கல்லை எடுத்தெறிவாய்! அதுவும் கால்வாயில் படகில் இருந்துகொண்டு! மாடு உன்கிட்டே வந்து உன்னை முட்ட முடியாதல்லவா?''

''என்னை முட்ட முடியாவிட்டால் வேறு யாரையாவது அந்தக் காளை முட்டித் தள்ளட்டுமே!''

''உனக்கு யார் மேலோ உள்ள கோபத்தை இந்தக் காளையின் பேரில் காட்டியதுபோல்; அல்லவா?''

இவர்களுடைய சம்பாஷணையை என்னவோ அந்த ரிஷபத்தினால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், பூங்குழலி கூறியது போலவே கிட்டத்தட்ட அது செய்து விட்டது.

கால்வாயில் இறங்கிப் படகிலிருந்த பூங்குழலியின் மீது அது தன் கோபத்தைக் காட்ட முடியவில்லை. திரும்பித் துள்ளிக் குதித்துக் கொண்டு சென்றது. அச்சமயம் வானதி தென்னந்தோப்பின் மறுபுறத்தில் இருந்த பல்லக்கை நோக்கித் தனியாகப் போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளம் குதூகலத்தினால் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தது. எதிரில் துள்ளிக் குதித்துக் கொண்டு வந்த ரிஷப ராஜனைப் பார்த்ததும் முதலில் அவள் குதூகலம் அதிகமாயிற்று! ஆனால் ரிஷபராஜன் தலையைக் குனிந்துகொண்டு கொம்பை நீட்டிக்

கொண்டு வாலைத் தூக்கிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் பயந்து போனாள். கால்வாய்க் கரையை நோக்கித் திரும்பி ஓடி வருவதைத் தவிர வேறு வழியில்லை. நந்தி மண்டபத்துக்கு வெகு சமீபத்தில் கால்வாய்க் கரைக்கு அவள் வந்துவிட்டாள். அப்புறம் மேலே செல்ல முடியவில்லை. ஏனெனில், கரையிலிருந்து கால்வாய் ஒரே கிடுகிடு பள்ளமாயிருந்தது. கரையோரமாக நந்தி மண்டபத்துக்கு வரலாம் என்று திரும்பினாள். அச்சமயம் ரிஷபம் அவளுக்கு வெகு சமீபத்தில் வந்திருந்தது. பின்புறமாக நகர்ந்து கால்வாயில் விழுவதைத் தவிர வேறு மார்க்கம் ஒன்றும் இல்லை. அப்போதுதான், ''ஐயோ! ஐயோ! அக்கா! அக்கா!'' என்று அவள் கத்தினாள்.

வானதியின் அந்த அபயக் குரல் தான் பொன்னியின் செல்வன், குந்தவை ஆகியவர்களின் காதில் வந்து விழுந்தது.

*  *  *

**வா**னதியின் அபயக் குரல் வந்த திசையைப் பொன்னியின் செல்வனும் குந்தவையும் திடுக்கிட்டு நோக்கினார்கள். அவர்கள் இருந்த நந்தி மண்டபத்துக்குச் சற்றுத் தூரத்தில், கால்வாயின் உயரமான கரையில் வானதி தோன்றினாள். கால்வாயின் பக்கம் அவள் முதுகு இருந்தது. அவள் தனக்கு எதிரே ஏதோ ஒரு பயங்கரமான பொருளைப் பார்ப்பவள் போலக் காணப்பட்டாள். அவளை அவ்விதம் பயங்கரப்படுத்தியது என்னவென்பது மறுகணமே தெரிந்துவிட்டது. ''அம்ம்ம்மா!'' என்ற கம்பீரமான குரல் கொடுத்துக் கொண்டு, அவளுக்கு எதிரே ரிஷபராஜன் தோன்றினான்.

இன்னும் ஓர் அடி வானதி பின்னால் எடுத்து வைத்தால் அவள் கால்வாயில் விழ வேண்டியதுதான். பின்னால் நகருவதைத் தவிர அவளுக்கு வேறு வழியும் இல்லை. இதையெல்லாம் அருள்வர்மன் பார்த்த தட்சணமே அறிந்து கொண்டான். உடனே நந்தி மண்டபத்தின் படிக்கட்டிலிருந்து கால்வாயில் குதித்து மின்னலைப் போல் பாய்ந்து ஓடினான். வானதி கால்வாயின் கரையிலிருந்து விழுவதற்கும் அருள்வர்மன் கீழே ஓடிப்போய்ச் சேர்வதற்கும் சரியாக இருந்தது. கால்வாயின் தண்ணீரில் வானதி தலைகுப்புற விழுந்து விடா




**தந்தை (கென்னடி)யும் தனயனும்**

சென்னை, அமெரிக்கத் தகவல் நிலையத்தில் நடைபெறும் புகைப்படக் கண்காட்சியிலிருந்து இரு புகைப்படங்கள்

மல் இரு கரங்களாலும் அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

வானதிக்கு நேர்வதற்கு இருந்த அபாயத்தை அறிந்து ஒரு கணம் குந்தவை உள்ளம் பதைத்துத் துடிதுடித்தாள். மறுகணம் அருள்மொழி வர்மன் அவளைத் தாங்கிக் கொண்டதைப் பார்த்து மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தாள்.

**வே**லும் வாளும் வீசி வஜ்ராயுதம் போல் வலுப் பெற்றிருந்த கைகளில் துவண்ட கொடியைப்போல் கிடந்த வானதியைத் தூக்கிக் கொண்டு அருள்வர்மன் குந்தவையின் அருகில் வந்தான்.

''அக்கா! இதோ உன் தோழியை வாங்கிக்கொள்! கொடும்பாளூர் வீர வேளிர் குலத்தில் இந்தப் பெண் எப்படித்தான் பிறந்தாளோ, தெரியவில்லை!'' என்றான்.

''தம்பி! இது என்ன காரியம் செய்தாய்? கல்யாணம் ஆகாத கன்னிப்பெண்ணை நீ எப்படிக் கையினால் தொடலாம்?'' என்றாள் குந்தவை.

''கடவுளே! அது ஒரு குற்றமா? பின்னே, இவள் தண்ணீரில் தலை கீழாக விழுந்து முழுகியிருக்க வேண்டும் என்கிறாயா? நல்ல வேளை! இவளை நான் தாங்கிப் பிடித்தது இவளுக்குத் தெரியாது. விழும்போதே மூர்ச்சையாகிவிட்டாள்! இந்தா, பிடித்துக் கொள்!'' என்றான் அருள்வர்மன்.

வானதி கலகலவென்று சிரித்தாள். சிரித்துக் கொண்டே அவன் கரங்களிலிருந்து





முதல் சிறுவன் : வெய்யில் காலமானா உன் அப்பாவுக்கு இப்படித்தான் வியர்த்துக் கொட்டுமா ?
அடுத்தவன் : வெய்யில் காலம்னு இல்லே, என் அம்மா பக்கத்தில் நின்னாலே போதும். அவருக்கு இப்படித்தான் வியர்த்துக் கொட்டும்!

தன்னை விடுவித்துக் கொண்டு தரையில் குதித்தாள்.

''அடி கள்ளி! நீ நல்ல நினைவோடு தான் இருந்தாயா?'' என்றாள் குந்தவை.

''கண்ணை மூடிக் கொண்டு மூர்ச்சை யடைந்தது போல் ஏன் பாசாங்கு செய்தாள் என்று கேள், அக்கா !'' என்றான் பொன்னியின் செல்வன்.

'' நான் ஒன்றும் பாசாங்கு செய்ய வில்லை, அக்கா ! இவர் என்னைத் தொட்டதும் எனக்குக் கூச்சமாய்ப் போய்விட்டது. வெட்கம் தாங்காமல் கண்களை மூடிக் கொண்டேன் !''

''அது எனக்கு எப்படித் தெரியும்? மூர்ச்சை போட்டு விழுவது உன் தோழிக்கு வழக்கமாயிற்றே என்று பார்த்தேன் !''

''இனிமேல் நான் மூர்ச்சை போட்டும் விழமாட்டேன்; அப்படி விழுந்தாலும் இவர் இருக்குமிடத்தில் விழ மாட்டேன், அக்கா! இன்று இவருக்கு நான் செய்த உதவியை மட்டும் இவர் என்றைக்கும் மறவாமல் இருக்கட்டும்!'' என்றாள் வானதி.

''என்ன? என்ன? இவள் எனக்கு உதவி செய்தாளா ? அழகாயிருக்கிறதே ?'' என்றான் அருள்வர்மன்.

குந்தவையும் சிறிது நகைப்புடன் வானதியை நோக்கி, ''என்னடி சொல்கிறாய்? என் தம்பி உனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன் என்று சொல்கிறாயா?'' என்றாள்.

'' இல்லவே இல்லை, அக்கா ! நான் தான் உங்கள் தம்பிக்குப் பெரிய உதவி செய்தேன். இவர் அதற்காக என்னிடம் என்றைக்கும் நன்றி செலுத்தியே தீர வேண்டும் !''

'' நான் இவளைக் கால்வாயில் விழாமல் காப்பாற்றியதற்காக இவளுக்கு நான் நன்றி செலுத்த வேண்டுமா? உன் தோழிக்கு ஏதாவது சித்தக் கோளாறு உண்டா, அக்கா !'' என்றான் பொன்னியின் செல்வன்.

''என் சித்தம் சரியாகத்தான் இருக்கிறது. இவருக்குத்தான் மனம் குழம்பியிருக்கிறது. புரியும்படி சொல்லுகிறேன். இவர் சிறு வயதில் ஒரு சமயம் காவேரியில் விழுந்தார் என்றும் ஒரு பெண் இவரை எடுத்துக் காப்பாற்றினாள் என்றும் சொன்னீர்கள். மறுபடியும் இவர் கடலில் விழுந்து தத்தளித்தார்; அங்கேயும் ஓர் ஓடக்காரப் பெண் வந்து இவரைக் காப்பாற்றினாள். இப்படிப் பெண்களால் காப்பாற்றப்படுவதே இவருக்கு வழக்கமாய்ப் போய் விட்டது. அந்த அபகீர்த்தி மறைவதற்கு நான் இவருக்கு உதவி செய்தேன். கால்வாயில் விழப் போன ஒரு பெண்ணை இவர் தடுத்துக் காப்பாற்றினார் என்ற புகழை அளித்தேன் அல்லவா ? அதற்காக இவர் என்னிடம் நன்றி செலுத்த வேண்டாமா?''

இவ்விதம் கூறிவிட்டு வானதி சிரித்தாள். அதைக் கேட்ட குந்தவையும் சிரித்தாள். பொன்னியின் செல்வனும் சிரிப்பை அடக்கப் பார்த்து முடியாமல் குபீர் என்று வாய்விட்டுச் சிரித்தான்.

அவர்கள் மூன்று பேரும் சேர்ந்து சிரித்த சிரிப்பின் ஒலி நந்தி மண்டபத்தைக் கடந்து, வான முகடு வரையில் சென்று எதிரொலி செய்தது.

படகில் இருந்தவர்களின் காதிலும் அந்தச் சிரிப்பின் ஒலி கேட்டது. ''அமுதா! அந்த மூன்று பைத்தியங்களும் சிரிப்பதைக் கேட்டாயா?'' என்று சொல்லி விட்டுப் பூங்குழலியும் சிரித்தாள். அமுதனும் அவளுடன் கூடச் சிரித்தான்.

தென்னந் தோப்பில் வாசம் செய்த பட்சிகள் 'கிக்கிளு, கிளுகிளு' என்று ஒலி செய்து சிரித்தன.

இத்தனை நேரமும் கால்வாயின் கரை மீது கம்பீரமாய் நின்ற காளையும் ஒரு ஹுங்காரம் செய்து சிரித்து விட்டுச் சென்றது.

கடல்அலைகள் கம்பீரமாகச் சிரித்தன.

கடலிலிருந்து வந்த குளிர்ந்த காற்றும் மிருதுவான குரலில் சிரித்து மகிழ்ந்தது.

---

**பொன்னியின் செல்வன் மூன்றும் பாகம் முற்றிற்று**

---

# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்: **ராஜாஜி**



### 31

நம்முடைய சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் இதிகாசங்களிலும் உபவாச விரதத்தைப் பல இடங்களில் காணலாம். ஹிந்து சமுதாயத்தில் இன்றுகூட சாதாரண காரணங்களுக்காகவும் ஆயிரக் கணக்கில் உபவாசமிருந்து வருகிறார்கள். பல விரதங்களுக்குள் உபவாச விரதம் மிக சாத்விகமானதென்றே சொல்லலாம். ஆனால் எதுவுமே நன்மைக்கும் தீமைக்கும் பயன்படும். உபவாசமும் அவ்வாறே. இதற்கு நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. சிலர் கெட்ட வழியில் பயன்படுத்துகிறார்கள் என்ற காரணத்தினால் ஒரு நல்ல விஷயத்தை நாம் விட்டுவிட முடியாது.

எனக்குப் பல கிறிஸ்தவ ப்ராடஸ்டண்ட் நண்பர்கள் உண்டு. அவர்களுடைய அன்பை நான் பெரிதும் பாராட்டி வருகிறேன். அவர்களிடத்தில் எனக்கு அளவற்ற மதிப்பு. உண்ணாவிரதங்கள் அவர்களுக்குப் பிடிக்காது என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதற்கு அவர்கள் சொல்லும் காரணம் எனக்குப் புரியவில்லை.

உடலை வருத்தும் தவ முறைகளை எந்தக் காலத்திலுமே உலகில் மக்கள் கையாண்டு வந்திருக்கிறார்கள். உபவாசமின்றி அதாவது தேகம் வேண்டுவதை ஓரளவு தள்ளி வைப்பது இன்றி எந்தப் பிரார்த்தனையும் செல்லாது. பிரார்த்தனைக்கு நோன்பு இன்றியமையாத அவயவம். உணவு ஏற்காமலிருப்பதைவிட ஒருவன் வேறு என்ன செய்ய முடியும், தான் என்கிற உணர்ச்சியை நீப்பதற்கு? உபவாசமே உண்மையான ஜபமாகும்.

"உன்னுடைய உயிர், உனதேயாகக் கடவது: இது எப்போதும் முற்றிலும் உனதே" என்று கிறிஸ்தவர்கள் சொல்வது வெறும் வாய்ப் பேச்சாக விட்டுவிடலாமா? மகிழ்ச்சியுடன் கவலையும் கஷ்டமும் இன்றி எடுத்துக்கொள் என்று உயிரைக் கொடுத்துவிடுவது நியாயந்தானே? உண்ணாமலிருப்பதும், நீரும்கூட அருந்தாமலிருப்பதும் அந்த அர்ப்பணத்துக்கு முதல் படியே யாகுமல்லவா?

என் கருத்துக்களை இவ்வாறு நான் எழுதிக் கொண்டிருக்கும்போது ஒரு புஸ்தகம் என் கைக்கு வந்து சேர்ந்தது. ஜோனா மூன்றாவது அத்தியாயத்திலிருந்து ஒரு மேற்கோள் அந்தப் புத்தகத்தில் எடுத்துக் காட்டப்பட்டிருந்தது. அதில் ஓர் உண்ணாவிரதம் வெற்றிகரமாக நடந்ததைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. நயினிவா என்கிற பெரிய நகரம் அழிந்துபோகாமலிருப்பதற்காக ஒரு பூரண உண்ணாவிரதம் மக்கள் பூண்டார்கள் என்றும் அதைக் கண்டு ஆண்டவன் நகரம் அழிந்து போகாமல் காத்தான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. உயிர் நீங்கும்வரையில் உண்ணாவிரதம் இருப்பது கிறிஸ்தவ சாஸ்திரத்திலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. எல்லா உண்ணாவிரதமும் தற்கொலையாகாது. நயினிவா மக்களும் அந்த நகரத்து அரசனும் இருந்த உண்ணா விரதம் ஒரு நல்ல தவமேயாகும். என்னுடைய உண்ணாவிரதமும் ஒரு தவம் என்றே அடக்கத்துடன் சொல்வேன். ஜோனா அத்தியாயத்தில் வர்ணிக்கப் பட்டிருக்கும் பெரிய உண்ணாவிரதம் ராமாயணத்தில் நாம் படிக்கும் புனிதக் கதையொன்றைப் போலவே இருக்கிறது.

(ஹரிஜன் 15-4-33)

ஹிந்தி

# பார்வை

பிரபாகர் மாச்வே—

கோடை விடுமுறையை மலைமீது கழிப்பதற்காக மோகன் சிம்லாவுக்கு வந்திருந்தான். அவனுடைய நண்பன் விமல் ஒரு பெரிய வியாபாரி. திபேத்திலிருந்து ஓடிவந்த பலர் இப்போது சிம்லாவில் சிறு சிறு தொழில்கள் செய்கிறார்கள். அவர்களிடம் திபேத் நாட்டு ஓவியங்கள், பழைய பித்தளை, செம்பு, வெண்கலச் சிலைகள், நகைகள், மாலைகள், மரத்தாலான பலவிதப் பொருள்கள், பல்வேறு டிஸைன்களில் விரிப்புகள், சட்டைகள், ஸ்வெட்டர்கள் முதலியன கிடைக்கும். விமல் அந்த அகதிகளிடமிருந்து சாமான்களை வாங்குவான், பல்வேறு ராஜ்யங்களிலும், அயல் நாடுகளிலும் விற்பனை செய்வான். இவ்வாறு அவனுடைய செல்வம் பெருகி வந்தது. 'தமில் க்யூரியோ' என்ற கடையின் உரிமையாளனான அவன் நேர்த்தியான ஒரு பங்களாவில் வசித்து வந்தான். சில வேலைக்காரர்கள் இருந்தார்கள். மனைவியும் மூன்று குழந்தைகளும் உள்ள சுகமான குடும்பம்.

மோகனின் கதை வேறு. அவன் 'ஒண்டிக் கட்டை'; அப்படியென்றால் அவன் மணமாகாதவன் என்று பொருள் அல்ல. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் அவனுடைய மனைவி முதல் பிரசவத்திலேயே அவனை விட்டுப் பிரிந்து விட்டாள். அவன் தன் மனைவியைக் காதலிக்கவில்லை என்று கூற முடியாது. ஆனால் மணமானதிலிருந்தே அவன் மனைவி நோய்வாய்ப் பட்டாள். மோகனுக்கு வலுவான உடம்பு; நல்ல உயரம்; சுவைத்து உண்பவன்; குழந்தைப் பருவத்திலிருந்தே பயிற்சிகளால் உடலை உறுதி செய்து கொண்டவன். ஆனால் அவனுடைய மனைவியான ரதிக்கு மென்மையான சரீரம்; பெற்றோருக்கு ஒரே பெண்ணாதலால் மிகவும் செல்லமாய் வளர்க்கப்பட்டவள். அடிவயதிலிருந்தே அவள் 'சிடுமூஞ்சி'. சின்னச் சின்ன விஷயங்களில் கூட அவளுக்குக் கோபம் வந்து விடும்.

இருவருக்குமிடையில் உடலமைப்பால் மட்டும் வேற்றுமை இல்லை. உள்ளப் பாங்கிலும் இருவருக்கும் ஒற்றுமை இல்லை என்று தோன்றியது. ரதி, மதவுணர்வு மிக்கவள்; கணவன் — மனைவியின் உறவை ஒரு வித மிருகத் தன்மை வாய்ந்தது என்று அவள் கருதினாள். சங்கீதத்தில் அவளுக்கு ஈடுபாடு அதிகம். பலமொழிகளைக் கற்றவள். கவிதையும் இயற்றுவாள். சன்னலில் மணிக்கணக்காக உட்கார்ந்தவாறு, ஆகாயத்தில் நடமாடும் முகில்களின் நிற மாற்றத்தை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருப்பது அவளுடைய பிரியமான வேலைகளில் ஒன்று.

மோகனுக்கு 'ஸ்போர்ட்ஸி'ல் ஆர்வம். அவன் இரவும் பகலும் நண்பர்களின் கோஷ்டியோடு 'ஹா ஹா' என்று கும்மாளி இட்டுக் கொண்டிருப்பான். ரேடியோவின் வால்யூமை உயர்த்தி கிரிக்கெட் அல்லது கால்பந்து பந்தயங்களின் வருணனைகளைக் கேட்டுக் கொண்டிருப்பான். ஆங்கிலப் படங்களை விரும்பிப் பார்ப்பான். தன் மனைவியும் 'பாஷனை'க் கவர்ச்சி உடைகளை உடுத்திக் கிளப்புகளுக்குப் போகவேண்டும் என்று அவனுக்கு ஆசை. ஆனால் ரதிக்கோ இவை எதுவும் பிடிக்காது. அவளுக்கு லைட் கலர்கள்தான் பிடிக்கும். பகட்டான நகைகளை அணிய அவள் விரும்புவதில்லை. உதட்டுச் சாயம் பூசிக் கொள்வதைப் பற்றியும், ஆங்கிலப் பாணியில் தலைமயிரைக் கத்தரித்துக் கொள்வதைப் பற்றியும் வீட்டில் கருத்து வேற்றுமை இருந்து கொண்டே இருக்கும். மோகனுக்குப் புலால் உணவு பிடிக்கும்; ரதியோ சைவம். இவ்விதக் கருத்து வேற்றுமைகளின் விளைவாகக் கணவன் அடிக்கடி சினம் கொண்டு வீட்டிலுள்ள சாமான்களை நொறுக்கித் தள்ளிவிடுவான். அல்லது தெருவில் தூக்கி எறிவான். இவ்வாறு ஏதாவது



மராட்டி மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட பிரபாகர் மாச்வே குவாலியரில் பிறந்து ஆக்ரா பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர். தற்பொழுது சாகித்திய அகாதமியின் உதவிக் காரியதரிசியாகப் பணியாற்றுகிறார். ஹிந்தியிலும் தமது தாய்மொழியான மராட்டியிலும் பதினைந்து புத்தகங்களுக்குமேல் எழுதித் தமது இலக்கியப் பணிக்குச் சிறப்பான இடம் தேடிக் கொண்டிருக்கிறார். இந்தியில் எழுதியுள்ள 'பார்வை' கதை உள்ளப் பார்வையைத் திறக்கவல்லது.



சேதம் ஏற்படும். பல நாட்கள் வரை அவன் வீட்டுக்கே வரமாட்டான். சிகரெட் பிடிப்பதில் தொடங்கி, ஸெப் நண்பர்களின் சகவாசத்தால் மதுபானமென்ன, வேறு பல தீய காரியங்களும் அவனுக்குப் பழக்கமாகி விட்டன.

கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் பலத்த வாக்குவாதம் நடக்கும். இறுதியில் ரதி விழிகள் பிதுங்க மௌனமாகப் பார்த்துக் கொண்டிருப்பாள். வானத்தில் விரவியுள்ள மேகங்கள் மழை பொழியாதா என்று வேட்கை கொண்டு எதிர்பார்க்கும் பூமியைப் போலிருக்கும் அவளது பார்வை. மௌனமாக மலைமீது ஓடிக் கொண்டிருக்கும் அருவி சட்டென முற்றிலும் வற்றிக் கரும்பாறைகள் மீது கோடு போட்டு அடையாளம் செய்தாற் போலுமிருக்கும்.

வெடித்துவிடுவது போல் விரிந்து பார்க்கும் ரதியின் கண்களை மோகன் சில சமயம் பார்ப்பான். அவனுக்குள் ஓர் அச்சம் எழும்; ஜன்ம ஜன்மாந்தர வாசனை தன்னைப் பிய்த்து விழுங்கக் கூர்ந்து உறுமிக் கொண்டு நோக்குவதுபோல் அவனுக்குத் தோன்றும். அதனிடமிருந்து தப்புவதற்காக ஏதோ ஒரு கானகத்துப் புதரில் அவன் ஒளிந்துகொள்வது போலவும் ஆனால் அந்தப் புதருக்கு நடுவே படம் விரித்த நாகம் ஒன்று தன்னையே நிமிர்ந்து பார்ப்பது போலவும் அவனுக்குத் தோன்றும். திருமணத்துக்கு முன்னால், புதிய வெள்ளை மலர்கள் சூடிய ரதியின் பின்னலை அவன் பேராவலோடு பார்ப்பது வழக்கம்; அந்தக் கருங் குழல் இப்போது அவனுக்குக் கரு நாகமாகத் தோன்றியது. திருமணத்துக்கு முன்னால் அவளுடைய புருவக் கொடியில் ஜகந்நாதர் முதலிய சம்ஸ்கிருதக் கவிகளின் பாட்டின் மென்மையைக் காண்பது அவன் வழக்கம். இப்போது அவை புத்தகங்களிலும் போஸ்டர்களிலும் உள்ள கொட்டை எழுத்துக்கள்போல் அவனுக்கு உறுத்தின. கண்மணிகளையும் இமைகளையும் பார்த்து அந்த நீள்விழியாளிடம் அவன் அப்போது கவர்ச்சியுற்றான். இப்போது அதே விழிகள் ஆழ்ந்த பொட்டைக் கிணறுகளைப்போல் அவனுக்குத் தோன்றின.

தான் கருவுற்றிருப்பதை அறிந்த அன்று ரதிக்கு மோகனிடம் மிகவும் கோபம் உண்டாயிற்று. 'ஒவ்வொரு பெண்ணும் தாயாக விரும்புகிறாள்' என்று உலகத்தில் பிரபல

மாகப் பேசப்படும் கவிகளின் கற்பனை, ரதிக்குப் பொருந்தாது. மோகன் தந்தையாவது ஒரு குரூரமான செய்கை என்பது ரதியின் கருத்து. தாய் வேண்டாத, விரும்பாத சூலின் விளைவு என்ன ஆகும்? மூன்று மாதங்களுக்குள்ளேயே அவள் நோய்வாய்ப்பட்டாள்.

இப்போதெல்லாம் மோகன் நேரம் கழித்து வீட்டுக்குத் திரும்பினால் ரதி, அவனைக் குறுகுறுவென்று வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பாள். யுக யுகங்களாகத் திகு திகுவென்று எரியும் எரிமலைகளைப் போன்றிருக்கும் அவள் கண்கள். மிகவும் இனிமையாகப் பாடுகிறவளும் மிகவும் சுவையான உணவு சமைக்கிறவளுமான ரதியின் கடலொத்த கம்பீரமான புறத் தோற்றத்துக்குள்ளே எத்தகைய தீ எரிந்து கொண்டிருந்ததோ! என்ன துன்பம், என்ன அதிருப்தி!

நோயுற்ற நிலையில் இமையா விழிகளால் அவனைப் பார்த்தவாறே அவள் சொர்க்கத்துக்குச் சென்று விட்டாள். வெகு ஜாக்கிரதையாக ஆப்பரேஷன் செய்தும் அவளுடைய எட்டு மாத சிசு கர்ப்பத்திலேயே இறந்து விட்டதாய் அவனிடம் தெரிவித்தார்கள். அவளுடைய கருப் பையும் சேதமாகி விட்டது. இனி அவளுக்குக் குழந்தை பிறக்க வழியில்லை. இந்தத் தகவல் அவனுக்கு அமைதி அளித்தது. சாந்தி மருத்துவ மனையில் அவளை மிகவும் கவனமாகப் பார்த்துக் கொண்டார்கள்.

அவள் தாயாக விரும்பினாளா? இல்லை. பிரம்மச்சரியத்தைப் போற்றினாள். ஆண் பெண் உறவை விலங்குத் தன்மை என்று கருதியவள். இந்த மனப் போராட்டம் தான் அவளை முறித்து வீழ்த்தி விட்டதோ ?

அப்போதும் அவனுக்கு ரதியின் இறந்த கண்களின் பார்வை மகா பயங்கரமாயிருந்தது. இரண்டு திரிசூலங்கள் அவளுடைய பழுப்புக் கண்களிலிருந்து கிளம்பி அவன் நெஞ்சில் பாய்வது போலிருந்தன. மோகனால் அந்தக் கண்களை ஒருபோதும் மறக்க முடியவில்லை. மருத்துவ மனையிலிருந்த டாக்டர்களிடம் மிகவும் வேண்டிக் கொண்டு, சவத்தின் கண்களை வெள்ளைத் துணியால் கட்டும்படி செய்த பின்தான் அவனுக்கு நிம்மதி ஏற்பட்டாற் போலிருந்தது. அவளுடைய பாவங்களைச் சுட்டிக்காட்டும் இரண்டு ஸர்ச்லைட்கள் இப்போது அணைந்துவிட்டன போலும். இனி அவன் அச்சமின்றிச் சிகரெட் பிடிக்கலாம். வயிறாரச் சாராயம் குடிக்கலாம்; அவன் இனி என்ன செய்தாலும் தட்டிக் கேட்பார் யாருமில்லை. இரண்டாம் கலியாணம் செய்து கொள்வதில்லை என்று அவன் உறுதி செய்து கொண்டான்.

சில சமயம் இரவில் அவன் தூக்கம் திடீரென்று கலையும். ஏதோ இசை அவன் செவிகளில் விழும். ஜன்னல் வழியே நோக்குகையில் இரண்டு விண் மீன்களின் மினு மினுப்பில் - ரதியின் கண்கள் தன்னைப் பின்தொடருவது போல் தோன்றும். மோகன் கண்களைக் கையால் மூடிக் கொள்வான்; ஆயினும் காலமான மனைவியின் கண்கள் அவனைப் பின்தொடர்ந்தவாறே இருந்தன; இவ்வாறு ஆறு மாதங்கள் கழிந்தன. பிறகு அவன் இந்தக் காட்சியை மறந்துவிட்டான். இந்தச் சம்பவங்கள் நடந்து இரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன.

மோகன் தன் நண்பன் விமலின் வீட்டில் உல்லாசமாய்ப் பொழுதுபோக்க வந்திருந்தான். ஸிம்லாவின் வண்ணமிகு கடை வீதிகளையும் தோட்டங்களையும் பற்றிப் பலர் புகழ்வதை அவன் கேள்விப்பட்டிருந்தான். தனியாக மலை வழியே சிறிது தூரம் நடக்க வேண்டும். பனியால் மூடுண்ட ஹிமாசல சிகரங்களைப் பார்த்துக் களிக்க வேண்டும். அந்தக் காட்சிகளை எவ்வளவு நேரம் பார்த்தாலும் கண்கள் திருப்தி அடைவதில்லை. பார்த்துக் கொண்டே யிருக்கலாம். சிம்லாவில் கனிகள் மிகுதி. மதுவிலக்குக் கிடையாது; தோட்டங்களிலும் கிளப்களிலும் கூட்டம் அதிகம் இராது. விமல் செல்வமும் செல்வாக்கும் உடையவன். மோகனின் விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றி மகிழ்வான். மோகன் பெருங் களிக்கூத்தைக் கற்பனை செய்து கொண்டு சிம்லாவுக்கு வந்திருந்தான்.

விமல் அவனுக்கு 'கெஸ்ட் ஹவுஸில்' தனி அறை ஒழித்துக் கொடுத்திருந்தான். காலையில் எழுந்த மோகன் அங்கிருந்தபடி 'ரெயிலிங்'குக்குக் கீழே பார்க்கலானான். திபெத் நாட்டுக் கூலிகளும் மலைக் கூலிகளும் முதுகு மீது சாமான்களைச் சுமந்து கொண்டு குனிந்த வண்ணம் வந்துகொண்டிருந்தார்கள். எதிரிலிருந்த கணவாயில் மூடுபனி; அங்கும் அதற்கு மேலும் பைன் மரங்கள் காவலுக்கு நிற்பவை போல் வரிசையாக இருந்தன. தன் டிரஸ்ஸிங் கவுனின் ஒரு பையில் கையை விட்டுக் கொண்டு மறு கையால் 'பைப்பை'ப் பிடித்துப் புகை உறிஞ்சியவாறு இந்தக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே ஏதோ யோசனையில் மூழ்கியிருந்தான் மோகன். போன ஆண்டுக் கோடையை அவன் காஷ்மீரில் கழித்தான். காஷ்மீரின் இயற்கை அழகை ஸிம்லாவுடன் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டிருந்தானோ என்னவோ? இதற்குள் திபெத்திய யுவதி ஒருத்தி தேநீர் 'டிரே'யுடன் அவனுடைய அறையை நோக்கி வந்தாள். அவளைப் பார்த்ததும் மோகன் பிரமித்துப் போனான். ரதியே திபெத்திய ஆடை அணிந்து வருவது போல் அவனுக்குத் தோன்றியது. கனவு காண்கிறோமோ என்று கண்களைத் தேய்த்துக் கொண்டு பார்த்தான். ஒருகால் பிரமையோ? 'ஹாலுஸினேஷனோ?'

அதே கண்கள், அதே நிறம்; அதே மாதிரி கண்மணிகள்; அதே மாதிரி வெறித்த பார்வை. அதே பாவம். மோகன் திகைப்புண்டான்.

அச்சத்தோடு அவன் அறையில் புகுந்தான். பெண் உள்ளே வந்தாள். அவளுக்கு ஹிந்தி சரியாகப் பேசத் தெரியாது. அவள் உள்ளே வந்தாள். இரண்டு கைகளையும் முழங்கால்களுக்கு அருகில் குவித்து, தலை குனிந்தபடி நின்றாள்.

''எசமான், தேநீர்.''

''சரி; உன் பெயர் என்ன?'' என்று கேட்டான் மோகன்.

"காஞ்சி!"

அப்புறம் பேசுவதற்கு ஏதும் இல்லை. அவள் புன்னகை புரிந்தாள், போய்விட்டாள். சற்று நேரம் கழித்து அதே பெண் வாளியைத் தூக்கிக் கொண்டு மேலே வந்தாள். மோகன் முகம் கழுவிக் கொள்ளலானான். கொஞ்ச நேரம் கழித்து மறுபடியும் அவள் தயங்கிக் கொண்டே ஆணைக்காகக் காத்திருப்பவள்போல் நின்றாள்; முன்போலவே கண்களை வெறித்து நோக்கியபடி.

இந்தத் நேபத்தியப் பெண்ணின் கண்கள் ரதியின் கண்களைப் போலவே இருக்கின்றன என்று இப்போது மோகனுக்கு நிச்சயமாகத் தோன்றியது. சந்தேகமே இல்லை. ஆனால் எவ்வாறு இப்படி நடக்க முடியும்? ரதி, அவள் தந்தைக்கு ஒரே பெண் அல்லவா? அவள் ஸம்ஸ்காரம் செய்து கொள்ளப்பட்டவளாக இருக்க முடியுமா? இல்லை, அப்படியும் இருக்க முடியாது. இருவருடைய கண்கள் ஒரே விதமாக எப்படி இருக்க முடியும்?

இயற்கையில் இரு மலர்கள்கூட ஒன்று போல இருப்பதில்லை. இரண்டு பட்டுப் பூச்சிகள் ஒன்றுபோல் இருப்பதில்லை. அன்றில் பறவைகள் கூட ஒன்றுபோல் மற்றொன்று இருப்பதில்லை. ஆனால், இது என்ன விந்தை!

சூரதாசரின் பஜனைப் பாடல் ஒன்று ரதிக்கு மிகவும் பிடிக்கும்; 'ஹரியைத் தரிசிக்கத் தாகம் கொண்ட கண்கள்' என்று சூரதாசர் பாடுகிறார். சூரதாசரோ குருடர். அவருடைய கண்கள் எப்படித் தாகம் கொள்ள முடியும்? குருட்டுக் கவிஞர்களும் எழுத்தாளர்களும் நிறங்களை இனம் கண்டு எவ்வாறு வர்ணிப்பார்கள்? நிறைந்த கண்களால், நேர்த்தியாய் இருக்கும் கண்களால் நாமே எல்லாவற்றையும் பார்த்துவிட முடிவதில்லையே?

"காஞ்சி! உனக்குச் சகோதரிகள் யாராவது இருந்தார்களா?"

"இல்லை, எசமான். எனக்குச் சகோதரிகள் யாருமில்லை."

"நீ ஏன் இப்படிப் பார்க்கிறாய்?"

"ஒன்றுமில்லை, எசமான்; ஒன்றுமில்லை." வெட்கத்துடன் கூறிக்கொண்டே நகர்ந்தாள்.

பிறகு அப் பெண் அறைக்குள் வரும்போதெல்லாம் மோகன் அவளுடைய கண்களைக் கூர்ந்து பார்ப்பான். தன்னைத்தானே 'பாவி' என்று இகழ்ந்து கொள்வான். அவனே தன் மனைவியைக் கொலை செய்து விட்டதுபோலவும், அவள் பூதமாகி அவனை விடாமல் பின்பற்றுவது போலவும் தோன்றும். அவனுக்கு மூச்சுத் திணறியது. வாழ்க்கையின் எந்தக் களியாட்டத்திலும் அவன் மனம் செல்லவில்லை. சந்தை கலைந்து சந்தடியற்றதைப் போலிருந்தது. இளமைப் பருவத்தில் அவனுக்கு இவ்வாறு அகால வைராக்கியம் உண்டாயிற்று. புத்தருக்கும் இவ்வாறுதான் நிகழ்ந்ததோ?

இறுதியில் நண்பன் விமல் மோகனிடம், "நீ ஏன் வருத்தமாயிருக்கிறாய்? உனக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்று கேட்டான்.

மோகன் அஞ்சிக் கொண்டே, அந்த நேபத்திய வேலைக்காரி காஞ்சியின் கண்களும் காலமான தன் மனைவியின் கண்களும் ஒரே விதமாய் இருப்பதைக் கூறினான். விமல் அதைக் கேட்டுப் பலமாகச் சிரித்தான்: 'அடே! இந்தக் காஞ்சி குருடியாக இருந்தவள். சாந்தி மருத்துவ மனையில் அவளுடைய கண்களை ஆபரேஷன் செய்தார்கள். அப்போது முதல் அவளுக்குப் பார்வை வந்து விட்டது.''

சாந்தி மருத்துவ மனையா? அங்குதானே ரதி மரணமடைந்தாள்? இறப்பதற்கு முன்னால் அவள் தன் கண்களைக் 'கண்கள் பாங்'குக்குத் தானம் செய்திருப்பாளோ? அப்படியானால் அந்த உள்ளொற்றும் பார்வை அவனை ஆயுளெல்லாம் பின்தொடர்ந்து கொண்டேதான் இருக்குமோ?

அன்று பிற்பகல் பஸ்ஸில் மோகன் ஸிம்லாவிலிருந்து திரும்பினான். கடுங்கோடை. நல்ல வெய்யில். அவனுடைய பார்வை அமைதியாக இருந்தது. ஏனெனில் வெய்யிலில் கண்கள் கூச்சமுற்றன; எதையும் பார்க்க முடியவில்லை, கண்கள் இருந்தும்.

பஸ்ஸில் போகும்போது வழியில் ஒரு ஹோட்டலில் குருட்டுப் பாடகர் கே. ஸி. டே பாடிய பழைய இசைத்தட்டு ஒலித்துக் கொண்டிருந்தது: 'ஐயனே, மனக் கண்ணைத் திறவாய்!' என்னும் பொருள்பட.

தமிழாக்கம்: **எம். வி. வெங்கட்ராம்**

## திருமாலுக்குத் திருமாலை

நாற்றெட்டு திவ்ய க்ஷேத்திரங்களுள் ஒன்றாகிய திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாளுக்கு ஆயிரத்தெட்டு பொற்காசுகள் அடங்கிய ஸ்ரீ லக்ஷ்மிஹார ஸஹஸ்ரநாம மாலை செய்து சமர்ப்பிக்க வேண்டும் என்று பக்தர்களால் உத்தேசிக்கப் பெற்று, அதற்காக ஒரு தனிக்குழுவும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

"கட்டிப் பொன் போல அவன்; பணிப் பொன் போலே அவன் திருநாமம்" என்று கொண்டாடப்படும் பெருமானுக்கு ஆயிரம் திருநாமமும் பொறித்த திவ்விய ஸ்வர்ணஹாரம் அணிவிக்கப்படுவது மிகவும் பொருத்தம்தானே? ஒரு பொற்காசு காணிக்கை அளிக்க ஆகும் கட்டணம் ரூ. 301. ஒரு காசுக்கு உரிய தொகையை வழங்குபவரின் பெயர் காசின் பின்புறத்தில் பதிக்கப்படும்.

ஆஸ்திகர்கள் யாவரும் பொருளுதவி செய்தும், ஒத்துழைத்தும் இந்தச் சிறந்த கைங்கரியத்தை நிறைவேற்றி வைத்து எம்பெருமான் கிருபைக்குப் பாத்திரராக வேண்டுகிறோம்.

# ராமாயணம்

## ராஜாஜி

ஒரு முகூர்த்த நேரம் ராமன் நினைவிழந்து கிடந்தான். பிறகு நினைவு வந்ததும் 'ஐயோ' என்று துயரம் தாங்காமல் உரத்த குரலில் அழ ஆரம்பித்தான். லக்ஷ்மணன் எவ்வளவு சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை.

''லக்ஷ்மணா! என்னால் இனி என்றைக்கும் அயோத்தி போக முடியாது. சீதையை அழைத்துக் கொண்டு சென்றவன், அவளைப் பாதுகாக்க வகையில்லாதவன், அவளை அரக்கர்களுக்குத் தின்னும்படி கொடுத்து விட்டுத் தனியாகத் திரும்பி வந்தான் என்று உலகமெல்லாம் என்னை இகழும். ஜனகருக்கு நான் என்ன சொல்லிச் சமாதானப்படுத்துவேன்? நீ போய் நம் தாய்மார்களைக் கவனித்துக் கொள். பரதனை ஆலிங்கனம் செய்து எனக்காக அவனுக்குச் சொல்லிவிடு. 'நீயே அரசன்; தேசத்தை நீயே அரசனாக இருந்து ஆள்வாய். ராமன் உனக்கு ஆக்ஞையிட்டு விட்டான்' என்று சொல்லிவிடு'' என்றான்.

லக்ஷ்மணன் எவ்வளவு தேறுதல் செய்ய முயன்றும் பயன்படவில்லை. சீதையை ராக்ஷசர்கள் தூக்கிச் சென்று உடலைப் பிய்த்துப் பிய்த்துத் தின்று விட்டார்கள் என்று தீர்மானித்து விட்டான். நர மாமிசம் தின்னும் அரக்கர்களிடம் அவள் படும் இம்சையைக் கற்பனை செய்து, அதை விரித்துச் சொல்லிச் சொல்லி அழுது கொண்டே இருந்தான்.

''நான் பெரும் பாவங்களைச் செய்தவனாக இருக்க வேண்டும். இல்லாவிடில் எனக்கு இவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்திருக்குமா? என்னுடன் வந்த சீதை அர்க்கர்களுக்கு உணவாகப் போனதை நான் சகிக்க வேண்டியதாயிற்றே! என்னைப் போன்ற பாபி உலகத்திலே வேறு ஒருவனுமில்லை'' என்றான்.

''அண்ணா, இப்படி நீ மன நிலையை இழந்து விடலாமா? தைரியத்தை இழந்தவர்கள் ஒரு முயற்சியையும் எடுக்க முடியாது. துக்கத்தை அடக்கியாண்டு மனத்தை ஸ்திரப்படுத்திக் கொள். விதியை முயற்சியால் வெல்ல வேண்டும். அப்படி வெற்றி பெறுவதற்கு மனத்தினின்று அதைரியத்தை விலக்கித் தைரியம் உண்டாக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறுதான் உலகத்தில் தைரியசாலிகள் காரியசித்தி அடைகிறார்கள். வனம் முழுதும் தேடிப் பார்ப்போம், சோகத்தில் மூழ்கிப் போகாதே! தைரியசாலிகளுடைய வழியைப் பின்பற்றுவோம்'' என்று லக்ஷ்மணன் பலவாறு சொல்லிப் பார்த்தான். ஆனால் ராமனுடைய அளவுகடந்த துயரத்தில் அது பயனில்லாமல் போயிற்று.

ராமன் தன்னை ஒரு மனிதனாகத்தான் கருதினான். தன்னை விஷ்ணுவாக அறியவில்லை என்பதற்கு இந்தக் கட்டம் சந்தேகமற்ற அத்தாட்சியாகும். சில இடங்களில் நிகழ்ச்சிகளும் பேச்சுக்களும் வேறு அபிப்பிராயத்துக்கு இடம் தந்தாலும், இந்தக் கட்டத்தில் வால்மீகி ராமனை மனிதனாகத்தான் வர்ணித்திருக்கிறார். உயிரைக் காட்டிலும் பிரியமான மனைவி அரக்கர்கள் நிறைந்த வனத்தில் காணாமற்போனால், மேம்பட்ட குணமுள்ள ஒரு புருஷன் எவ்விதம் நடந்து கொள்ளுவானோ, அந்த விதத்திலேதான் ராமனுடைய மனநிலையும் நடத்தையும் இருக்கக் காண்கிறோம். தம்பி ஆறுதல் கூறியும் பயன் ஏற்படாத நிலையில் ராமன் இருப்பதைக் காண்கிறோம்.

ராமாவதாரத்தில் சாதாரண தருமம் விளக்கப்படுகிறது. தருமத்தோடு வளர்ந்த காதல் எவ்வாறிருக்க வேண்டும் என்பதைப் பார்க்கிறோம். மனைவியின் காதலுக்குப் புருஷனுடைய காதல் குறைவாக இருக்கலாகாது என்பதை இந்தக்கட்டத்தில் நன்றாகப்பார்க்கலாம்.

இந்த நிகழ்ச்சிகளை ஆத்மீக முறையிலும் எடுத்துக் கொண்டு ஓரளவு பயன்படுத்திக் கொள்ளலாம். ஓர் ஆன்மா வழி தப்பிப் போனால் பகவானுடைய திருவுள்ளம் எந்த அளவில் துன்பப்படுகிறது என்று சீதா வியோகத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது என்றும் வைத்துக் கொள்ளலாம்.

பகவானுக்கு நஷ்டமேது, துன்பமேது என்று கேட்கலாம். சர்வம் பகவத் லீலை. எல்லாம் பகவானுடைய திருவிளையாடல் என்று உணர்ந்துவிட்டோமானால் ஒரு விமரிசனமும் அதற்கு மேல் வேண்டியதில்லை. பாவம் புண்ணியம், பக்தி இவையெல்லாம் அந்த லீலையில் ஒரு பாகம். ஆண்டவனுக்கு நாம் ஒவ்வொருவரும் காதல் மனைவியைப்

போலாவோம். நாம் எந்தக் காரணத்திலாவது வழிதப்பிப் போனால் ஆண்டவனுக்குக் காதல் மனைவியை இழந்த துக்கம் உண்டாகும். அந்தத் துக்கம் அவன் விளையாட்டில் ஒரு பாகம்.

## 53. மற்றொரு தகப்பன்

இரு சகோதரர்களும் மலையிலும் வனத்திலும் ஆற்றங் கரையிலும் தேடித் தேடி 'சீதா! சீதா!' என்று கூக்குரலிட்டுப் பார்த்து ஒன்றும் பயன்படவில்லை. ஒரு துப்பும் கிடைக்க வில்லை. இன்னது செய்வது என்று ஒன்றும் தோன்றாமல் துக்கத்தின் வேகத்தால் கோதாவரியையும் தேவதைகளையும் பஞ்சபூதங்களையும் ராமன் கூவிக் கூவிக் கதறினான். ஆறுகளுக்கும் தேவதைகளுக்கும் பஞ்ச பூதங்களுக்குமே ராக்ஷசேந்திரனிடம் பயம். அதனால் எந்த மலையும் ஆறும் வாயுவுங் கூடப் பதில் தரவில்லை என்கிறார் கவி முனிவர்.

ஒரு மான் கூட்டம் மட்டும் சைகையால் தெற்கு முகம் நோக்கிப் போய்த் தேடுங்கள் என்று குறிப்பிட்டதாக அறிந்து ராம லக்ஷ்மணர்கள் தெற்கு நோக்கிச் சென்றார்கள். அங்கே வழியில் ஓரிடத்தில் புஷ்பங்கள் தரையில் சிதறிக் கிடப்பதைக் கண்டார்கள்.



அதைக் கண்டதும், ''இதோ நான் கொடுத்த புஷ்பம் ! சீதையின் தலையி லிருந்து உதிர்ந்த புஷ்பமே'' என்று ராமன் துப்பு அறிந்து உற்சாகமும் கூடவே துயரமும் அடைந்தான். சீதைக்கு என்ன நேர்ந்து விட்டதோ என்கிற பயம் முன்னைவிட அதிகமாய் விட்டது. கதறிக் கதறி அழுதான்.

புஷ்பங்கள் கிடந்த இடத்தைச் சுற்றிக் காட்டில் தேடிப் பார்த்தார்கள். பூமியில் ராக்ஷசேந்திரனுடைய பெருங் காலடிச் சுவடுகளும் சீதையின் காலடி பதிந்த குறிப்புக்களும் கண்டார்கள். சீதையின் ஆபரணங்களிலிருந்து சிந்திக் கிடந்த தங்கமணிகளையும் கண்டார்கள். அவற்றைப் பார்த்து ராமன், ''பார்த் தாயா, அவளைப் பிடித்துத் தின்பதற் காக அரக்கன் துரத்தித் துரத்தி ஹிம்சித்திருக்கிறான்!'' என்று சொல்லிப் பிரலாபிக்கலானான்.

பிறகு உடைந்து கிடந்த தேரின் பல பாகங்களைக் கண்டார்கள். ரத்தம் சிந்தியிருப்பதையும் கண்டார்கள். ராக்ஷசேந்திரனுடைய தலைப்பாகையும் ஆபரணங்களும் தரையில் சிதறிக் கிடப் பதைப் பார்த்தார்கள்.

'இது என்ன?' என்று திகைத்து யோசிக்கலானார்கள். ஒடிந்த பெரிய வில்லையும், கிழிந்து போய்க் கிடந்த தேர்க் கொடிகளையும், கவசத்தையும் கண்டார்கள். பிறகு சாரதியும் ரதத்தை இழுத்த பூதக் கழுதைகளும் செத்துக் கிடப்பதைக் கண்டார்கள். பெரிய தொரு யுத்தம் அந்த இடத்தில் நடந் திருப்பதாகப் பல சின்னங்களால் அறிந்தார்கள்.

''சீதையின் உடலைத் தின்பதற்காக இரு அரக்கர்கள் தங்களுக்குள் பெருஞ் சண்டையிட்டிருக்கிறார்கள்'' என்றான் ராமன்.

இப்படி நானாவிதமாக கணித்துக் கொண்டு, ''தருமம் சீதையைக் காப் பாற்ற வில்லையே ! எந்த தெய்வமும் அவள் துணைக்கு வந்து நிற்கவில்லையே? இந்த உலகத்தை அழித்து விடுவதே சரி. நான் கற்ற அஸ்திரங்கள் பயன்படாமல் போகுமா, பார்க்கலாம்!'' என்றான் ராமன். தன் மன நிலையை முற்றிலும் இழந்து இவ்வாறு பேசினான்.

ராமனுடைய மனக் குழப்பத்தையும் ஆற்றாமையையும் கண்டு தம்பி லக்ஷ்ம ணன் தைரியம் சொல்லிக் கொண்டே வந்தான். ''பெருந் துயரம் ஏற்பட் டால் எல்லாருக்குமே மனம் கலங்கிச் சுவாதீனமற்றுப் போய் விடுகிறது. சகஜமாக உனக்குள்ள குணங்களை ஏன் விட்டு விட்டாய் ? உலகத்தையெல் லாம் வெறுக்கவோ கோபிக்கவோ காரணமில்லை. ஒருவன் செய்த துஷ்டச் செயலை வைத்து நாம் உலகத்தையெல் லாம் பழிக்கலாமா? முந்தியெல்லாம், அண்ணா, என்னை நீ சாந்தப்படுத்திச் சரி யான மார்க்கத்தில் நிறுத்திக் காப் பாற்றி வந்திருக்கிறாயே! உன் மனம் பெருந் துயரத்தால் கலங்கிப் போயிருக் கிறபடியால் சிறுவனாகிய நான் உனக் குத் தைரியம் சொல்ல வேண்டியதா யிருக்கிறது. உன்னுடைய இயற்கைத் தைரியத்தை நான் தட்டி எழுப்பு கிறேன். உலகத்தை வெறுப்பது நியாய மல்ல. நம்முடைய பகைவன் யார் என் பதைக் கண்டுபிடித்துப் பிறகு செய்ய வேண்டியதைச் செய்வோம்.''

இவ்வாறு லக்ஷ்மணன் ஆறுதலும் தைரியமும் தரக்கூடிய மொழிகளைப் பிரியமாகச் சொல்லிக் கொண்டே சென் றான். கொஞ்ச தூரம் சென்றதும் தரை யில் அசையாமல் குற்றுயிராய்க் கிடந்த ஜடாயுவைக் கண்டார்கள். சிறகுகள் வெட்டப்பட்டு உயிர் போகும் நிலையில் தரையில் கிடந்த பறவையைத் தூரத்தி லிருந்து பார்த்த ராமன் யார் என்று தெரிந்து கொள்ளவில்லை. அது ஓர் அரக்கன், மாய வேஷம் போட்டுக் கொண்டு தங்களை ஏமாற்றுவதற் காகவே அப்படித் தரையில் கிடப்ப தாக எண்ணினான். மாரீசன் செய்த மோசம் ராமன் மனத்தை இவ்வாறு எண்ணச் செய்தது. மகா கோபாவேச மாக, ''அதோ, அரக்கன்! சீதையைத் தின்றுவிட்டுப் படுத்திருக்கிறான்'' என்று சொல்லி வில்லும் அம்புமாகப் பறவை யிருந்த இடம் பாய்ந்தான்.

அப்போது ஜடாயு தீனமான சுவரத் தில், ''அப்பா, ராமனே! என்னை நீ கொல்ல வேண்டாம். என் உயிர் இன் னும் ஒருகணம்தான் இருக்கும். நீ இந்த வனத்தில் தேடித் தேடி அலைகிற உன் தேவியானவள் ராவணனால் தூக்கிப் போகப்பட்டாள். அத்துடன் என் உயிரையும் தூக்கிச் சென்று விட்டான். சீதா தேவியைத் தன் மாய ரதத்தில் தூக்கிச் செல்லுவதைப் பார்த்த நான் தடுத்து அவனுடன் போர் செய்தேன். அவன் வில்லையும் ரதத்தையும் உடைத் துப் பொடியாக்கினேன்; அவனுடைய சாரதியையும் வதம் செய்தேன். தரை யில் கிடப்பதெல்லாவற்றையும் பார். அந்த யுத்தத்தின் சின்னங்கள். முடிவில் ராக்ஷசன் நான் களைப்பாயிருந்த சமயம் பார்த்து என் சிறகுகளைக் கத்தியால் வெட்டி என்னை வீழ்த்தி விட்டான். சீதையைத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாய்ச் சென்று விட்டான். சிறகு களை இழந்து தரையில் கிடந்த என்னால் அதற்கு மேல் ஒன்றும் செய்ய முடிய வில்லை. உயிரை இவ்வளவு நேரம் வைத் துக் கொண்டிருந்து உனக்கு விஷயம் சொன்னேன்'' என்றான். (தொடரும்)

# காணக் கிடைக்காத தங்கம்

## அத்தியாயம் எட்டு

திக்பிரமை பிடித்த நிலையில் ஒன்றுமே சொல்லத் தோன்றாதவனாய்த் திருதிருவென விழித்தபடி இயந்திரப் பதுமைபோல் செல்லத்துரையைப் பின்தொடர்ந்தான் அருணகிரி. இருவரும் ஒரு மேசைக்குப் போய் எதிரெதிரே அமர்ந்தனர்.

விலை மிகுதியான தித்திப்பு, காரம் வகையறாக்களுக்கு ஆர்டர் கொடுத்தான் செல்லத்துரை. எல்லாம் வந்தன. இருவரும் ரசித்து உண்டு, காப்பியும் பருகினர். பில் பணம் ஆறு ரூபாய்க்கு மேல் ஆகியது.

சாக்கடையில் ஒரு பைசா விழுந்து போனாலும் கையை விட்டுத் துழாவத் தயங்காத கஞ்சப் பேர்வழி ஏழுமலை. அவனுடைய மகனா இவ்வளவு தாராளமாகச் செலவு செய்கிறான்? ஆச்சரியத்தால் அருணகிரிக்கு உச்சிக் கேசம் விடைத்துக் கொண்டது.

பில் பணத்தைக் கொடுத்து விட்டு வெளியே வந்த செல்லத்துரை தன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடக்கலானான்.

''நீ எங்கே அருண்? வசந்த நகருக்குத்தானே போகணும்?''

''ஆமாம்......'' என்று மெல்ல இழுத்தான் அருணகிரி.

''என்னப்பா, இவ்வளவு நேரமும் நானே பேசிக் கொண்டிருக்கிறேன்; நீ வாயே திறக்க மாட்டேன் என்கிறாயே!'' என்று கூறிச் சிரித்தான் செல்லத்துரை.

''அ.....அதெல்லாம் ஒண்ணுமில்லே'' என்று தடுமாறிக் குழறினான் அருணகிரி. இதற்கு மேலும்



ஜெகசிற்பியன்

தான் வாயை மூடிக்கொண்டு பேசாமலிருப்பது அழகல்ல என்று அவனுக்குத் தோன்றியது. தொண்டையை மெல்லக் கனைத்தபடி, ''இப்ப நீ பி. யு. சி. தானே படிக்கிறே?'' என்று கேட்டான்.

''எஸ்....''

''ஏ. குரூப்பா? பி. குரூப்பா?''

''பி.குரூப்தான். நேச்சுரல் சையன்ஸ் எடுத்துக்கிட்டு இருக்கிறேன்.''

''டாக்டராகணும் என்கிற நோக்கமா ?''

''இனிமேல்தான் அப்படி ஒரு நோக்கத்தை உண்டு பண்ணிக்கொள்ளணும்!'' என்று சொல்லிச் சிரித்தான் செல்லத்துரை.

இனி, அடுத்து என்ன கேள்வி கேட்கலாம் என்ற யோசனையில் ஆழ்ந்தான் அருணகிரி.

சைக்கிளைத் தள்ளியவாறு நடந்து கொண்டிருந்த செல்லத்துரை தன் கைக் கடிகாரத்தில் மணி பார்த்தான். ஆறே முக்கால் ஆகியிருந்தது. அது பகல் பொழுது மிகுதியான காலம். அதனால் இன்னமும் இருட்ட வில்லை; மசக்கை மட்டுமே தட்டியிருந்தது. சாலை விளக்குகள் எரியத் தொடங்கி விட்டன.

திடுமென ஏதோ நினைத்துக்கொண்டவன் போல் கைவிரலைச் சொடுக்கி முன் பல்லில் வைத்துக் கடித்துக் கொண்டு நின்றான் செல்லத்துரை. இதைக் கண்ட அருணகிரியும் தயங்கி நின்றான். ஹோட்டலில் எதையாவது மறந்து வைத்துவிட்டு வந்து விட்டானோ என்ற சந்தேகம் அவனுக்கு.

செல்லத்துரை தன் கால்சராய் ஜேபியை அவசரமாகத் தட்டித் தொட்டுப் பார்த்தான். பிறகு நீல நிறக் கடித உறை ஒன்றை வெளியே எடுத்து அதைத் திருப்பித் திருப்பி நோக்கினான். வாய்ப்புறம் ஒட்டப்பட்டிருந்த அந்த உறையில் ஏதோ பெயர் மட்டும் எழுதப்பட்டிருந்தது. முகவரி இல்லை. தபால் தலையும் காணப்பட வில்லை.

சட்டென்று திரும்பிய அவன் அருணகிரியைப் புன்முறுவலுடன் பார்த்து, ''அருண்! எனக்கு நீ ஓர் உதவி செய்யணும்; செய்வாயா ?'' என்று சற்றே பரபரப்புடன் கேட்டான்.

ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்த அருணகிரி, ''உதவியா?....'' என்று இழுத்தான்.

'ஆம்' என்பது போல் தலையாட்டிய செல்லத்துரை, ''என்ன மோசமான ஞாபக மறதி எனக்கு!'' என்று நெற்றியில் உள்ளங் கையால் தட்டிக் கொண்டு விட்டு, ''இதற்குத்தான் நான் இந்த மாதிரி காரியங்களையெல்லாம் செய்ய ஒப்புக் கொள்வதில்லை'' என்றான் எரிச்சலும் சலிப்புமான குரலில்.

''என்ன துரை, நான் என்ன செய்யணும் ?'' என்று துடிப்புடன் வினவினான் அருணகிரி.

''ஒண்ணுமில்லே, பிரதர்! என்னோட காலேஜ் லெக்சரர் ஒருவர் ஒரு கடிதாசியைக் கொடுத்து அதை அவருடைய நண்பர் ஒருவரின் வீட்டிலே கொடுக்கும்படி சொன்னார். அந்த நண்பர் இன்னைக்கு ராத்திரி எட்டு மணி பிளேன்லே மெட்ராஸ் போகிறாராம். மெட்ராசில் அவருடைய வீட்டுக்குப் பக்கத்து வீட்டில்தான் இந்த லெக்சரரின் மாமனார் குடியிருக்கிறாராம். ஏதோ அவசர சமாசாரம் இந்தக் கடிதாசியிலே இருக்குதாம். தபாலில் போட்டால் நாளைக்குத் தானே கிடைக்கும்? அதனால் இது இன்னைக்கே கிடைக்கணும் என்கிறதுக்காக அவர் மூலம் கொடுத்தனுப்பறாராம். மறந்துவிடாமல் ஆறரை மணிக்கெல்லாம் கொண்டு போய்க் கொடுத்து விடும்படி என்னைக் கேட்டுக் கொண்டார். நான் மறந்துட்டேன். வேறொரு காரியமா போக வேண்டியிருந்ததாலே அது மறந்தே போச்சு. இப்ப மணி ஆறே முக்கால்....''

''அடடா! அப்ப, என்ன செய்யப் போறே ?''

'' நேரமாயிட்டாலும் கொண்டு போய்க் கொடுத்துடணும்....''

''நான்தானே?.... ஓ. கொடுத்துடறேனே!''

''நீ ஏதோ அவசரமா வீட்டுக்குப் போறேன்னு நினைக்கிறேன்.''

''அதெல்லாம் இல்லே! அதை எங்கே, எந்த வீட்டில், யார்கிட்டே கொடுக்கணும், சொல்லு ?''

''கேவல்ரி ரோட்டிலே, இஞ்சினீயர் ராமசந்திரன்னு பித்தளை போர்டு மாட்டிய ஒரு வீடு இருக்கும். நேரா உள்ளே போ. வீட்டு வாசலிலோ, ஷெட்டிலோ கார் இருந்தால் இந்தக் கடிதாசியை யார்கிட்டேயும் கொடுக்காதே. திருப்பி எடுத்து வந்து விடு. கார் இல்லேன்னா, வீட்டில் இருக்கிறவங்களைக் கூப்பிட்டுக் கொடுத்து விடு.''

இதைக் கேட்டு உள்ளூற வியப்படைந்த அருணகிரி, ''ஏன் அப்படி?'' என்று இழுத்தாற்போல் வினவினான்.

''என்னமோ தெரியலே. அந்த லெக்சரர் அப்படித்தான் என்னிடம் சொன்னார். ஒரு வேளை, வீட்டிலே கார் இருந்தால் இஞ்சினீயர் மெட்ராசுக்குப் புறப்பட்டுப் போயிட்டார்னு

அர்த்தம் போல் இருக்கு! அதாவது, அவரை விமான நிலையத்திலே விட்டுட்டுக் கார் திரும்பி வந்திருச்சுன்னு அர்த்தம். கார் இல்லேன்னு?.... அது என்ன எழவோ, ஒண்ணும் புரியலே!'' என்று சலிப்புடன் முணுமுணுத்தான் செல்லத்துரை.

''சரி; நீ சொன்னப்படியே கொடுத்துடறேன்'' என்றவாறு அவசரமாக அந்தக் கடிதக் கவரை வாங்கிக் கொண்டான் அருணகிரி.

''நடந்தா போறேங்கிறே ?''

''ஏன்?....இதோ, இப்படி நேராப் போய் வலது பக்கம் திரும்பினால் கேவல்ரி ரோடு !.... மூணு பர்லாங்கு தூரம்தானே ?''

'' ஆமாம்; ஆனாலும் நடந்து போனால் நேரமாகி விடும்; இந்தா, இந்தச் சைக்கிளில் போய் வா ! சைக்கிளை உன் வீட்டிலேயே வைச்சிருந்து நாளை காலம்பற நம்ப கடையிலே கொண்டு வந்து விட்டு விடு.''

''நீ?... நீ எப்படி ?....''

''நான் நடந்தே போயிடுவேன். வீடு கிட்டத்தானே?'' என்று சிரித்த செல்லத்துரை, ''ஞாபகம் இருக்கட்டும், அருண்! அந்த வீட்டிலே கார் இருந்தால் கடிதத்தை யாரிடமும் கொடுக்காதே! இல்லேன்னுதான் கொடுக்கணும்!'' என்றான். மீண்டும் அவன், ''இன்னும் ஒரு விஷயம். அதாவது.... இவ்விஷயத்தை நாளைக்கு என் அப்பாக்கிட்டே சொல்லாதே! அவருக்கு இதெல்லாம் பிடிக்காது. புரிஞ்சுக்காமலே எதனைச்சும் காச்சு மூச்சுன்னு கத்துவார்'' என்று கூறிச் சிரித்தான்.

''அது சரி'' என்று தலையாட்டிய அருணகிரி அந்தக் கடிதத்தை வாங்கிச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு உற்சாகத்துடன் சைக்கிளில் ஏறி விரைந்தான்.

அது பெரிய வீடுதான். அழகாகக் கட்டப்பட்ட புதிய வீடு. கீழே ஒன்பது அறைகளும், மாடியில் நான்கு அறைகளும் இருக்குமென்று ஊகிக்க



முடிந்தது. வீட்டின் பின் பக்கவாட்டில் மதில் சுவரை ஒட்டி 'அவுட் ஹவுஸ்' ஒன்றும் இருந்தது. அதற்குப் பக்கத்தில் கார் ஷெட். வீட்டின் எதிரே கண்ணைக் கவரும் பூச்செடிகள். இரு பக்க மதில் சுவர்களின் ஓரம் கொய்யா, மாதுளை முதலான மரங்கள் வரிசையாய் வளர்ந்திருந்தன. ஏற்கனவே இங்கு இருந்த ஒரு பழைய வீட்டை இடித்து விட்டு இப்புதிய வீடு கட்டப்பட்டிருப்பதாகத் தெரிந்தது. சுமார் இரண்டு கிரவுண்ட் நிலப் பரப்பு இருக்கும். வீட்டுச் சொந்தக்காரர் கன்னடக்காரராய் இருக்க வேண்டும். அவருடைய பெயர் கன்னட மொழியில் காம்பவுண்ட் வாயில் சுவரிலே சலவைக் கல்லில் பொறிக்கப் பெற்றிருந்தது. அதற்கு மேலே தொங்கிய பித்தளை போர்டில், 'டி. ராமச்சந்திரன், பி. இ.' என ஆங்கிலத்தில் காணப்பட்டது. அவர் இந்த வீட்டில் வாடகைக்குக் குடி யிருப்பவர் போலும்.

அந்த வீட்டில் நுழை வாயிலுக்கு வெளியிலேயே சைக்கிளை விட்டு இறங்கிக் கொண்ட அருணகிரி சற்றே தயங்கி நின்று சுற்றுமுற்றும் நோக்கினன். பிறகு, உள்ளே வீட்டின் போர்டிகோவிலோ, கார் ஷெட்டிலோ கார் நிற்கிறதா என்று கூர்ந்து பார்த்தான். கார் இல்லை.

'அப்படியானுல் உள்ளே போய் யாரையாவது கூப்பிட்டுக் கடிதத்தைக் கொடுத்துவிட வேண்டியதுதான்.'

சட்டைப் பையில் இருந்த கடிதக் கவரை எடுத்து அதில் எழுதப்பட்டிருந்த பெயரைப் படித்தான்.

'மிஸ். நிர்மலா தேவி.'

செல்லத்துரையின் காலேஜ் லெக்சரருடைய மகளின் பெயராகவோ அல்லது மைத்துனி, அல்லது தங்கை பெயராகவோ அது இருக்கலாம் என்று அவன் எண்ணிக் கொண்டான்.

கடிதத்தை இடது கையால் பிடித்தபடி வலது கையால் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நுழை வாயிலைக் கடந்து உள்ளே சென்ருன்.

பூஞ்சை இருள் பூசத் தொடங்கி விட்ட நேரம். அந்த வீட்டின் போர்டிகோவிலும், உள்ளே இரண்டு மூன்று அறைகளிலும் மட்டும் விளக்கு எரிவது தெரிந்தது. வாசற் கதவு சாத்தப்பட்டிருந்தது. ஓர் அறையில் சிறு பிள்ளைகளின் பேச்சுக் குரல்கள் கேட்டன.

அருணகிரி தன் சைக்கிள் மணியை அடித்தான். ஓரிரு விநாடிகளில் கதவு திறக்கப்பட்டது. உள்ளிருந்து ஓர் அழகிய இளம் பெண் வராந்தாவுக்கு வந்தாள்.

அவளைப் பார்த்த அருணகிரி ஏதோ மின் அதிர்ச்சியால் தாக்குண்டவன் போல் மிரண்டு நடுங்கிப் பின்னுல் நகர்ந்து, அதே வேகத்தில் மீண்டும் தன் பார்வையை மேலே உயர்த்திஞன். சந்தேகமில்லை; அவள் — அந்தச் சல்வார் — கம்மீஸ் சுந்தரியேதான்!

## அழுகையிஸம்-1

நிருபர்: நாட்டிலே எங்கே பார்த்தாலும் கொலையும் கொள்ளையுமா அராஜகம் தாண்டவமாடறதே?

உள்நாட்டு மந்திரி: அதற்குத் தான் பாராளுமன்றத்திலே அழுதுட்டேனே; அதற்கு மேலே என்ன செய்யச் சொல்றே?



## அழுகையிஸம்-2

வாத்தியார்: என்னடா மிரட்டறே? பாஸ் போடலேன்னு என்ன, கேரோ பண்ணுவியோ?

மாணவன்: இல்லே, அழுவேன்!



## அழுகையிஸம்-3

பாட்டு வாத்தியார்: ஏன்டி? தேசத்திலே எல்லாரும் அழுகையிஸத்தைக் கடைப்பிடிக்கிறுளே போதாதா? நீ வேறே ஏன்டி அழுது என் கழுத்தை அறுக்கிறே?



அவளும் அவனைக் கண்டு ஒருகணம் மிரட்சி அடைந்து விட்டாள் என்றே தோன்றியது. கண்ணிமைகள் படபடக்க அவனை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்த படி அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

உடனே தன்னைச் சமாளித்துக் கொண்ட அருணகிரி தன் சைக்கிளை ஸ்டாண்டு போட்டு நிறுத்தினான்.

தனது அழகிய புருவக் கொடிகளை நெற்றி மேட்டில் ஏற்றியவாறு சற்றே முன்னால் வந்த அந்தப் பெண் ஒருவித அலட்சிய மிடுக்குடன் நிமிர்ந்து, "என்ன?" என்று கேட்டாள் அதட்டலான குரலில்.

பயந்து போன அருணகிரி அதை மறைக்க அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு, "ஒன்னுமில்லே!... வந்து இது.. இதைக் கொடுத்துட்டு...இல்லே ...கொடுக்கும்படி....." என்று குழறிக் கொண்டே தன் கையிலிருந்த கடித உறையை அவளிடம் நீட்டினான்.

அவள் முகம் வெளிறிச் சிறுத்தது. தன்னை மீறிய பயத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தபடி வெடுக்கென்று அந்தக் கடிதத்தைப் பிடுங்கிக் கொண்டாள்.

"அப்போ... நான் வர்றேன்!... வர்றேன்!..." என்று கூச்சப் புன்முறுவலுடன் தலை குனிந்து உளறிக் கொண்டே தன் சைக்கிளைத் தள்ளிக் குதித்து ஏறிக் கொண்டு வேகமாக ஓட்டிச் சென்று விட்டான் அருணகிரி.

அந்த வீட்டின் நுழை வாயிலைக் கடந்து சாலையில் ஏறிச் சற்றுத் தூரம் சென்ற பிறகுதான் திடுமென்று ஓர் எண்ணம் அவனுக்குத் தோன்றியது.

'ஐயையோ! அந்தக் கடிதாசியை யார், எவர் மூலம் கொடுக்கச் சொல்லிக் கொடுத்தது என்ற விவரத்தை அவளிடம் நான் சொல்ல வில்லையே! அவளைப் பார்த்த அதிர்ச்சிக் குழப்பத்தில் ஒன்றுமே கூறாமல் ஓடி வந்து விட்டேனே! மறுபடியும் போய் அந்தத் தகவல்களைச் சொல்லிவிட்டு வரலாமா?'

தயக்கத் திகிலுடன் சைக்கிள் வேகத்தைக் குறைத்துத் திருப்பிய அவன், அந்த வீட்டினுள்ளே அப்போதுதான் ஒரு கார் புகுந்து செல்வதையும், அக் காரினுள் நன்றாக உடை உடுத்தியிருந்த பெரிய மனிதர் ஒருவரும், ஓர் அம்மாளும் உட்கார்ந்திருப்பதையும் கண்டு சட்டென்று கீழே குதித்து இறங்கிக் கொண்டான்.

'ஓ... இவர்தான் இஞ்சினீயர் ராமச்சந்திரன் போலும்! அவர் அருகில் இருப்பவள் - அவருடைய மனைவியாயிருக்கலாம். அந்தப் பெண் இவர்களின் மூத்த மகளா? அப்படித்தான் இருக்க வேண்டும். அது சரி; இந்த இஞ்சினீயர் இன்னமும் விமான நிலையத்துக்குப் புறப்படவில்லையா? நல்ல வேளை, நான் கொடுத்து விட்டு வந்த கடிதம் அவர் கையில் கிடைத்து விடும்.'

மகிழ்ச்சியுடன் தலையாட்டிக் கொண்ட அவன், 'இனி ஏன் அந்த விவரங்களைச் சொல்ல அவ்வீட்டுக்குப் போக வேண்டும்? அதையெல்லாம்

---

## அழுகையிஸம்-4

"அழாமல் என்ன செய்ய? புடவைக்குப் பணம் கொடுக்கலையே!"

"இதோ பணத்தைக் கொடுத்து அழறேன். வாங்கிக்கோ."



## அழுகையிஸம்-5

"டேய்! என்னடா இப்படி மூக்காலே அழறே?"

"இரண்டு நாளா கண் சரியா இல்லீங்க!"



## அழுகையிஸம்-6

ஒருவர்: என்ன இது, கூவம் சீரமைப்புத் திட்டம் அதற்குள் முழுமையாக நிறைவேறி விட்டதா, என்ன?

மற்றொருவர்: இல்லே, இல்லே, அழுகையிஸம் காரணமாக மக்களுடைய கண்ணீர் கூவத்தில் பெருக்கெடுத்து ஓடுகிறது!



அவர்களே புரிந்து கொள்வார்கள்!' என்று தீர்மானித்தவனாய்ச் சைக்கிளில் ஏறித் தன் வீட்டை நோக்கிப் பறந்தான்.

ஆமாம்; அவனுடைய சைக்கிள் பறப்பதாகத்தான் தோன்றியது. அளவு கடந்த உற்சாகம் பிறந்து விடவே அவ்வளவு வேகமாக அதை ஓட்டிச் சென்றான் அவன். ஏன் இத்தனை உற்சாக மகிழ்ச்சி அவனுக்கு? அந்த அழகு சுந்தரியை அவளது வீட்டுக்கே போய்ச் சந்தித்து விட்டதாலா?

நேற்றுப்போலவே இன்றும் இரவுச் சாப்பாட்டுக்குப் பின் அலமாரி மறைப்பில் உட்கார்ந்து கொண்டு தனது பழைய பாடப் புத்தகங்களைப் படிக்கத் தொடங்கினான் அருணகிரி. இவ்வாண்டு செப்டம்பர் பரீட்சையில் உட்கார்ந்து எப்படியும் எஸ். எஸ். எல். ஸி.யில் தேறிவிட வேண்டும் என்ற தீர்மானம் நேற்றைக் காட்டிலும் இன்று அவன் மனத்திலே ஓர் ஆவேச வேட்கையுடன் உறுதிப்பட்டுக் கொண்டிருந்தது. இதற்காகச் சென்னைக்குச் செல்வதென்றும் திட்டமிட்டுக் கொண்டான். இதைத் தொடர்ந்து பல இனிப்பும் கசப்புமான கேள்விகள் அவன் மனத்தை உருட்டிப் புரட்டின.

கொஞ்ச நேரம் படிப்பதை நிறுத்தி விட்டு யோசனையில் ஆழ்ந்தான். பிறகு, சென்னைக்குப் போவது பற்றிய தன் சிந்தனையை ஒருவாறு ஒதுக்கி விட்டு, இவ்வாண்டு தான் படித்து உயர் நிலை பள்ளிப் படிப்பின் இறுதிப் பரீட்சை எழுத வேண்டும் என்ற தீர்மானத்தை இன்று இன்னும் வலுவாக்கிக் கொண்டதற்கான காரணத்தை ஆராய்ந்து அறிவதில் முனைந்தான்.

'ஓ.... இன்று மாலை அந்த இஞ்சினியர் வீட்டுப் பெண்ணைப் பார்க்க நேர்ந்ததாலா?'

'ஆம்' என்று அவன் மனம் அங்கீகரித்த மறுவினாடியே ஒருவித பயம் பிடித்து அவனை உலுக்கிக் குலுக்கியது.

அந்தப் பெண் குடியிருக்கும் பங்களா, அதன் செல்வச் செழிப்பான தோற்றம், கார், அவளது பகட்டான நடை உடை பாவனைகள், அவளுடைய பெற்றோரின் உயர் அந்தஸ்து — இவற்றையெல்லாம் நேருக்கு நேர் பார்த்து விட்டு வந்ததை நினைவு படுத்திக் கொண்டதாலேயே அவனுள் அத்தகைய அச்சம் சூழ்ந்து அழுத்தியது.

'என்ன இது, பைத்தியக்காரத்தனம்! அவளுக்காக நான் படிப்பதாவது? அவள் யார், நான் யார்? ஈச்சை மரத்தின் உச்சி மட்டையில் கூடு கட்டி ஊஞ்சலாடும் தூக்கணாங்குருவியோடு பாறை இடுக்கில் பதுங்க இடம் தேடிக் கொண்டு கட்டாந் தரையைக் கொத்திக் காலம் தள்ளும் தவிட்டுப் புறா போட்டியிட முடியுமா? இந்தக் காலத்தில் கேவலம் ஓர் எஸ். எஸ். எல். ஸி. படிப்பையாவது ஒருவன் முடிக்காவிட்டால் ஏழுமலை போன்ற கைநாட்டுப் பேர்வழிகள்கூட அவனை மதிக்காமல் நாயைவிடக் கேவலமாக நடத்துவார்கள் என்பதை அநுபவபூர்வமாகப் புரிந்து கொண்டுதானே இந்த முயற்சியில் ஈடுபட்டேன்? இம்முயற்சியில், நான் வெற்றி பெற்று விட்டால் அந்தச் சைக்கிள் ரிப்பேர்க் கடையில் வேலை செய்வதை விட்டொழித்து விட்டு, வேறு ஏதாவது கொஞ்சம் கௌரவமான வேலையாகத் தேடிக் கொள்ளலாம் என்று நேற்று போட்டுக் கொண்ட திட்டத்தை இதற்குள்ளாக அடியோடு மறந்துவிட்டு வேறு ஏதேதோ கற்பனை பண்ண ஆரம்பித்து விட்டேனே!'

தன்னையே வெறுத்துக் கொள்பவன் போல் முகத்தைச் சுளித்து மூக்கைச் சொறிந்து கொண்ட அருணகிரி, தன் கையிலிருந்த புத்தகத்தைப் பிரித்துப் படிப்பதில் கவனம் செலுத்தலானான்.

ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் மறுபடியும் அவன் மனம் பாடப் புத்தகத்திலிருந்து பெயர்ந்து கொண்டு வேறு திக்கில் நழுவிப் போகத்தொடங்கியது. ஆமாம்; அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண்தான் இப்போது அவன் நினைவிலே வந்து நுழைந்து கொண்டாள்.

அவளைப் பற்றி நினைப்பதிலே அவனுக்கு எவ்விதத் தயக்கமோ, நிலை தாழ்மை உணர்ச்சியால் எழும் பிரமிப்போ ஏற்படவில்லை. மாறாக, புத்தம் புதிய ஒரு வகை இன்பம் கலந்த நேச உறவே நெஞ்சமெங்கும் வியாபித்துக் கிளுகிளுப்பு ஊட்டியது.

அவளுடைய மிரளும் விழிகள், பயத்தால் குமுறி வெளிப்பட்ட பேச்சு, அப்பேச்சுக் குரலில் இழைந்துகுழைந்த இனிமை, கூச்சத்தால் குறுகி உயர்ந்த தோள்கள்; — இவற்றுக்கிடையே பருவத்தின் மதமதர்ப்போடு கூடிய நெஞ்சக அசைவுகளுடன், ஒயிலும் ஒய்யாரமுமாக அவள் நடந்து சென்ற நடை அழகு—இவ்வளவையும் நினைத்து நினைத்து, ஒரு புதிய உலகுக்கே சஞ்சரிக்கப் போய் விட்டான் அவன்.

(தொடரும்)





- பல்கலைக் கழக தேர்வு மண்டபத்தில் நடைபெற்ற சர்வோதயப் பொருட்காட்சியின் முகப்பு.
- கிராமதான கிராமவாசிகளின் ஊர்வலம்.
- கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் உரை.

# சர்வம் சர்வோதயம்

மாநிலக் கல்லூரியின் கிரிக்கெட் விளையாட்டு மைதானத்தில் மாபெரும் பந்தல் உருவாகி நிற்கிறது. ஒரே நேரத்தில் மூவாயிரம் பேருக்கு மேல் உட்கார வசதியாகக் கீழே புதுச் சணல் சாக்கு விரிப்புக்கள் போடப்பட்டிருக்கின்றன. பந்தலில் அமர்பவர்கள் தாகத்தால் தவிக்காமலிருக்க ஆங்காங்கு குளிர்ந்த நீர் நிறைந்த மண்பானைகளும் குவளைகளும் காணப்படுகின்றன.

பந்தலின் தென் கோடியில் பெரிய அளவிலான பிரசங்க மேடை. அந்த மேடையின் இடது பக்கத்தில் மகாத்மாஜியின் அமைதியான படம். அதைச் சுட்டிக் காட்டுவதுபோல் கையை நீட்டிக் கொண்டிருக்கும் வினோபாஜியின் உருவம் வலது பக்கத்தில்.

சாரி சாரியாகக் கிராமப்புறத்து மக்கள் ஆண்களும் பெண்களுமாக, தலையிலும் கையிலும் இடுப்பிலும் மூட்டை முடிச்சுக்கள் அலங்கரிக்க, மரீனாக் கடற்கரையை ஒட்டி அமைக்கப்பட்டிருக்கும் நுழைவு வாசல் வழியாக உள்ளே வந்து பந்தலில் அமர்கிறார்கள். ஒரு கணம் நாம் சென்னை நகரில்தான் இருக்கிறோமா, இல்லை செந்தாமரைப்பட்டி கிராமத்துக்கு வந்திருக்கிறோமா? என்ற ஐயப்பாடு மனத்தில் எழுகிறது. ஆனால் மரீனா சாலையில் விருட் விருட்டென்று ஓடிக் கொண்டிருக்கும் சிவப்பு வர்ண நகரப் போக்குவரத்து பஸ்கள் நாம் சென்னையில்தான் இருக்கிறோம் என்று நினைவூட்டுகின்றன.

பல நாட்களாகத் தொடர்ந்து மக்களை வாட்டி எடுத்த கதிரவன் கூடக் கருணை கொண்டு தலைமறைவாகப் போகவே, இதமான மந்தாரச் சூழ்நிலை மனத்துக்குத் தெம்பை அளிக்கிறது.

இந்த நிலையில்தான் ஒன்பதாவது தமிழ் நாடு சர்வோதய மகாநாடு ஆரம்பமாகிறது.

இந்த மகாநாடு கிராமப்புறங்களை விட்டுச் சென்னை நகரத்துக்கு வந்திருப்பது இதுதான் முதல் தடவை.

இதேபோல மாநிலக் கல்லூரியின் கிரிக்கெட் மைதானத்தில் பந்தல் எழுப்பி ஒரு நிகழ்ச்சி நடத்துவதும் இதுதான் முதல் தடவை!

அதோ வரவேற்புக் குழுத் தலைவர், பொள்ளாச்சித் தொழிலதிபர் என். மகாலிங்கம் உரையாற்ற வந்துவிட்டார்.



நாமும், சர்வோதயப் பணியைத் தொண்டர்கள் எந்தெந்த விதங்களில் செய்கிறார்கள் என்பதை மகாநாட்டுக்கு வந்திருக்கும் சில பிரதிநிதிகளிடமிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இவர்தான் திரு பி. மகாலிங்கம். மன்னார்குடி தாலுக்காவைச் சேர்ந்த இடைக்காங்கோட்டை மேலையூரைச் சேர்ந்தவர். 1952 லிருந்து அவர் இந்த மாதிரி கிராம சேவையில் ஈடுபட்டிருப்பவர். ''பூதான இயக்கத்திலே மக்கள் ஆர்வம் காட்டறாங்க. தானமாகக் கொடுக்கும் நிலங்கள் அநேகமாக விவசாயத்துக்கு ஏற்ற வளமான நிலங்கள்தான். சில சந்தர்ப்பங்களிலே கொஞ்சம் மோசமான நிலங்களையும் தானம் பண்ணிடறாங்க. என்ன செய்வது? மனித சுபாவமே அப்படித்தானே? நிலத்தைத் தானமாகப் பெறுகிறவர்கள் அதைக் குறிப்பிட்ட காலத்துக்கு மேலாக உபயோகத்துக்குக் கொண்டு வராமல் இருக்கக்கூடாது. விற்கக் கூடாது. அடமானம் வைக்கக் கூடாது. இதெல்லாம் நடக்காமல் நாங்கள் பார்த்துக் கொள்ளணும். எங்க தாலுக்காவிலே இதுவரை சுமார் ஐந்நூறு ஏக்கரா நிலம் தானமாகக் கிடைத்திருக்கிறது. இதில் கால்வாசியை இன்னும் பூரணமாக உபயோகத்துக்குக் கொண்டு வரவில்லை.''

விழாவைத் தொடங்கி வைக்கும் பொறுப்பேற்ற கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் உற்சாகத்துடன் பேசுகிறார். அதையும் கொஞ்சம் கேட்போம்.

''இந்தியாவில் நூற்றுக்கு எண்பது பேர் விவசாயிகள். தொண்ணூறு பேர் கிராமவாசிகள். பத்துப்பேர்தான் நகர வாழ்க்கையை நம்பி இருப்பவர்கள். அமெரிக்காவில் ஏழு சதவிகிதத்தினர்தான் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். தொண்ணூற்று மூன்று சதவிகிதத்தினர் குண்டூசியிலிருந்து அணுகுண்டு வரை தயாரிக்கும் தொழில்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் ஒரு கையில் கோதுமையும் ஒரு கையில் துப்பாக்கியையும் வைத்துக் கொண்டு கேட்பவர்களுக்கு எதையும் கொடுக்கத் தயாராக இருக்கின்றனர்.''

இந்த ஏற்ற இறக்கப் பொருளாதார அமைப்புக்கேற்ப அமைச்சர் குரலும் ஏறி இறங்கி, ஓங்கி ஒடுங்கி ஒலிக்கிறது.

இதோ வருகிறாரே! இவர்தான் நண்பர் இ. முத்துராமலிங்கம். மதுரை காந்தி சமாதான நிறுவனத்தின் காரியதரிசி. மதுரை நகரத்தின் இருபத்தி இரண்டு வார்டுகளில் நகர அமைதிக் குழு நிறுவியிருக்கிறார்களாம். அந்தந்தப் பகுதிப் பிரச்னைகளை — குழாய்ச் சண்டை உட்பட — இந்தக் குழு உறுப்பினர்களே தீர்த்துவிடுவார்களாம். இதேபோல் மாணவர் அமைதிக் குழுக்களும் இருக்கின்றன. அவ்வப்போது மாணவர்களுக்கும் மற்றவர்களுக்கும் தனித் தனி கருத்தரங்கு நடத்துகிறார்கள். சமீபத்தில் காந்திஜியின் சத்திய சோதனையில் மூன்று மணி அவகாசத்துக்கான ஒரு பரீட்சையை நடத்தினார்கள். சுமார் இருநூறு நிறுவனங்கள், பதினோராயிரத்து ஐநூற்றி எழுபது பேர் பரீட்சையில் கலந்து கொள்ள உதவின. ''உங்கள் பார்வையில் கஸ்தூரி பாய்'' என்ற தலைப்பில் அறுநூற்றி ஏழு விவாகமான பெண்கள் வியாசம் எழுதினார்களாம்.

ம. பொ. சி.யின் குரல் கணீரென்று மேடையிலிருந்து ஒலிக்கிறது. ''காந்தி சிலையை உடைக்கிறார்கள். காந்தி படத்தைக் கிழிக்கிறார்கள். அவர் உபதேசங்களைக் கொளுத்துகிறார்கள். காரணம் காந்தியம் இந்த நாட்டைக் காப்பாற்றி விடுமோ என்று பயப்படுகிறார்கள்'' என்று நாக்ஸலைட்டுகளை ஒரு சாடு சாடுகிறார்.

கோவை மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு பிரதிநிதியைச் சந்திக்கலாமா? இவர்தான் திரு டி. கிருஷ்ணன். நாயக்கன்பாளையம் கிராமத்திலிருந்து வந்திருக்கிறார். கல்லூரி ஆசிரியர் பதவியை உதறித் தள்ளிவிட்டுக் கிராம சேவையில் இறங்கி இருக்கிறார். பொது மக்களால் வழங்கப்பட்ட இரண்டரை ஏக்கர் நிலப்பரப்பில் தமிழ்நாடு காந்தி நினைவு நிதி அளித்த உதவி கொண்டு இந்த ஊரில் 'காந்தி இல்லம்' உருவாக்கப்பட்டிருக்கிறது. கிராம மக்களுக்கு அடிப்படை சுகாதாரத்தைக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்து இப்போது நாட்டின் ஆரம்பப் பொருளாதார தத்துவத்தைப் புரிய வைக்கும் அளவுக்கு வந்திருக்கிறார்கள். இந்தக் கிராமத்துக்கான கழிவு நீர் போக்கு திட்டத்தை இந்தக் கிராமவாசிகளே அமைத்திருக்கிறார்கள். சர்க்காக்களை வாங்கிக் கிராமப் பெண்மணிகளிடம் தந்து நூற்கச் செய்கிறார்கள். ஒவ்வோர் ஆண்டிலும் ஜனவரி முப்பதாம் தேதியிலிருந்து பிப்ருவரி பன்னிரண்டாம் தேதி வரை பதினமூன்று நாட்கள், அதாவது ஒரு பட்ச காலத்தை



## தலைமை ஆசிரியருக்குப் பாராட்டு

எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான். அத்தகைய கௌரவம் மிக்க கல்வி புகட்டும் துறையில் பல்லாண்டுகள் அரும்பணி புரிந்து வந்திருப்பவர் கரூர் நகரசபைப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு கே. எஸ். ரங்கசாமி அய்யங்கார். முப்பத்தைந்து வருஷங்களாகக் கல்வித் துறைக்கு அவர் செய்து வந்துள்ள சேவைகளைப் பாராட்டித் தமிழக சர்க்காரும் 68—69 ஆண்டுக்கான ஆசிரியர் விருதை அவருக்கு வழங்கிக் கௌரவித்துள்ளனர். விருது பெற்ற ரங்கசாமி ஐயங்காரை வாழ்த்துகிறோம்.

சர்வோதய பட்சமாகக்கொண்டாடுகிறார்கள். பிரார்த்தனை, பேச்சு, விவாதம் மூன்றும் தினசரி உண்டு. ஊர்ப் பிரமுகர்கள் கோவில் கட்டளைபோல ஒவ்வொரு நாள் செலவை ஒவ்வொருவர் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

விழாப் பந்தலுக்குப் பக்கத்திலுள்ள சர்வகலாசாலைப் பரீட்சை மண்டபத்தில் சர்வோதயக் கண்காட்சிக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மண்பாண்டங்கள், பொம்மைகள் தயாரிக்கக் களிமண்ணைச் சுத்தம் செய்து, பிசைந்து சிராகக் கொடுக்க, ஐந்து குதிரை சக்தி கொண்ட இயந்திரம் ஒன்றைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். கடினமான கற்கள் கலந்த களிமண்ணைச் சில நிமிடங்களில் பெரிய பெரிய மைசூர்பாகு துண்டங்களைப்போல வெளியே அனுப்பி வைக்கிறது.

மாலை சர்வோதயத் தொண்டர்கள் நகரத்தின் சில பாகங்களில் ஊர்வலமாக வருகிறார்கள்.

திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த டால்மியாபுரம் சர்வோதயப் பணி வட்டார அமைப்பாளர் பி. முத்தையாவைச் சந்திக்கலாம்.

டால்மியாபுரம் சிமிண்டு தொழிற்சாலை ஊழியரிடையே காந்தியத்தைப் பரப்பும் பொறுப்பை முத்தையா தம் நண்பர்களுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறார். தொழிலாளர்களின் வீட்டுப் பெண்மணிகள் தங்கள் ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாக்கிக் கழிக்க நாற்பது அம்பர் ராட்டைகளும் இருநூற்றி இருபது கிசான் ராட்டைகளும் வாங்கிப் போடப்பட்டிருக்கின்றன. வேலைக்குப் போகும் பெண்மணிகளின் வீட்டுக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவும் ஏற்பாடு செய்திருக்கிறார். அந்தக் குழந்தைகளுக்குப் போதிக்கப்படுவது காந்தி கதைகள். கிராமக் கைத்தொழில் மூலம் ஆண்டு ஒன்றுக்கு நாற்பதினாயிரம் ரூபாய் மதிப்புள்ள சோப்புத் தயாரித்து விற்பனை செய்கிறார்கள். கிராமப் புறங்களில் நிலவும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை ஆராய்ந்து புள்ளி விவரங்கள் தயாரித்துப் பரிகாரம் தேடுவதிலும் ஈடுபட்டிருக்கிறார்கள்.

திருவாளர்கள் அருணாசலம், ராமச்சந்திரன், தூத்துக்குடி வீரபாகு போன்றவர்கள் இந்த மகாநாட்டில் கலந்துகொண்டு சர்வோதய சம்பந்தமான தீர்மானங்களை நிறைவேற்றுகிறார்கள்.

வினோபாஜியும் ஜெயப்பிரகாஷ் நாராயணனும் இந்த மகாநாட்டில் கலந்துகொள்வதாக ஏற்பாடாகியிருந்ததாம். ஆனால் ஏதேதோ காரணங்களால் அவர்களால் வர இயலவில்லை.

இரண்டாம் நாள் மாலையில் சற்றுச் சாவகாசமாக விழாப் பந்தல் பக்கம் வந்தவர்களை வியப்புக்குள்ளாக்கியது மனித வாடையே இல்லாத அந்தப் பிரும்மாண்டமான பந்தல். ஏதோ நாலு நாட்கள் கல்யாணம் எதிர்பாராமல் முகூர்த்த வேளையுடனேயே முடிந்துவிட்டது போன்ற உணர்ச்சிதான் ஏற்பட்டது.

பரவாயில்லை. ஒன்றரை நாள் அளவுக்காவது நகரத்தைக் கிராமமாக மாற்றிக் காண்பிக்கும் வித்தையைச் செய்தார்கள் சர்வோதய ஊழியர்கள். -பட்டினத்தார்

# மருங்கூர் சூரன்



சூர் — துன்பம்; சூரன் — துன்பம் செய்வதையே தொழிலாகக் கொண்டவன். திருச்செந்தூரில் திருமுருகப் பெருமான் முதன் முதலில் படையுடன் தங்கி சூரனிடம் வீரபாகுத் தேவரை அனுப்பி, கடைசியில் ஐப்பசி சஷ்டியில் போர் செய்து சூரனின் ஆணவத்தை அழித்தார்.

சூர சம்ஹாரத்தை உணர்த்தும் பொருட்டுத் தமிழ் நாட்டில் உள்ள முருகன் கோயில்களில் ஐப்பசி திங்களில் சஷ்டியன்று சூரன் திருவிழா அதிவிமரிசையாக எடுக்கப்படுகிறது. இவற்றுள் கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோயிலிலிருந்து கிழக்கே சுமார் ஏழு மைல் தொலைவிலுள்ள மருங்கூர் என்னும் ஊரிலுள்ள முருகன் கோயிலும் ஒன்று. இங்கு கோயில், மயூரகிரி (மயில் மலை) என்று அழைக்கப்படும் குன்றின் மீது அமைந்துள்ளது.

இங்கு சூரசம்ஹார விழாவன்று பக்தர்கள் திரள் திரளாக வந்து சூரசம்ஹாரக் காட்சியைக் கண்டு களிப்பர். சூரன் திருவிழாவுக்காக மூங்கில் கம்புகள், தேக்கு கம்பம், வைக்கோல், துணி முதலியன கொண்டு சூரன் உருவம் பிரம்மாண்டமான அசுர ரூபத்தில் செய்யப்படுகிறது. சூரசம்ஹாரத்தின்பின் இதை எரியூட்டி விடுவார்கள். தமிழ் நாட்டில் முருகன் கோயில்களில் சூரன் திருவிழாவுக்காகச் செய்யப்படும் சூரன் உருவங்களுள் மிகப் பெரியது மருங்கூர் சூரன்தான்.

படமும் தகவலும்: ரமா ராமநாதன்.





**பிள்ளைப் பிராயம்; கற்கத் துடிக்கும் வயது; போர்ஹான்ஸ் உபயோகித்துப் பற்களை சீராகப் பராமரிக்க அவளுக்குக் கற்பிக்கும் காலம்!**

அவளுக்கு இந்தச் சிறு வயதில், அறியத் துடிக்கும் இயல்பும், உற்சாகமும் நிரம்பி வழிகின்றன. இப்பொழுது நீங்கள் கற்பிக்கும் எதையும் அவள் என்றும் நினைவில் வைப்பாள். எனவே, முக்கியமான விஷயங்களை அவளுக்குப் போதியுங்கள். அதாவது, போர்ஹான்ஸ் உபயோகித்து பற்களை சீராகப் பராமரிக்கக் கற்பியுங்கள்.

பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் பற்பசையில் ஈறுகளின் நலனுக்காக ஒரு விசேஷ மருந்து சேர்க்கப் பட்டுள்ளது. அது ஈறு உபாதைகளையும் பற் சிதைவையும் தடுக்க உதவுகிறது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் மிகவும் ஏற்றது. எனவே, காலையிலும் இரவிலும் தவறாமல் போர்ஹான்ஸ் பற்பசையால் பல் துலக்க உங்கள் குழந்தைக்குக் கற்றுக் கொடுங்கள்.

**போர்ஹான்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.**




இலவசம் "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்

இக்கச்சிறு புத்தகம் 10 மொழிகளில் † கிடைக்கிறது. இதைப்பெற, தபால் செலவுக்காக 15 பைசா தபால் தலையை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்பவும்.

K6

பெயர் ______ வயது ______

முகவரி ______

† எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ அதன் கீழ் கோடிடவும். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹான்ஸ்**
பற்பசை
பல்வைத்தியர்
ஒருவரால்
உருவாக்கப்
பெற்றது

68 F-182 TAM

## அத்தியாயம் 20




'இவள் ரமாவா.... ரமாவா...ரமாவா...?'

வாசுவின் மனத்தில் சுழன்றன கேள்விகள். அதனூடே, அவன் எதிரே காணும் ரமாவின் சோக பிம்பம்! முகம் வெளுத்துக் கண்கள் உள்ளடங்கிச் சோர்ந்து போய்த் துவண்டு...

அதற்கும் மேலாக மனத்தில் சுரீலென்று குத்திற்று அவளுடைய அப்போதைய நிலை—அவள் தாய்மையை வேறு தாங்கி நின்றாள்!

அப்படியானால்..?-அவளுடைய வாழ்வு முறையை அவனால் நினைத்தும் பார்க்க முடியவில்லை. அவள் ரூபகுமாருக்குச் சொந்தமாகி விட்டதை உணர்த்தும் நிலை. இத்தனை நாட்கள் அவனுக்கு இது பற்றித் தெரியாது. ஒருவரும் அவனிடம் கூறியிருக்கவில்லை. இத்தனை மாதங்கள் அவனும் அவளைப் பார்க்காமலே இருந்திருக்கிறான்.

தாய்மையில் பெண்களிடம் பலவீனம் காணப்படும் என்பதை அவன் அறிவான். அத்துடன் ஒரு மலர்ச்சியும் காண முடியும் என்பார்களே? ரமாவின் முகத்திலோ சரீரத்திலோ தேடித் தேடிப் பார்த்தும் அந்த மலர்ச்சி காணவில்லையே! விரும்பி மன மகிழ்வோடு பாரத்தைச் சுமக்கும் கர்ப்பிணியாகக் காணவில்லையே! விருப்பமில்லாத பாரத்தை மூச்சுத் திணறிச் சுமக்கும் நிலையில் அல்லவோ காணப்படுகிறாள்!

வாசுவுக்குச் சடக்கெனத் தோன்றியது. ரூபகுமார் போல் தானும் தன் மனைவி காந்தியோடு கொஞ்சிக் குலாவுவதாக வெளிக்குக் காட்டிப் பழி தீர்க்க வேண்டும் என நினைத்திருந்தான். அவனுக்கு இப்போது ஒன்று நன்றாகப் புரிந்தது. 'ஓர் ஆண் மகன் பெண்ணைத் தன் நிர்ப்பந்தங்களுக்குப் பணிய வைக்க முடியும். ஆனால் பெண் ஆணைத் தன் நிர்ப்பந்தங்களுக்குப் பணிய வைக்க முடியாது.' ரமாவும் அப்படித்தான் ரூபகுமாரின் விருப்பத்துக்கு எதிராக ஒன்றும் செய்ய முடியாத நிலைமையில் தாய்மையை அடைந்திருப்பாளோ?

'வாசு! எதற்கெல்லாம் நீ கோட்டை கட்டினாயோ, அங்கெல்லாம் ஏமாற்றத்தின் நிலைப்படியில்தான் நிற்கிறாய். ரமா நீ நினைத்ததுபோல் சுகமாக வாழாமல் நிர்ப்பந்தப்படுத்தப் பட்டிருக்கலாம். அப்படியானால் நீ அவளைத் தவிக்க விட முடியாது. நீ அவளுக்கெதிரில், காந்தி மீது அன்பு காட்டுவதெல்லாம் அவளை ஒன்றும் பாதிக்காது. ஒரு பெண்ணைப் பழி வாங்கும் திட்டத்தில் மற்றொரு பெண்ணை மணந்துவிட்டாய். அந்த மற்றொரு பெண்ணின் பெண்மைக்கு என்ன பதில் கூறப் போகிறாய்?'

தலை சுற்றியது அவனுக்கு. மனம் கேட்கும் கேள்விகள் காதினுள்ளே பெரிதாய்க் கர்ஜித்தன. மனச் சுழலில் ரமாவின் சோர்ந்த முகமும் அவள் தாய்மையைக் காட்டும் வயிறும் சுற்றிச் சுற்றி வந்தன.

''ரமா... நீ... இப்போது........'' வார்த்தைகள் வெளி வர முடியாமல் குழம்பின.

அவன் ஒரே நிலையில் நின்று பார்த்த பார்வையும் அவன் முகத்தில் தோன்றிய உணர்ச்சி மாறாட்டங்களும், தடுமாற்றத்தால் வாய் குழற அவன் பேசிய வார்த்தைகளும் ரமாவை ஒரே நிமிடத்தில் கலங்க அடித்துவிட்டன. எந்த எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் அவள் கஷ்டப்பட்டு மனத்தின் ஒரு மூலையில் போட்டு அமுக்கி வைத்திருந்தாளோ, அவை பொங்கிப் பீறிட்டுக் கொண்டு வெளியே வரும் பயங்கரத்தை என்ன வென்பது? கடந்த இரண்டு மூன்று மாதங்களாக வீட்டு நிகழ்ச்சிகளிலேயே மனம் செலுத்தி, இனி ரூபகுமாரே அவள் வாழ்வுக் காவலன் என்ற குறிப்பில் தன் காதல் கதைகளை மறக்கும் லட்சியத்தை மேற்கொண்டிருந்தாள். அந்த லட்சியம் காற்றில் பறந்து விடும் போலிருந்தது.

கை கால்கள் வெலவெலத்தன. குரல் அடைத்தது. கண்களில் நீர் முட்டியது. தன்னை அறியாமல் அவள் வாய் ''வா...சு...'' என ஆரம்பித்தது. அந்த ஒரு வார்த்தையில்தான் எத்தனை

நெஞ்சுருக்கம்! 'நான் உங்களை மறந்து சந்தோஷம் காண ரூபகுமாரை மணக்க வில்லை' என்று அவனுக்குத் தெரிவிக்கும் பாணியாக அது அமைந்தது.

வாசுவால் அதற்கு மேல் அங்கு ஒரு நிமிடமும் நிற்க முடியவில்லை. விருட்டெனத் திரும்பினான். வாசலுக்குச் சென்று விட்டான். அதே நேரத்தில் ஆனந்த் ஸ்கூட்டரில் வந்து இறங்கினான். வாசு தன் கையிலிருந்த பூச்சரத்தைப் பிய்த்துத் தூர எறிந்தான். கழுத்திலிருந்த பூமாலையைக் காரினுள் விட்டெறிந்தான். ஒருவரையும் திரும்பிப் பாராமல் ஆனந்த் வந்து இறங்கிய ஸ்கூட்டரில் அமர்ந்து அதைக் கிளப்பி விட்டான். உள்ளிருந்து ஓடி வந்தவர்கள் மலைத்து நிற்க, ஆனந்த் நிலைமையை ஊகித்து வாசுவை நிறுத்துவதற்குள் ஸ்கூட்டர் காற்றாய்ப் பறந்து விட்டது.

''வாசு... வாசு... நில்லுங்கள்!''—ரமா கூவியது காதில் விழுந்தும் அவன் நிற்காமல் ஓடி விட்டான்.

ரமா குலுங்கக் குலுங்க அழுதாள். காந்தியோ பல்லை நற நறவென்று கடித்து அவளை நோக்கினாள். கோசல்ராம் ஒன்றும் புரியாமல் தவித்தார். ஆனந்த்? அவனுக்கும்தான் ஒன்றும் விளங்கவில்லை.

ஆனந்த் சட்டெனச் சமாளித்துக் கொண்டு, கோசல்ராமை நோக்கி, ''நீங்கள் விவாக மண்டபத்துக்குத் திரும்புங்கள். அங்கு வேலைக்காரர்களும் விருந்தினர்களும் உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் சீக்கிரம் போங்கள்'' என்றான்.

கோசல்ராமுக்கு உடனே அங்கிருந்து கிளம்பிவிட விருப்பமில்லை. 'வாசு எதற்காக அப்படி ஓடினான்? ரமா ஏன் இப்படி அழ வேண்டும்?'

''நான் போகிறேன் ஆனந்த். ஆனால் இது என்ன? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே'' என்று கோசல்ராம் பரிதவித்துப் போய்க் கேட்டார்.

''இதில் உங்களுக்கு விளங்காதது என்ன இருக்கிறது? ரமா இப்படிச் சோர்ந்து வாட்டமுற்று விட்டாள் என்பதைக் காணும்



போது யாருமே தவித்துத்தானே போவார்கள்? வாசு திடுக்கிட்டிருக்கிறான். வாடிய ரமாவை அதிக நேரம் பார்க்க முடியாமல் ஓடி யிருக்கிறான். ரமாவுக்கோ விவாகத்துக்குக்கூட வர முடியவில்லையே என்ற வருத்தம். அது தான் அப்படி அழுகிறாள்.'' இங்கொன்றும் அங்கொன்றுமாகக் கூறி ஆனந்த் அவரைச் சமாதானம் செய்ய முற்பட்டான்.

ரமாவுக்கு அப்போதுதான் அப்பாவுக்கு எதிரில் இப்படிச் செய்துவிட்டோமே என்று புரிந்தது. சட்டென்று அவள் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். செயற்கைச் சிரிப்பை உதட்டோரத்தில் நெளிய விட்டு அவள் தந்தையை நோக்கினாள். ''ஆமாம் அப்பா! காந்தியின் விவாகத்தில் கலந்து கொள்ள முடியவில்லையே என்று எனக்கு எல்லையற்ற வருத்தம். காலையிலிருந்தே மனத்தில் நிரம்பிக் கொண்டிருந்த துயரம் இப்போது எல்லை மீறிப் போய்க் கண்ணீரைக் கொட்டி விட்டது.''

''போதும் உன் சாகஸம்!'' யாரும் எதிர்பாராத வகையில் காந்தி சீறிப் பாய்ந்தாள். ரமாவின் மீது அவளுக்குக் கோபம். வேண்டுமென்றே ரமா கல்யாணத்துக்கு வரவில்லை என்று அவள் முடிவு கட்டியிருந்தாள். இப்போது வாசு தன் வசம் இழந்து நின்றபோது ரமா அவன் உணர்ச்சிக்கு இடம் அளித்து நின்று விட்டிருக்கிறாள். அதோடு தாங்கள் இன்பமாகச் சுற்றிய காலத்தை நினைவுபடுத்திக் கொள்வது போல் தன் மன உணர்ச்சிகளை யெல்லாம் சேர்த்துத் திரட்டி 'வா...சு.....' எனக் குரல் கொடுத்து விட்டாள். இதற்கெல்லாம் என்ன பொருள்? சகோதரிக்கு வாழ்வு அளிப்பதுபோல் காட்டி விட்டு வாசுவை மேலும் தூண்டி



# ராபின் ப்ளூவின் பிரத்யேக திறமை



## சொற்ப செலவில் உங்கள் துணிகளை அற்புதமாக வெண்மையாக்குவதே!

ராபின் ப்ளூ தூய வெண்மை அளிக்கவல்லது. அது உங்கள் துணிகளுக்கு மற்ற ப்ளூ வகைகளால் முடியாத கண்கவரும் தூய வெண்மையை ஒரே ரீதியான முறையில் கொடுக்கிறது. சிறிதளவு ராபின் ப்ளூ ஏராளமான துணிகளை வெண்மையாக்குகிறது. மற்றும் விசேஷம் என்னவெனில் அது எந்த விதத்திலும் துணிகளை பாதிக்காது. அது மட்டுமல்ல, உங்கள் துணிகளை எப்பொழுதும் வெள்ளை வெளேரென்று இருக்கச் செய்கிறது.




**இயற்கையான கண்கவரும் தூய வெண்மைக்கு ராபின் ப்ளூ**

ARBC-38 TAM

விடும் சாகஸம் தானோ? — கோபக் கொந்தளிப்பில் அவன் மனத்தில் இப்படி எத்தனை எத்தனையோ ஓட்டங்கள்!

காந்தியின் பிறகு அங்கு ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. ரமா திடுக்கிட்டு அவனை நோக்கி, ''காந்தி, என்ன கூறுகிறாய்?'' என்றான்.




''நான் கூறுவது உனக்குப் புரியும். வாசுவை ஆட்டி வைக்க நீ இப்படித் திட்டமிட்டிருக்கிறாய் என்று எனக்குத் தெரியாமல் போய்விட்டது!'' காந்தி இரைந்து கூவினாள்.

ஆனந்த் கோபத்தோடு காந்தியை நோக்கினான். ''ஷட் அப்!... ஏ காந்தி. உனக்குப் புரிந்தால் பேசு. இல்லாவிடில் இப்போதே போய்விடு. என் தந்தைக்கு உதவியவன் என்பதற்காக நான் உனக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால் ரமாவைப் பற்றி அபாண்டமாகக் கூறினால் என்னால் பொறுக்க முடியாது'' என்று கர்ஜித்தான்.

''ரமா! ரமா! உங்கள் எல்லோருக்கும் ரமாதான்! அப்பா கிளம்புங்கள், நாம் போகலாம். வாசு சென்றுவிட்டார். நாம் இப்போதே அவரைத் தொடர்ந்து சென்று அவரைச் சமாதானம் செய்ய வேண்டும்!'' காந்தி விருட்டென்று சென்று காரில் அமர்ந்து கொண்டாள்.

கோசல்ராம் காந்தியின் கோபத்தைக் கண்டு விக்கித்து நின்று விட்டார். காந்தி ஏன் திடீரென்று இப்படி எகிறிக் குதிக்கிறாள்?

இன்னும் அவர் கிளம்பாமல் நிற்பதைக் கண்ட ஆனந்த், ''நீங்கள் இப்போது இதெல்லாம் நினைத்து மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டாம். முதலில் வீடு திரும்புங்கள். விருந்தினர் விடை பெற்ற பிறகு குடும்ப நிலவரத்தைக் கவனிக்கலாம்'' என்றான்.

கோசல்ராமும் காந்தியும் சென்றதும் ரமா துயரம் தாங்காமல் கேவ ஆரம்பித்து விட்டாள். காந்தி கூறிய வார்த்தைகள் அவள் துயரத்தைப் பன்மடங்கு அதிகமாக்கி விட்டன. அவளுடைய அன்புக்குகந்த சகோதரி, அவளுக்காகத் தன் காதலைக் கூட மறைத்து வைத்திருந்த காந்தி இப்போது ஒரே நிமிஷத்தில் எப்படியெல்லாம் பேசிவிட்டாள்! அதை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

ஆனந்த் அவள் எதிரிலேயே அமர்ந்திருந்தான்.

ரமாவின் கேவல் நின்று விடுமென்று எத்தனை நேரம் காத்திருந்து பார்த்தான்! கடைசியில் அவனாகவே ''ரமா!'' என்று கூப்பிட்டான்.

ரமா தலை நிமிர்ந்து அவனை நோக்கினாள்.

''ரமா, இந்த உடம்பில் நீ இது போல் அழுவது நல்லதல்ல.''

''அழுது அழுது இதயம் வெடிக்கும் தன்மை ஏற்பட்டு விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!''

''ரமா! இந்த இதயத்தை நாம் அடக்கி ஆள வேண்டும். நேற்று வந்த போது என்னைப் போகச் சொல்லிவிட்டாய்... ஆனாலும்...''

''ஆனந்த்! இந்த ரமாவை உங்களுக்குத் தெரியும். அதனால் நான் உங்களைப் போகச் சொன்னதை நீங்கள் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அப்படி எடுத்துக் கொள்ளாமல் நீங்கள் இப்போது இங்கே வந்திருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.''

''அதிருக்கட்டும். வாசு இங்கே வந்த போது என்ன நேர்ந்தது, அதைக் கூறு!''

''நீங்கள் இவர்கள் வருவது பற்றிக் கூறினது எனக்கு நன்மையாக இருக்குமென்றுதான் நினைத்தேன். ஏனெனில் நம் மனம் நம்மையே பல முறை ஏமாற்றி விடுகிறது. அதனால் உணர்ச்சிகளைச் சிதறவிடாமல் பக்குவப்படுத்திக் கொண்டேன். ஆனால் வாசு இங்கு வரச் சம்மதித்ததே எனக்கு ஆச்சரியம்தான். அப்படி வந்தவர் துணிவுடன் இருந்திருக்கக் கூடாதா? மனத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் அந்த விளிம்பில் என் மனத்தையும் இழுத்து விட்டார். அவர் 'ரமா...' என்று கூவ, நானும் வசம் இழந்து 'வாசு' என்று கூவிவிட்

டேன். அந்த அழைப்பில் எத்தனையோ அர்த்தங்கள் தெரிந்து அதன் பிறகு அவர் இங்கு நிற்காமல் ஓடி விட்டார். இதற்கெல்லாம் நான் காரணம் என்கிறாள் காந்தி. அவள் கூறுவதும் உண்மைதான் ஆனந்த். நான் பிறக்காமல் இருந்திருந்தால் ஒருவருக்கும் துன்பம் இருந்திருக்காதல்லவா?'' அலைகள் இரண்டு ஆய்ந்து ஓய்ந்து பின்விட்டு நின்றுவிடுவது போல் அவள் மெள்ளக் கூறினாள்.

ஆனந்த் தன் கைகள் இரண்டையும் மார்போடு அணைத்து வைத்துக் கொண்டு தரையை நோக்கியபடியே அமர்ந்திருந்தான். பிறகு ரமாவை நோக்கிக் கேட்டான். ''ரமா நான் கேட்பதற்கு உண்மையான பதில் கூறு.''

ரமா அவனை நோக்கினாள்.

''ரமா! காந்தியின் விவாகத்தில் நீ பங்கெடுக்காத உண்மைக் காரணம் உன் உடம்புதானா?''

ரமா முதலில் மௌனமாக இருந்தாள். பிறகு, ''நீங்கள் எந்தக் காரணத்தை எதிர்பார்க்கிறீர்கள் ஆனந்த்?'' எனக் கேட்டாள்.

''நானா...'' முதலில் அவனும் சொல்லத் தயங்கினான். பிறகு கூறினான்: ''உன் உடம்புதான் காரணமாக இருக்க வேண்டுமென்று நான் விரும்பி எதிர்பார்த்தால் அது சரியான விடையாக இருக்காது என்பது எனக்குத் தெரியும். உன் வீட்டுச் சூழ்நிலையைத்தான் காரணமாக்கி நான் பார்க்கவேண்டியிருக்கிறது. அதுதான் உண்மை முனையைக் காட்டும். நான் சொல்வது சரிதானே, ரமா?''

ரமா மெள்ள ஒப்புக் கொள்ளும் பாவனையில் தலையை ஆட்டினாள். அவள் கண்களில் மீண்டும் நீர் மல்கியது. ''நாம் இப்போது இது பற்றி அதிகம் பேசாமல் இருப்பதே நல்லது. மாடியில் இருப்பவர் இப்போது மிகவும் பச்சாத்தாபத்தின் நிழலில் இருக்கிறார். நாம் பேசும் சின்னஞ் சிறு பேச்சும் அவர் மனத்தைக் குழப்பி எங்கோ இழுத்துச் சென்று விடுகிறது'' என்றாள்.

ஆனந்த் அவள் பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டு வியப்பின் எல்லையைப் பிடித்தான். 'மேலே இருப்பவர்!' ரமா கூறுவதைப் பார்த்தால் ரூபகுமாராகத்தானிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். இத்தனை அமர்க்களத்துக்கும் அவன் மாடியிலேயே இருந்திருக்கிறான். கீழே இறங்கி வரவில்லையே! ரமாவும் அவனைக் கீழே கூப்பிடவில்லையே! ஏன்?

''ரமா! யார் மேலே இருக்கிறது?''

''என் கணவர்!''

ஆனந்த் அவளிடம் மேலே ஒன்றும் விளக்கம் கேட்கவில்லை. முதல் நாள் அவன் காரணமாகத்தான் ரூபகுமார் வெளியேறி விட்டதாக ரமா குற்றம் சாட்டினாள். இப்போது எப்படியோ வீட்டினுள்ளே வந்திருக்கிறான். அவன் காரணமாக மீண்டும் வெளியேறிவிடப் போகிறானே என்று அவள் அஞ்சுகிறாளோ? அப்படியொரு சூழ்நிலையை ஏற்படுத்த அவன் விரும்பவில்லை. வில்லனாக நடுவில் புகுந்து ரமாவின் வாழ்வையே ரூபகுமார் பாழ்படுத்தி விட்டிருந்தாலும் ரமா இப்போது கணவர் என்ற முறையில் அவனை உணர்ந்து, மற்றவர்களுக்கும் உணர்த்தி, அவனுடனேயே தன் வாழ்வுப் பாதையின் முடிவு வரை செல்ல விரும்புகிறாள். அவளுடைய அந்த உயர்ந்த குணத்தை, நஞ்சினும் கொடிய பகைவனை மன்னித்து ஏற்கும் தன்மையை அவன் போற்றத்தான் வேண்டும். நடுவில் புகுந்து இடையூறு விளைவிக்கக்கூடாது.

ஆனந்த் உடனே எழுந்து விட்டான். ''ரமா! நான் போய் வருகிறேன்'' என்றவன் தழுதழுத்த குரலில் தான் இத்தனை நாட்களும் மனத்தோடு தேக்கி வைத்திருந்ததை இனியும் அடக்க முடியாது என்று உணர்ந்தவனாகக் கூறினான்: ''ரமா... ர...மா... நான் உன்னிடம் முதன் முறையாக இன்று கூறுகிறேன்... நீ மன வேதனைப் படுவதையோ துன்பப்படுவதையோ, என்னால் சகிக்க முடியாது... ரமா, என் கண்கள் மூலமாவது ஊடுருவி என் இதயத்தைப் பார்க்க உனக்குச் சக்தி உண்டானால் அங்கு ஒரே ஒரு பெண் 'ரமா'வைத்தான் பார்க்க முடியும்... அந்த 'ரமா'வை என்னுடையவளாக்கிக்கொள்ளும் பேராசை எனக்கு இருந்ததில்லை. ஆனால் அவள் என்றென்றும் இன்பமும் மகிழ்ச்சியுமாக இருக்க வேண்டும் என்ற ஒரே ஒரு குறிக்கோள் தான் எனக்கு. அதனால் நீயாக விரும்பிய காதலனுடன் உன்னை இணைத்து அதில் நீ காணும் இன்பத்தில் நானும் மகிழ்ச்சி காண விரும்பினேன். ஆனால், வேண்டாம் ரமா, அதெல்லாம்...மீண்டும் கூறுகிறேன். இந்த வாழ்வை உனக்கு அர்ப்பணிப்பதற்காகவே வைத்திருக்கிறேன். அதனால் நீயாகச் சம்மதித்துக் கொண்டு வந்துள்ள உன் வாழ்வில் ஏதேனும் துன்பம் தோன்றுவதானால் என் உதவியை நீ மறுக்காதே, ரமா! அதில் நான் இன்பம் காண்பேன், திருப்தி அடைவேன்... ர...மா... புரிகிறதா... உன் இன்பமே என் இன்பம்.'' கண்களில் நீர் மல்க அவன் சொன்ன விதம்...

ரமா சிலையாக நின்று விட்டாள். ஆனந்த் கூறிய ஒவ்வொரு வார்த்தை

# CCM-ன் மிர்ராபோ

# 2×2 ∴ புல் வாயில்கள், புடவைகள்—

# 'ஆண்டிகிரிஸ்'

மிர்ராபோ 2 x 2 ∴புல்வாயில் புடவைகளில் அவள் என்றும் வனப்புடன் காணப்படுகிறுள்!

ஏனெனில் புதிய மிர்ராபோ புடவைகள் கசங்காதவை. அணிவதற்கு ஏற்றவை. தனித்தன்மை வாய்ந்தவை. 'ஆண்டிகிரிஸ்' செய்யப்பட்டவை. உயர்தர எகிப்திய பருத்தியால் தயாரிக்கப்பட்டவை.
மிர்ராபோ புடவைகளுக்கு ஏற்ற வகையில்
மிர்ராபோ 2 x 2 ரவிக்கைத் துணிகளும் கிடைக்கின்றன.

மற்றும் மிருதுவான **கோட்டா புடவைகள்** கண்கவர் வண்ணங்களிலும் பிரிண்டுகளிலும் உள்ளன.

**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்.**
கோயம்பத்தூர்-15
CCM சில்லறை விற்பனை ஷோரூம்கள்:
17/93 ஒப்பணக்காரத் தெரு,
கோயம்பத்தூர்-1




விநியோகிப்பவர்கள்:
**வெங்கடேஷ் வஸ்திராலயா**

கோயம்பத்தூர்-2 &
சென்னை-1

# CCM-ன்

# மிர்ராபோ

யும் அவள் மனத்தை ஆழமாகத் தொட்டு நின்றது. ஆனந்த் உலகில் உள்ள நல்லவர்களுக்கு ஓர் உதாரணம் என்பது அவளுக்குத் தெரியும். அதனால் தான் அவள் முதல் நாள் வெளியேற்றியதையும் மறந்து அவன் மீண்டும் வந்து நிற்கிறான்! ஆனால் அந்த நல்லவன் சொன்னவை, இத்தனை நாட்கள் அவள் நினைத்தும் பார்த்திராத அவனது நெஞ்சு...

சரீரமே குலுங்கியது ரமாவுக்கு. ''ஆனந்த்...ஆனந்த்...'' அவள் முணுமுணுத்தபடி நிமிர்ந்தபோது ஆனந்த் அங்கு இல்லை. வாசற் படியில் இறங்கிக் கேட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான். பனித்திருந்த தன் கண்களைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே அவன் சென்றதை ரமா பார்த்தாள். எத்தனை நேரம் அங்கே நின்றிருந்தாளோ?

ஆனந்த் தன் கால் போன போக்கில் சென்று கொண்டிருந்தான். ஒரு திருப்பத்தில்தான் அவனுக்குச் சட்டென்று கல்யாண மண்டபம் நினைவு வந்தது. அத்துடன் அங்கு தன் தந்தை இருப்பதும் நினைவுக்கு வந்தது. உடனே ஒரு டாக்ஸியைப் பிடித்து விவாகப் பந்தலுக்கு ஓடினான். அங்கோ...

விருந்தாளிகள் அனைவரும் நித்திரையில் ஆழ்ந்திருக்கச் சிதாபதி தன் மகளின் காதோடு சொன்ன செய்தி அவளைக் கலங்க வைத்தது.

அதே நேரத்தில் வாசுவின் வீட்டில் அது முதல் இரவாகவா இருந்தது? வாக்குவாதமும் சீறலுமாக...தேவகி துடித்துக் கொண்டிருந்தாள்.

ரமாவின் வீட்டிலோ பெரிய போராட்டமே நடந்து கொண்டிருந்தது. வாழ்வின் முடிவைப் பணயம் வைக்கும் போராட்டம்.... (தொடரும்)

## எறும்பு உண்ணும் பன்றி

அமெரிக்கக் காடுகளில் வாழும் இப்பன்றி தரையில் குழி அமைத்து வசிக்கிறது. இதன் காதுகள் பெரியதாகக் கழுதையின் காதுகளைப் போன்று இருக்கும். உடல் அமைப்பு ஒரு பன்றியை ஒப்ப இருக்கும். எறும்புகளையும் கறையான்களையுமே தன் உணவாக உட்கொள்ளுவதால் இதற்கு 'எறும்பு உண்ணும் பன்றி' என்ற பெயர்.

மணலைப் பறித்துக் குழி அமைத்துப் பதுங்குவதில் உலகில் இதற்கு இணையான இன்னொரு மிருகம் கிடையாது. அதற்கு ஏற்றவாறு இதன் கால்கள் குட்டையாகவும், வலிமை மிக்கதாயும் அமைந்துள்ளன. முன்னங் கால்களில் பலமுள்ள வளைந்த நகங்கள் நான்கு காணப்படுகின்றன. பின்னங் கால்கள் நீளமாகவும் ஐந்து வளைந்த நகங்களை உடையனவாகவும் விளங்குகின்றன. இதன் வாசஸ்தலமான குழியானது நிலத்துக்குக் கீழே ஐந்து அடி ஆழம் உள்ளதாக இருக்கும்.

இப்பன்றியினால் பலவித நன்மைகள் உள்ளன. மரத்தை அரித்து உண்ணும் கறையான்களினால் ஏற்படுகின்ற நஷ்டத்தை இவை தவிர்க்கின்றன. கறையான் புற்றுக்களை நாடி அளவில்லாமல் கறையான்களை உண்ண இரவில்தான் இவை இரை தேடப் புறப்படுகின்றன. தனியாகவோ அல்லது ஒரு துணையுடனோ வேட்டையாடச் செல்லும். ஆறு அடி உயரமுள்ள கறையான் புற்றாயினும் சரி, தங்களுடைய வலுவான கால் நகங்களினால் விரைவாக அவற்றை அழிக்கும். புற்றினுள் இருக்கும் கறையான்கள் எதிர்த்து நின்று போராடவோ அல்லது தப்பித்துச் செல்லவோ அணி, அணியாகத் திரண்டு வெளிவரும். இத்தருணத்தில் இப்பன்றி தனது நீளமான நாக்கை வெளியே வீசிக் கறையான்களை வெகு விரைவில் ஒற்றி எடுத்து உண்ணும். இதற்குச் சாதகமாக இதனது நாக்கின் நுனிப் பாகம் சற்று அகலமாக உள்ளது. மேலும் நாக்கில் பசைப் பற்றும் உண்டு. ஆகவே வெகு சீக்கிரம் எளிதாக இலட்சக் கணக்கான கறையான்களை விழுங்கி விடுகின்றன. இப்பன்றிக்கு மற்றப் பிராணிகளைப் போன்று முன்புறம் உண்மையான பற்கள் கிடையாது. மேல் தாடையில் பதினொன்று கடைவாய்ப் பற்களும், கீழ்த் தாடையில் பன்னிரண்டு கடைவாய்ப் பற்களும் மட்டுமே காணப்படுகின்றன. எறும்புகளை உயிருடனேயே விழுங்கி விடுகின்றன.

ஆப்பிரிக்கவாழ் மக்கள் இப்பன்றியின் இறைச்சியை மிகவும் விரும்பி உண்கிறார்கள். இப்பன்றியை வேட்டையாடக் கூட்டமாகவே செல்வர். கால் தடங்களைக் கொண்டு இப்பன்றியின் கூட்டைக் கண்டுபிடித்ததும் ஒருவர் இப்பன்றியின் குழிக்குள் இறங்குவார். உள்ளே செல்பவரின் கையில் ஒரு கூர்மையான அம்போ அல்லது நீண்ட கத்தியோ இருக்கும். அதிருஷ்டவசமாக அப்போது இம்மிருகம் குழிக்குள் இருந்தால் விரைவாக அதைக் குத்திக் கொன்றுவிட வேண்டும். இல்லையெனில் சிறு சத்தத்தையும் எளிதில் கேட்கக்கூடிய திறன் கொண்ட இப்பன்றி, மனிதன் கூட்டினுள் வருகிறான் என்பதை உணர்ந்த மாத்திரத்தில், மணலை வெகு வேகமாகத் தோண்டி வீசியெறிந்து உள்ளே வருபவனுக்கும் தனக்கும் இடையே ஒரு மதில் போன்ற மணல் திட்டை ஏற்படுத்தித் தன்னை விரைவில் நெருங்க முடியாதபடி செய்துவிடும். அதே சமயம் இந்தப் புதிய மணல் சுவரைத் தாண்டி எதிரி வருவதற்குள் வெகு விரைவாக மற்றொரு பக்கம் வேறு குழி அமைத்து அதில் பதுங்கிக் கொள்ளும். மேலும் சில பன்றிகளின் கூடுகளில் வெளியே தப்பிச் செல்வதற்கு இரண்டு அல்லது மூன்று வழிகள்கூட இருப்பதுண்டு.

காட்டில் உள்ள சிங்கம், சிறுத்தை, புலி போன்ற கொடிய விலங்குகள் இப்பன்றிகளைத் தாக்க நேரிடும்போது இப்பன்றிகள் தங்களுடைய உடம்பைப் பந்து போல் சுருட்டிக் கொண்டு கால் நகங்களை நன்கு நீட்டிக் கொண்டு எதிரியை எதிர்த்து நிற்கும்.

சில சமயங்களில் இப்பன்றி தோண்டிய குழிக்குள் ஓநாய், மலைப்பாம்பு போன்ற பிராணிகள் புகுந்து அதைத் தங்களது வீடாக உபயோகித்துக் கொள்ளும்.

— அந்தோனி பேசில்






# Which other medium is so indispensable to so many millions without the time for anything?

For quite a few people, the working day starts earlier than for most. A quick gulp for a breakfast and they're off…with the morning paper tucked under their arm.

Even people in the daily morning rush don't avoid reading their newspaper and periodicals.

There will be times when friends, books, the radio, T.V. or the cinema will not be able to touch such rushed lives…but the morning paper tucked under the arm, or the periodical by the bedside will be there—as inevitable as tomorrow's sunrise. Nobody escapes the influence of the Press.

There is a newspaper or magazine to reach every reader in his language at the lowest cost per thousand.

*Address through the Press --it costs far less*

**IENS**

*Inserted in the interest of providing information for better advertising value by*

***THE INDIAN & EASTERN NEWSPAPER SOCIETY***

everest/759b/IENS

# பயில்வானின் சவால்

தாமா—



பாலர் பக்கம்

பயில்வான் பகாகரன் சவால் விட்டான்: 'இந்தச் சபையில் என்னைத் தோற்கடிக்கும் சூரன் இருந்தால் வரட்டும்!'



யாரும் மேடை ஏறப் பயப்பட்ட போது ஒரு சின்னப் பையன் மேடை ஏறிப் பயில்வானை நெருங்கினான்.



சபையோர் வியந்தனர். பயில்வானுக்கும் ஆச்சரியம்.



சிறுவன் பயில்வானின் கால்களுக்கிடையே நுழைந்து ஓடினான்...



எல்லாரும் ஆச்சரியப்பட்டுத் திகைக்க, பயில்வான், தன் சவாலை ஏற்ற அந்தச் சின்னப் பையனின் கால்களைப் பிடித்துத் தூக்கினான். ரசிகர்கள் நடுங்கினர், என்ன ஆகுமோ என்று பயந்து. ''என்னை விட்டு விடுங்கள் என் சிநேகிதன் என் 'லாலி பாப்'பை இந்தப் பயில்வான் காலடியில் விட்டெறிந்து விட்டான். அதை எடுக்கத் தான் வந்தேன்!'' என்றான் சிறுவன். தொடர்ந்து, ''ஏ பயில்வானே! நீ இப்ப மேடையைக் காலி பண்ணு. லாலி பாப்பை இங்கு விட்டெறிந்த பயலோடு ஒரு நாலு ரவுண்டு ரோஷமான குஸ்திச் சண்டை போட வேண்டியிருக்கு'' என்று அவன் சொன்னபோது கூட்டத்தில் கரகோஷமும் சிரிப்பொலியும் கட்டுக்கடங்காமல் பெருகின!

வங்காளம்

# துர் மரணம்

நரேந்திரநாத் மித்ர

செய்தித் தாளில் ஒரு மூலையில் புஷ்பேந்துவின் தற்கொலையைப் பற்றிய செய்தி வெளியாகி இருந்தது. இளம் வயது மாணவனான அவன் தன் வீட்டிலேயே, சொந்த பிஸ்தலைக் கொண்டே தற்கொலை புரிந்து கொண்டான்; காரணம் தெரியவில்லை; போலீசார் இது குறித்துப் புலன் விசாரித்து வருகிறார்கள் என்ற விவரமும் செய்தியில் கண்டிருந்தது.

இச்செய்தியைப் படித்ததும் முதலில் எனக்கு ஒரு மன அமைதி ஏற்பட்டது. ஆனாலும், அவன் என்னுடன் படித்த நண்பன் என்பதால் சற்று வருத்தமாகவும் இருந்தது. பத்திரிகையில் வெளியான இச்செய்தி என் கண்ணில் படுவதற்கு முன்பே, என்னுடைய ஹாஸ்டல் அறையின் சாளரத்தின் வழியாகப் பாதை ஓரமாக உள்ள இலவ மரத்தின்மீது நாட்டம் சென்றது. அதில் ஓரிடத்திலேனும் இலையோ தளிரோ தென்படவில்லை; கிளைகள் தோறும் கொத்துக் கொத்தாகப் பூக்கள்.



இரத்தச் சிவப்பான அம்மலர்க் குவையே என் கண்ணை ஈர்த்தது. அந்தச் செந்நிறம் ஏதாவது துர்நிமித்தத்தைக் குறிப்பிட்டதோ?

சாளரத்துக்கு வெளியே, உயரமான மதில்கள் சூழ்ந்த சௌதுரி வீட்டாரின் மா, பலா மரங்கள் மலிந்த தோட்டம். மாமரங்கள் சில பூத்திருந்தன. அவற்றின் மணம் எங்கும் மண்டியது. மதில் ஓரமாக ஒற்றையடிப் பாதை சிறிது தூரம் சென்று மறைந்து விடுகிறது.

புஷ்பேந்து என்ற பெயர் கவிதைச் சுவைக்கேற்ப அமைந்திருப்பினும், அப்பெயரைத் தாங்கிய ஆள், மென்மை மிகு கொடியையோ

கவிஞர் மலரையோ வைத்துக் கவிதை புனைந்தவன் என்று நான் கேள்விப்படவில்லை. புஷ்பேந்து சொல்லுவான் — ''நான் ஒரு மாமிசப் பட்சிணி...பச்சை மாமிசம் என்றால் எனக்கு உயிர்.'' இந்தப் புஷ்பேந்துவின் வாழ்க்கையைப் பற்றிப் பல விஷயங்கள் இன்று தாறுமாறாக என் நினைவில் எழுகின்றன. அகாலத்தில் இப்படி அவன் துர் மரணம் அடைந்ததைக் குறித்துத் துயரே கொண்டேன் நான்.

புஷ்பேந்து என்னுடைய நண்பன். பல நாட்கள் நான் அவனுடன் நெருங்கிப் பழகியவன். ஆனால் கடைசியில் எங்களிடையே இருந்த இந்த நட்புறவு வெகுவாக மழுங்கி வந்தது. அவனைக் கண்டாலே எனக்கு ஒரு பயம் தோன்றும். அவன் ஒரு பயங்கர உருவுடன் என் முன் வந்து நிற்பான்; என் உள்ளம் ஒடுங்கிப் போகும்.

புஷ்பேந்து என்ற பெயருக்கும், அவனுடைய உருவத்துக்கும் இடையே ஒற்றுமை



'துர் மரணம்' என்ற வங்கக் கதையின் ஆசிரியர் ஸ்ரீ நரேந்திரநாத் மித்ர வங்க இலக்கியத்தில் தமக்கென ஒரு தனியிடம் தேடிக் கொண்டவர். இவர் எழுதியுள்ள எழுபதுக்கு மேற்பட்ட நூல்கள் இதற்குச் சான்று. இவரது 'மகாநகர்' நவீனம் சத்ய ஜித்ரேயினால் திரைப்படமாக்கப்பட்டு பெரும் புகழைத் தேடித் தந்தது. இருவேறு மன இயல்புகளுக்குள்ள போராட்டத்தை இவர் சித்திரிக்கும் அழகே தனி!

துளியேனும் இல்லை; இலக்ஷியும் இல்லை. கட்டுமஸ்தான உடற்கட்டுடையவன். அவனுடைய உடல் உறுப்புக்கள் மிருக பலத்தைக் காட்டின. அவனுக்கு நான் எந்த மூலை? நான் நோஞ்சலானவன். அவனுடைய தோளுக்கு வரும் என்னுடைய தலை.

இத்தனை இருப்பினும், அவன் என்னுடைய மோவாயைத் தடவித் தந்து, அடிக்கடி, ''பரிமல், உனக்குள்ளது போன்ற அழகும், உடல் நிறமும் வேறு யாரிடத்திலும் நான் பார்க்கவில்லை. உனக்குக் காலில் சதங்கை தான் இல்லை; அது இருந்தால் நீ அப்ஸரஸ்திரீயாகவே காட்சி தருவாய். ஏனோ நீ பெண்ணாகப் பிறக்காது போனாய்? நீ மட்டும் பெண்ணாய்ப் பிறந்திருந்தால் நான் இப்படி இந்தக் கறுப்புச் சந்தாலிப் பெண்கள் பின்னால் திரிவேனா....?'' என்பான்.

**வ**ங்காளத்தின் எல்லைப்புறமாக ஓர் ஊரில் உள்ள கல்லூரி ஹாஸ்டலில் நாங்கள் இருவரும் ஒரே அறையில் அடுத்தடுத்து இருந்தவர்கள். பி. ஏ. வகுப்பில் சேர்ந்து படித்தோம். அவன் இப்படி என்னோடு பேசிப் பழகுவது எனக்கு விரசமாகவே படும். ஓர் அருவருப்புத் தோன்றும். அப்பொழுதெல்லாம் — அவன் இவ்வளவு மோசமாகப் போவான் என்று நான் நம்பவே இல்லை.

மெல்ல மெல்ல அவனைப் பற்றி என் கருத்து முற்றிலும் மாறத் தலைப்பட்டது. அவனைக் குறித்துப் பல வதந்திகள் ஒவ்வொன்றாக என் செவியில் விழலாயின. அவனுடைய அன்றாட நடவடிக்கைகளிலும் விரசமான போக்குகளைக் கவனித்தேன். அவன் எந்தவிதமான கட்டுத்திட்டங்களுக்கோ ஒழுக்கத்துக்கோ அடங்கிப் போகிறவனல்ல. தன் விருப்பு வெறுப்புக்கேதான் அவன் முதலிடம் தருபவன். பிறரைக் குறித்து அவனுக்கு அக்கறையோ, இரக்கமோ கிடையாது.

முதலில் அவன் என்னைக் கூப்பிடும் விதத்தையே எடுத்துக் கொள்ளலாமே. எவ்வளவு இழைந்து பழகும் நண்பனாயினும் ஒருவனை நான் 'நீ' 'அட' என்றே கூப்பிட மாட்டேன். ஆனால் புஷ்பேந்து என்னை முதல் நாள் பழக்கத்திலிருந்தே, 'அடே, என்னடா' என்றே அழைக்கத் தொடங்கி விட்டான். இத்தனைக்கும் அவன் எனக்குச் சம வயதினன். உருவில் சற்று அவன் பெரியவனாகத் தோன்றலாம்; வாழ்க்கை நிலையில் சற்று உயர்ந்தவனாகக் காணலாம்.... இருந்தால்தான் என்ன !

இப்படியெல்லாம் என்னை அழைப்பது குறித்து நான் அவனை ''அடே இடேன்று என்னை நீ அழைக்க வேண்டியதில்லை. எனக்கு இதெல்லாம் பிடிக்காது'' என்றேன்.

புஷ்பேந்து சிரித்துக் கொண்டே, ''அடே என்ன ரோஷம் வருகிறது உனக்கு. வங்க மொழியில் இதைவிட ஓர் அழகான சொல் இருக்கிறதா என்ன? 'நீ... ஏடா' என்ற சொற்கள் காதுக்கு எவ்வளவு இனிமையாக ஒலிக்கின்றன. நம்முடைய இலக்கியத்தில் வழக்கில் உள்ளவைதான். ஆதலால் நீ என் ராஜா.... இள இளவென்ற உன் முகத்தைத் தொட்டு, உன் செவ்விதழைப் பருகும் நாள் என்று வருமோ எனக்கு'' என்றான்.

நான் அப்போது, ''பத்திரம்... அந்த மாதிரி ஏதாவது பண்ணினாயோ... கன்னத்தில் அறை விழும்'' என்றேன்.

புஷ்பேந்து, ''அப்படியா ! அறை பார்க்கலாம். அது உனக்கு நான் தரும் முத்தத்தைப் போலவே இனிமையாகத்தான் இருக்கும்'' என்றான்.

புஷ்பேந்து இருப்பது நவக்கிராமம். அவர்களது வீட்டு விஷயங்களைப் பற்றி, தானே என்னிடம் சொல்லியிருக்கிறான். மேலும் பலபேர் வாயிலாகவும், அவனுடைய வீட்டாரைப் பற்றி நான் அறிந்துகொண்டேன். ஜமீந்தார் என்ற ஹோதாவில் அவர்களுக்கு அந்தப் பிராந்தியமெங்கும் ஏராளச் செல்வாக்கு இருந்தது. அவர்களைப்பற்றிப் பல கதைகள் மக்கள் வாக்கில் உலாவின. புஷ்பேந்துவின் தந்தை தான்பாத் கரிச் சுரங்கம் ஒன்றை ஏகபோக உரிமையுடன் வாங்கி வியாபாரத் துறையில் பணம் சம்பாதித்தவராம். ஆனால் பல அட்டூழியங்களால், அவர்களுடைய சொத்து சுதந்திரமெல்லாம் க்ஷீண கதிக்கு வந்து விட்டதாம். துளிக்கூடத் தக்கவில்லை. டாம்பீக வாழ்வும், துராக்ருதமுமே எஞ்சி நின்றன. இந்த வம்சத்தைச் சேர்ந்த இரண்டொருவர் ஏதோ நல்ல காலம் விலகிச் சென்று விடவே, ஒரு மாதிரி தலைதூக்கி நிற்க முடிந்தது. இதெல்லாம் ஏதோ தப்பித் தவறித்தான். இந்த ஜமீந்தார் பரம்பரையில் பெரும்பாலோர் கல்வி கற்றவரேயல்லர். இந்த வம்சத்துப் பெண்களும் இளம் வயதிலேயே வாழ்க்கைப்பட்டு, எங்கெங்கோ ஒடுங்கிக் கிடக்கின்றனர். இந்த வம்சத்தில் புகுந்த பெண்கள், பல விசித்திர நோய்களுக்கு இரையாகித் தவிப்பவர்கள்.

''எங்கள் வீடா? அது ஒரு நரகமாச்சே ! என்னுடைய உடலுள்ளும் ரத்தத்திலும் எத்தனையோ பாபங்களின் ஜீவ அணுக்கள் வெள வெளத்து ஓடுகின்றன....'' என்பான் புஷ்பேந்து.

''இதெல்லாம் உன்னுடைய கற்பனைச் சாதுரியம்.... உன் வம்சத்தையோ, உன்னுள் ஓடும் ரத்தத்தையோ எதற்காகப் பழித்துக் கூறுகிறாய்? மனம் வைத்தால்] உன்னையே நீ ஒழுங்காக்கிக் கொள்ள முடியும்'' என்பேன் நான்.

''எப்படி, உன்னைப் போல் நல்ல தன்மை மிக்கவனாகவா? வெற்றிலை, புகையிலை பழக்கமே இராமல், சிகரெட் குடிக்காமல் புத்தகத்தை விட்டுக் கண்ணையே எடுக்காமல், யாராவது ஒரு குட்டி வாசலில் போனால் அந்தப் பக்கம் நோக்காமல், இப்படி ஒரு நல்ல பிள்ளையாண்டானாக மாற வேண்டும் என்றே நான் ஆசைப்பட மாட்டேன்.... அப்படி என்ன மோசமான பையன் தான் ?''

அவன் இப்படிப் பேசியதற்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை எனக்கு.

அப்புறம் எங்கள் பிரின்ஸிபால் அமிய சக்ரவர்த்தியின் அழைப்பை ஏற்று ஒரு சமயம் நாங்கள் அவர் வீட்டுக்குச் சென்றிருந்தோம். கல்லூரி நிகழ்ச்சி ஒன்றில் நான் ரவீந்திர ஸங்கீதம் பாடினேன். அமிய பாபு அந்தப் பாட்டை மிகவும் ரசித்துக் கேட்டார். இதனால் அவருடைய வீட்டுக்கு அடிக்கடி செல்வதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. அவர்கள்

வீட்டில் அடிக்கடி நடக்கும் சிறு குடிசை விருந்துகளில் கலந்து கொள்ள ரசிகர்கள் கூடுவார்கள். அது போன்ற ஒரு நிகழ்ச்சியில் பங்கு கொள்ள அவர் என்னை அழைத்திருந்தார்.

அதற்கு நான் ஒருத்தனாகச் செல்ல ஏதனாலோ எனக்குக் கூச்சமாக இருந்தது. ஒரு வகையான பயமும் இருந்தது. ஒருவேளை நான் அங்கே போய் வருவதை அறிந்தால் இந்தப் புஷ்பேந்து என்னை மற்ற மாணவர்கள் முன்னிலையில் பரிகாசம் செய்யக்கூடும் என்ற நினைவுதான். வேறில்லை. அமிய பாபுவுக்கு ஒரு மகள் உண்டு; அவள் நல்ல அழகி. என்னைவிட ஒரு வருடம் ஜூனியராக இருக்கலாம் அவள். ஆனால் பெண்களுக்கான வகுப்பு காலை நேரத்தில்தான். பெயரளவுக்குத்தான் இந்த மாணவிகள் எங்களுடன் படிப்பவர்கள். 'இவர்களுடன் ஒரே வகுப்பில் சேர்ந்து அமர்வதற்கான வாய்ப்பே நமக்கு ஏற்படவில்லை.' — புஷ்பேந்துவிடமிருந்து இப்படிப் பெருமூச்சுடன் ஓர் ஏக்கக் குரல் வரும். இவ்வளவு கட்டுப்பாடுகள் இருந்தும், இந்த மாணவிகள் சிலருடன் புஷ்பேந்து தொடர்பு கொண்டு பழகிப் பேசி வந்தான். ஆனால் இந்த ஸுஷ்மிதா சக்கரவர்த்தியிடம் அவனுடைய ஜபம் பலிக்கவில்லை.

''அவளைப் போல ஒரு திமிர் பிடித்த பெண்ணை நான் பார்த்ததே யில்லை. அவள் ஒரே கர்நாடகம். பழைமையில் ஊறிக் கிடப்பவள். புத்தகத்தை உருப்போடுபவள். மட்டு மரியாதை ஏதும் தெரியாதவள்'' என்றெல்லாம் பழித்துக் கூறலானான் புஷ்பேந்து.

நான் சிரித்துக் கொண்டே, ''பாவம், நீ போய் அவளுக்கு மட்டு மரியாதையெல்லாம் கற்றுக் கொடேன்... அப்புறம் நடக்கிற வேடிக்கையைப் பார்க்கலாம்'' என்றேன்.

அமிய பாபுவுக்கு புஷ்பேந்து என்றாலே பிடிக்காது. எந்த புரொபசருக்குத்தான் அவனிடத்தில் பிரீதி? பெரிய இடத்துப் பிள்ளைதான் புஷ்பேந்து; ஆனால் எந்தக் குடும்பத்திலும் தாராளமாகப் பழக அவனுக்குச் சலுகை இருந்தால்தானே!

அமிய பாபுவின் விருப்பத்தைக் கேட்டுக் கொண்டு புஷ்பேந்துவை என்னுடன் அவர்கள் வீட்டுக்கு இட்டுச் சென்றேன்.

அன்று அச்சிறு இசை விருந்து மிக நன்றாகவே அமைந்திருந்தது. எங்கள் இருவருக்கும் அன்று ஸுஷ்மிதா அறிமுகமானாள். அளவளாவினோம். அமிய பாபுவே அவளை எங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவருடைய இல்லாளும் அன்பும் பரிவும் காட்டினாள்.

ஸுஷ்மிதா அன்போடு உரையாடுபவள். எவருடனும் ஓரிரு வார்த்தைகளுக்கு மேல் அவள் பேச மாட்டாள். இத்தகையவள் தன் வாயாலேயே நான் 'பாடியதை மெச்சிப் புகழவே என் உள்ளம் குளிர்ந்துவிட்டது. அவள் இப்படி என்னைப் பற்றி உயர்த்திக் கூறிவிடவே இசையை மேலும் பயில வேண்டும் என நான் எண்ணம் கொண்டேன். ஆனால் அந்த எண்ணமும் நிறைவேறவேயில்லை.

எந்த அவ வேளையில் புஷ்பேந்துவை அமிய பாபு வீட்டுக்கு அழைத்துச் சென்றேனோ... அதைப்பிடித்து புஷ்பேந்து, இந்த ஸுஷ்மிதாவின்



டைரக்டர்: நாம் இதுவரை படம் பிடித்த காரைக்கால் அம்மையார் அனேகமாக அடுத்த வாரம் முடிந்து விடும்.

ப்ரொட்யூசர்: எப்படியாவது நம்ம படத்தில் கார் ரேஸ், ரயில் சேஸ், குத்துச் சண்டை, நைட்டுகிளப் லவ் சீன், ஜெயில் டான்ஸ், மர்மக் கொலை, குடிகார டான்ஸ் இவைகளையும் சேர்த்து விடுங்கள்.

தியானத்திலேயே லயித்து விட்டான். அவன் என்னிடம், ''பரிமல், அவளைத்தான் நான் மணப்பேன்... நீ இதற்காகத் தரகு வேலை செய்ய வேண்டும். நீ வெற்றியுடன் வந்தால் இதுவரை யாருமே தராத சம்மானம் உனக்குத் தருவேன்'' என்றான்.

''போயும் போயும் உன்னைப் போல் ஒரு பையனுக்கா அமிய பாபு தம் மகளைத் தருவார்?'' என்றேன் நான்.

புஷ்பேந்து சீறி எழுந்தான் — ''எனக்குத் தரமாட்டாரா? உன்னைப் போன்ற ஒரு பொட்டைக்கா கொடுப்பார்?''

சிரித்தவண்ணம் நான், ''இல்லை, எனக்கும் தரமாட்டார். நான் அவளுக்காக ஏங்கியிருக்கவில்லை. நீ இன்னும் கல்லூரியில் படிக்கும் மாணவன்தானே... நல்ல வேலையில் அமர்ந்து சம்பாதிப்பவனாக இருந்தால்—'' என்றேன்.

புஷ்பேந்து இதற்கு, ''இப்போது நான் சம்பாதிக்கவில்லை. ஆனால் கொஞ்ச நாள் ஆனதும் சம்பாதிக்காமலா போவேன்? நிச்சயதார்த்தத்தை இப்பொழுது முடித்துக் கொள்வதில் என்ன தவறு? மேலும் வேலை செய்து நான் சம்பாதிக்க வேண்டிய அவசியமுமில்லை. எனக்குள்ள சொத்து, என் தலைமுறைக்கும் அதற்கு மேலும் சும்மா உட்கார்ந்து சாப்பிடும் அளவுக்கு இருக்கிறதே. என் மனைவியை ராஜாத்தி மாதிரி வைத்துக் கொள்ள முடியும்'' என்று பதிலுரைத்தான்.

அவன் முகத்தில் சிரிப்பு உலாவிற்று. ஆனாலும் பெரிய தோரணையில் ஏளனம் தொனித்தது.

நானும் சிரித்துவிட்டு, ''சரி, நான் தரகு வேலையைத் தொடங்கித்தான் ஆக வேண்டும் போலிருக்கு. ஆனால் உன்னைப் போல் ஒரு கந்தருவன் இந்தத் தரகு வேலை முடியும் மட்டும் காத்திருப்பானா?'' என்றேன்.

''கட்டாயம் காத்திருக்கவே முடியாது... ராகவுலு மண முறையால் நம் வைஸ் பிரின்சிபலின் செல்வ மகளைக் கொல்வதுதான் சிறந்த வழி.''

இதைக் கூறியதும் 'ஹோ' 'ஹோ'வெனப் புஷ்பேந்து நகைத்தான்.

* * *

நாங்கள் வகுப்பில் மூன்றும் வருஷத்திலிருந்து நாலாவது வருஷத்துக்கு வந்த சில நாட்களுக்கெல்லாம் அமிய பாபு தம் செல்வியை ஓர் என்ஜினியருக்கு மணம் செய்து கொடுத்து விட்டார். எனக்கு அழைப்பிதழ் வந்து அந்த மண விழாவுக்குச் சென்றிருந்தேன். ஆனால் புஷ்பேந்துவுக்கு அழைப்பு வரவில்லை.

கல்யாணச் சாப்பாடானதும் நான் ஹாஸ்டலுக்குத் திரும்பி வந்தபோது, புஷ்பேந்து ''உனக்கு வெட்கமாக இல்லையாடா...நீ ஓர் ஆண்பிள்ளையாடா? தாம்பூலம் மென்று கொண்டு வருகிறாயே...'' என்று ஏசினான்.

நானும் சிரித்தவாறு, ''இதனால் என்ன,. தப்புக் காரியம் செய்யவில்லையே?'' என்றேன்.

புஷ்பேந்து, ''இதனால் என்னவா...? நீயும் அவளை அடையவில்லை. நானும் அவளை அடையக் கொடுத்துவைக்கவில்லை'' என்றான்.

நான் திடுக்குற்று அவன் முகத்தையே நோக்கினேன். அவன் முகத்தில் துளியேனும் சிரிப்பே இல்லை. அவனுடைய கண்கள் பயங்கரமாகச் சிவந்து விளங்கின. எனக்குச் சற்றுப் பயமாகவே இருந்தது.

''என்ன வாயில் வந்தபடி உளறுகிறே புஷ்பேந்து? நீ ஒரு கழுதை.''

அவன் சற்று நகர்ந்து வந்து, திடுமென என் முதுகில் சிறு தடிகொண்டு புடைத்தான்.

நான் அப்படியே ஸ்தம்பித்துப்போய் நின்றேன். ''இதென்ன என்னிடம் நீ விளையாடுகிறாயா? நீ இப்படி நடந்து கொள்வது சுத்தமாக நன்றாக இல்லை புஷ்பேந்து'' என்றேன்.

''நன்றாக இல்லையா?...இதோ பார் இப்போது நன்றாக இருக்கும்'' என்றதும், மீண்டும் என் முதுகில் இரண்டாந்தரமாகத் தடிகொண்டு அடித்தான்.

நான் பொறுமை இழந்தேன். அவனுக்குள்ள வலிமை எங்கே, என் வலிமை எங்கே? இதை நான் சிறிதும் உணராமல், அவனுடைய கன்னம் புளிக்கும்படி ஓர் அறை விட்டேன்.

அன்று அவனுடைய வலிவான கைக்குள் சிக்கி நான் மாண்டு போயிருக்க வேண்டும். நல்ல காலம், அக்கம் பக்கத்து அறைகளிலிருக்கும் மாணவர்கள் ஓடிவந்து எங்களை விலக்கி அப்புறப்படுத்தினர். ஹாஸ்டல் வார்டன் புஷ்பேந்துவை மிகவும் கடிந்து பேசினார். அவனுடைய கொடிய தன்மையும் துஷ்ட நடத்தையும் எவருக்கும் தெரியாத விஷயங்கள் அல்ல.

புஷ்பேந்து ஹாஸ்டலை விட்டுப் போய் விட்டான். அவன் கல்லூரியில் வகுப்புக்கும் வருவதில்லை. தன் சொந்த இடமான நவக்கிராமத்துக்கே போய்ச் சேர்ந்தான்.

நான் டெஸ்ட் பரீட்சை முடிந்ததும் ஹாஸ்டலிலேயே தங்கி விட்டேன். என் தகப்பனார் ரயில்வே உத்தியோகஸ்தர். ஊரில் தாயும், உடன் பிறந்தவர்களும் இருந்தார்கள். ஹாஸ்டலில் இருந்தால் படிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்; அடிக்கடி ஆசிரியர்களிடம் சென்று பாடம் தெளிய வசதியாக இருக்கும் என்று நினைத்தேன்.

அன்று மாலை நேரம் வரை படித்தானதும் உலாவ வெளியே கிளம்பிச் சென்றேன். சௌதுரி வீட்டாரின் அந்த மாந்தோப்பு மதில் ஓரமாகத் தனியாகச் சென்றுகொண்டிருந்தபோது சட்டென்று என் முன் புஷ்பேந்து எதிர்ப்படவே நான் விலவிலத்துப் போனேன். அவன் என்னுடைய வழியை மறித்துக் கொண்டு நின்றான். அக்கம் பக்கம் ஒரு ஈ காக்கை இல்லை. நான் இரண்டடி பின் வைத்தேன் காலை.

புஷ்பேந்து என்மீதே நிலைத்த பார்வையுடன் சில கணம் நின்றதும், ஒரு விகாரச் சிரிப்புச் சிரித்து, ''பரிமல், இப்போது சிக்கிக் கொண்டாய்'' என்றான்.

நான் அச்ச மிகுதியால் குரல் நடுங்க, ''இப்போது என்ன செய்யப் போகிறாய்?'' என்றேன்.

''இதோ இப்போதே உன்னைத் தூக்கி, இந்த மதிலுக்கு மேலே எறிந்து முடிவுகட்டி விடுவேன்டா... என்ன சொல்லுகிறாய்?'' என்றான் புஷ்பேந்து.

எனக்குத் தொண்டையே பயத்தால் வறண்டுபோய் விட்டது. அவனுடைய கண்களில் அப்போது கண்ட அந்தச் செந் தீ அவனுடைய கொடூரத் தன்மையை வெளிப்படுத்தியது.

நான் ஒவ்வோர் அடியாகக் கால் வைத்துப் பின்னுக்கு வாங்கினேன். ''உன்னால் அப்படியெல்லாம் செய்ய முடியாது'' என்றேன்.

புஷ்பேந்து நகைப்புடன், ''முடியாதென்று யார் சொன்னது? என்னால் எதுவும் ஆகும். இந்த நிமிஷமே உன் மென்னியைத் திருகிக் கொன்று போட்டுவிட முடியும். அதற்கான சக்தி என்னிடம் இருக்கிறதடா. சரி, பிழைத்துப் போ. இன்று உன்னை விட்டேன்... சமர்த்தாகப் போய்ப் படி. பரீட்சைக்காக நன்றாகப் படியடா. ஆனால் இந்தப் பரீட்சை வரைக்கும் நீ தாக்குப்பிடிக்க வேண்டும்'' என்றான்.

என்னை இவ்வாறு அச்சுறுத்திவிட்டு புஷ்பேந்து மரங்களின் நிழலோடு நிழலாக மறைந்து போனான்.

நவக்கிராமத்திலிருந்து நான் இருக்குமிடம் அப்படித் தொலைவானதன்று. பத்துப் பன்னிரண்டு மைல்களுக்குள் இருக்கும். பஸ் போக்குவரத்துள்ளது. ரயில் வழியாகவும் போகலாம். புஷ்பேந்து வீட்டாருக்கே சவாரி வண்டி இருந்தது.

நான் ஹாஸ்டலுக்குத் திரும்பியவுடன் நெருங்கிய நண்பர்களிடம் நடந்ததையெல்லாம் சொன்னேன். அமர் அதைக் கேட்டு இடியிடியென்று நகைத்தான். ''சும்மா உன்னை மிரட்டியிருக்கிறான். மென்னியைப் பிடித்துக் கொலை பண்ணுவது அவ்வளவு இலேசான காரியமா?'' என்றான்.

அதில் மட்டும் ஆழ்ந்த முகபாவனையுடன் ''அப்படி நடக்காது என்று சொல்வதற்கில்லை. நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்கள் குடும்பத்தில் கொலை பாதகர்கள்

இருந்ததாக. அவர்களில் சிலர் கொடிய குற்றம் செய்தவர்கள். சிலர் வெறியர்கள்'' என்றான்.

அன்று இரவு எனக்கு நன்றாகத் தூக்கம் வரவேயில்லை. கனவில் புஷ்பேந்துவின் முகத்தைப் பார்த்து வெருவினேன். அப்பா அம்மாவுக்குக் கூட இதைப் பற்றி நான் தெரிவிக்கவில்லை, அவர்கள் திகில்படப் போகிறார்களே என்று. ஆசிரியர்களிடமும் இதைப் பற்றி நான் சொல்லவில்லை. என்னுடைய பயத்தைப் பார்த்து அவர்கள் சிரிப்பார்கள் என்பதனால். போலீசுக்குத் தகவல் தந்தாலும் இதை 'ஸீரியஸாக' எடுத்துக் கொள்ள மாட்டார்கள். ஆனால் புஷ்பேந்துவின் அந்தக் கொடிய பார்வை என்னை இரவு பகல் விடாமல் தொடர்ந்து வந்தது. நான் அப்படி அவனிடமிருந்து தப்பிப் பிழைத்தாலும் பரீட்சை எழுத முடியாது போலவே தோன்றியது. எதனாலோ ஒரு பீதி என்னுள் புரையோடி, என்னைப் பைத்தியம் பிடித்தவனைப் போல் செய்து விட்டது.

மூன்று மாதங்களுக்குள் இரு முறை நான் புஷ்பேந்துவிடம் அகப்பட்டுக் கொண்டேன். ஒருதரம் சாந்தமாரி மைதானத்தில். மறுதடவை ரயிலடிக்கு அருகில். அந்த இரு முறையும் என்னைக் கொன்று போட்டு விடுவதாகவே அவன் பயம் காட்டினான். கடைசியாக அவனிடம் சிக்கிக் கொண்டபோது அவன் கையில் ஒரு பிஸ்தல் இருந்தது. அக்கம் பக்கத்தில் அத்தனை பேர் நடமாடுகையில் அவன் அந்த பிஸ்தலைக் காட்டி என்னைத் திடுக்கிடச் செய்ததுதான் ஆச்சரியமான விஷயம். நான் எவரையும் உதவிக்கு அழைக்கவில்லை. என் தொண்டையிலிருந்து குரலே எழும்பவில்லை.

அவன் நகைத்து, ''சாவதற்கு என்ன நடுங்குகிறாயடா?'' என்றான்.

''நான் எதற்காகச் சாக வேண்டும்? சாவதற்கான வயது எனக்கு வரவில்லையே!'' என்றேன் நான்.

''சாவதற்கு வயது என்று ஒன்று உண்டா? இளம் வயதில் பொடுக்கென மரிப்பதே நல்லதடா. அதில் வேதனை அதிகம் இருக்காது. என் பெரியப்பா ஒருவர் எண்பது வயதுவரை இருந்தார். உடலாலும் உள்ளத்தாலும் வேதனையால் உழன்றார். கடைசி வரைக்கும் துன்பத்துடன் போராடியே மாண்டார். என் கண்ணாலேயே பார்த்தேன்.''

''இருக்கலாம். நான் இவ்வளவு இளம் பிராயத்தில் சாக விரும்பவில்லை. இன்னும் இந்த உலகில் நான் எவ்வளவோ பார்க்க வேண்டும்; அனுபவிக்க வேண்டும்; சாதிக்க வேண்டும்.''

புஷ்பேந்து பக்கெனச் சிரித்துவிட்டு ''உலகமாவது வெங்காயமாவது...நீ ஏதோ காரண



''உங்களை நான் மாமனாராக அடைவது குறித்து சந்தோஷப் படுகிறேன்.''
''எதனாலே?''
''மாப்பிள்ளை வந்து என் தலையை மொட்டை அடித்து விட்டார்னு நீங்க என்னைப் பற்றி சொல்ல முடியாதே. அதனால்தான்.''

மாகத்தான் இங்கே தங்கியிருக்கிறாய்...எனக்குத் தெரியுமடா'' என்றான்.

''எதற்காக? நீயே சொல்லேன்.''

''அந்த ஸாமிதாவுக்காகத்தான். அவள் இந்த ஊரில் இல்லைதான். ஆனால் அவளுடைய மனம் இங்கே உலவுகிறதே... அதுவே உன்வரைக்கும் போதுமே...''

''என்ன பைத்தியம் போல் உளறுகிறாய்?''

புஷ்பேந்துவின் குரலில் திடீரென ஒரு மாறுதல். அவனுடைய விழி நோக்கில் அர்த்தமற்ற ஒரு கலக்கம். அவன் மெதுவாகவே, குரலில் உறுதியுடன், ''இதோ பார் பரிமல். இந்த உலகில் ஒன்று நீயாவது வாழவேண்டும்; இல்லை நானாவது வாழவேண்டும். இரண்டு பேருக்கு இங்கே இடம் இல்லை. யாராவது ஒருத்தர் தொலையத்தான் வேண்டும்'' என்றான்.

புஷ்பேந்து அகன்றான். நான் எத்தனையோ பேரின் உதவியைப் பெற எவ்வளவோ முயன்றேன். ஆனால் என் தொண்டையை விட்டுக் குரல் வந்தால்தானே? என் தொண்டையின் உட்புறம் ஏதோ ஒன்று அழுத்திக்கொண்டிருந்தது. புஷ்பேந்து என்னை மருட்டிவிட்டுப் போனது தொடங்கி என்னைச் சுற்றியுள்ளதெல்லாம், நிகழ்வதெல்லாம் வெறும் சூனியமாகவே எனக்குத் தோன்றின. 'உண்மையில் நான் அவனுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. எதற்காக அவன் என்னைக் கொல்ல வேண்டும்? எந்தப் பெண்ணைக் குறித்தும் எங்களிடையே போட்டியில்லை. சொத்துக்காகவும் பகைமை இல்லை. வீணாக ஒருவன் மற்றவனைத் தனித்த மூளையுடன் கொல்ல முயல வேண்டுமா? இதென்ன ஏதாவது பரிகாசத்துக்கா? அப்படியானால் பயங்கரமான பரிகாசம் இது! இப்படிப்பட்ட ஒரு விளையாட்டு உண்டா? இப்படி யெல்லாம் எனக்கே நான் ஆறுதல் கூறிக் கொண்டேன். ஆனால் திடுமென அவன் என் முன் வந்து நின்றான். அவன் கண்கள் தாம்... என்னை நடுக்குறச் செய்தன. அந்தப் பார்வையில்தான் எத்தனை கொடுமை, கொலையின் நிழல்! மூளை குழம்பிய ஒரு வெறியனின் அழல் விழிகள் அல்லவோ அவை!

இனம் புரிபடாத இந்தப் பயம் நாளுக்கு நாள் எனக்கு அதிகரித்து வந்தது. என்னைப் பின்தொடர்ந்து வந்தது. நமனது நிழல் போல். கனவிடையேயும் அந்தக் கொடிய கண்களைக் கண்டு நடுங்கினேன். நான் நல்ல நினைவுடன் இருக்கும்போதும் அந்தக் கண்களின் வெம்மை என் உள்ளம் வரைக்கும் உறைத்து வந்தது.... நான் திணறினேன்.

* * *

புஷ்பேந்து தன்னை மாய்த்துக்கொண்டு என்னைப் பிழைக்க வைத்தான். அவனுக்கு ஏற்பட்ட துர்மரணம் எனக்குத் துயரைத்

தரும் செய்தியாகும். ஆனால் என்பொருட்டு நான் ஆறுதல் மூச்செறிந்தேன். அச்செய்தியைக் கேட்டதும் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. 'அமைதியாக உலகில் உள்ளோம்' என்ற உணர்ச்சியை விட மனிதன் விரும்புவது வேறு ஒன்று உண்டோ?

இரண்டு நாட்களுக்குப் பிறகு தபாலில் என் பெயருக்குக் கடிதம் ஒன்று வந்தது. உறையிட்ட கடிதம். அழகான கையெழுத்தில் விலாசம் எழுதியிருந்தது. யாருடைய கையெழுத்து என்பது புரியவில்லை முதலில்.

உறையைக் கிழித்து உள்ளே இருக்கும் கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். இரண்டு மூன்று வரிகள் மீது கண்ணை ஓட்டும்போதே எழுதியது யாரெனத் தெளிவாகி விட்டது. நீல நிறமான உயர்வகைத் தாளில் முத்து முத்தான எழுத்துக்கள்.

பரிமல்,

இந்தக் கடிதம் உன் கைக்குக் கிடைக்கும் போது நான் இந்த உலகில் இருக்க மாட்டேன். வாழ்வில் நான் கொண்ட எந்தச் சங்கற்பத்தையும் நிறைவேற்றவில்லை. இதற்கு மாறாக இப்போது நான் கொண்ட ஓர் உறுதி வெற்றியுடன் முடியும்.

உன்னை உண்மையில் கொன்றுவிடவே நான் பலமுறை முயன்றேன். உன் முன் நான் நான்கு தடவை எதிர்ப்பட்டேன். ஆனால் மறைவாக உன்னைக் குறியாகக் கொண்டு எத்தனை நாள் காத்திருந்தேன்! எனக்கு அசுர பலம் உடலில்; உள்ளத்தில் ஈரம், இரக்கம் துளியும் கிடையாது. கொடிய விலங்குகளை நான் சுட்டுக் கொன்றதற்கோர் கணக்கே இல்லை. வளர்த்த நாய்களையும் பூனைகளையும் காரணமின்றி வெறும் ருசிக்காக நான் கொன்று இன்பம் கண்டவன். வீட்டைச் சேர்ந்த பணியாட்கள் என் இம்சைக்கு இலக்காகித் துடிதுடித்துப் போவார்கள். அவ்வளவு கொடியவன். இத்தனைக்கும் அப்பால் அடக்க முடியாது ஒரு பயங்கர நசை என்னுள் தலை தூக்கியது. அதுதான் மனிதக் கொலை ஒன்றைப் புரிவதற்கான பயங்கர நசை. என்னுடைய முன்னோர்கள் இந்தக் கலையில் கைதேர்ந்தவர்களெனக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதே போன்ற ஒரு மனித வேட்டைக்கு உன்னை நான் தேர்ந்தெடுத்தேன். உயர் வகையான கொலை என்பது, கொல் புலியையோ கவடற்ற மனிதனையோ கொல்வதுதான்! காரணமில்லாமல் கொல்வதைவிடக் குதூகலம் தரும் விஷயம் வேறு ஒன்று உள்ளதா! ஆனால் என்னால் அந்தச் சுவையிருந்த காரியம் நடைபெறவில்லை. உன்னைத் தொலைத்துவிட வேண்டுமென நான் முனைந்தபோதெல்லாம் களங்கமற்ற உன் இள முகம் என்னை இக் கொடிய செயலிலிருந்து தடுத்தது. நான் உறைந்துபோன கொடியவன். ஆனால் என் உள்ளத்தின் ஆழத்தில் உன்மீது ஒரு பாசம் வளர்ந்து வந்தது. இதை நான் உணராமலே இருந்தேன். சில நாட்களுக்கெல்லாம் உன்னுடைய முகமே என் மனத்தின் இடம் பெற்றது. மற்றப் பேர்களின் முகங்கள் மறைந்தன. நீயே அங்கு நிரம்பி விட்டாய். என் கனவிலும், நனவிலும், என் முன்னும் பின்னும் என்னைச் சூழ்ந்து உன் இளம் வதனமே நின்றது. மான், புலியை விரட்டி விட்டது. இந்த நாட்டின் தலைவிதி எப்போதும் தலைகீழ்தானே. பெண்ணுக்கு ராமசிங் என்று பெயர் வைக்கின்றனர். இதுவும் அதைப் போலத்தான்.

கடைசியில் நான்தான் தோற்றுப் போனேன். தோல்வியாவது வெற்றியாவது. இதில் அர்த்தமே இல்லை. நான் எவ்வாறு ஆக வேண்டும் என்று நினைத்தேனோ, அதைப்போல ஆக முடியவில்லை. ரோஜா மலரை வாடாமல் வாழ விட்டு முள்ளடர்ந்த சப்பாத்திக் கள்ளியை வேருடன் கிளப்பி விட்டுச் செல்கிறேன்.

புஷ்பேந்து

என்ன வியப்பு, இவ்வளவு இளம் வயதில் எத்தகைய அனுபவம் ஏற்பட்டது புஷ்பேந்துவுக்கு! ஆனால் இதை மட்டும் அவன் ஏனோ உணராமல் போய்விட்டான். ஒரே மண்ணில் ரோஜாவும் கள்ளியும் இரண்டுமே செழித்தோங்க முடியுமே. கடிதத்தைப் படித்துவிட்டு, மீண்டும் ஜன்னலருகில் சென்று நோக்கினேன். இலவ மரத்திலும் மாமரத்தின் தளிர்களிடையேயும் வசந்த காலத்தின் அழகெல்லாம் வாரிச் சொரிந்திருந்தது.

நாம் நிறைவான ஓர் இறுதியை நோக்கி அல்லவா இவ்வுலகில் வாழ்கின்றோம்!

—தமிழாக்கம்: த.நா.கு.

"என் பருமனைக் குறைக்கச் சிரமமில்லாத ஒரு வழி சொல்லுங்க டாக்டர்."

"ஒரே வழி, உங்களை இப்படி வரைந்த ஓவியரிடம் போய் உங்க பருமனைக் குறைக்கச் சொல்லிக் கேட்பதுதான்."



குமாஸ்தா: "பியூன் ஆறுமுகத்தை முதல்லே 'டிஸ்மிஸ்' செய்யுங்க சார்."

மானேஜர்: "என்ன சமாச்சாரம்?"

குமாஸ்தா: "நான் வேலை செஞ்சுட்டு இருக்கும்போது வந்து அடிக்கடி உலுக்கி எழுப்புகிறான். ரொம்பத் தொந்தரவாப் போச்சு."

# ஒளிமயமான ஆட்டம்

மாலை ஆறு மணி. எழும்பூர் ஸ்டேடியத்தைக் கார்கள் மொய்க்கின்றன. பாண்டு முழங்குகிறது. 'மியூஸிக்கல் சேரு'க்கு ஓடுவது போல் அவரவர் தம் 'சீட்'டைத் தேடி ஓடுகிறார்கள். பெயர் ஒட்டிய சீட்டுகள் பலரை அங்குமிங்கும் அலைய வைக்கின்றன.

"நீங்க காஸ்மாபாலிடனா? ஜிம்கானாவா?" 'சித்ரகுப்தன்' பெயர்ப் பட்டியலைப் புரட்டிய படியே வினவுகிறார்.

அதற்குள் தலை போகிற அவசரம். தாமாகவே தம் ஆசனங்களைத் தேடி ஓடுகிறார்கள். தம் பெயர் ஒட்டின சீட்டைக் கண்டதும் நிம்மதி பிறக்கிறது! குசலப் பிரச்னம் ஆரம்பமாகிறது.

ஐம்பதடி உயரமுள்ள ஒளி விளக்குகள் மைதானத்தைப் பகலாக்குகின்றன. ஆஸ்திரேலிய தேசிய கீதம் முழங்குகிறது. பிறகு ஜனகணமன கீதம் தொடர்கிறது. வேட்டாக ஓடிவரும் பலருக்கு ஆட்டம் முடிந்து விட்டதோ என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கிறது!

ஆட்டக் கதாநாயகர்கள் கிருஷ்ணன், லால், முகர்ஜி, ஸ்டோன், ராபின்ஸ் ஆகியோர் மைதான அரங்குக்குள் வருகிறார்கள். கரகோஷ ஆரவாரம் அவர்களை வரவேற்கிறது. இ.நா. சபை நிர்வாக அதிகாரி ஸ்ரீ வி. வி. நரசிம்மன் நடுநாயகமாக வீற்றிருக்கிறார். வருங்கால டென்னிஸ் மன்னன் - பொடியன் ரமேஷ் ஆட்டக்காரர்களுக்கு ரோஜா மாலைகளை அணிவிக்கிறான்.

"கிருஷ்ணன் 'பிஸினஸ், பிஸினஸ்'ன்னு அதிலேயே மூழ்கியிருந்தால் எப்படி? டென்னிஸ் ஆட்டத்தை மறந்துடலாமா?" ஒரு நாகரிக யுவதியின் விமர்சனம்!

"அதுதான் இந்து வருஷங்களுக்கப்புறம் முதல் தடவையா அத்திபூத்தாற் போல் ஆட வந்திருக்கிறார்!" என்கிறாள் மற்றொரு பெண்மணி.

ஆஸ்திரேலிய இடக் கை ஆட்டக்காரர் ராபின்ஸூம் இந்திய மன்னர் கிருஷ்ணனும் முதலில் ஆடத் தொடங்குகிறார்கள். மயான அமைதி மைதானத்தில் நிலவுகிறது. பந்து 'டொக்! டொக்!' என்று அடிபட்டுப் பறந்து பாயும் சத்தமே கேட்கிறது. முதல் செட்டை அற்புதமாக ஆடி எடுக்கிறார் திரு. கிருஷ்ணன். அனைவரது முகத்திலும் மகிழ்ச்சிக் களை இழையோடுகிறது!

"என்றைக்குமே கிருஷ்ணனின் ஆட்டம் கன ஜோர்தான்!"

சக்கரம் சுழல்வது போல் இரண்டாவது ஆட்டம் ராபின்ஸூக்குக் கிடைக்கிறது!

"கிருஷ்ணனுக்கு வயசாயிடுச்சோல்லியோ? முன்னே மாதிரி ஓடியாடிக் கொண்டிருக்க முடியுமா?"

விமர்சனத்தின் போக்கும் ஆட்டத்துக்கேற்ப மாறுகிறது.

மூன்றும் செட் இரண்டு பக்கமும் கடுமையான போட்டியாக இருந்து, ரசிகர்களை 'ஆஹாகாரம்' போட வைக்கிறது.

'அவுட்' பந்தை நடுவர் 'ரைட்' என்று சொல்ல, ராபின்ஸ் பாய்ந்து சென்று தம் மட்டையினால் விழுந்த இடம் 'அவுட்' என்று சுட்டிக் காட்டுகிறார். ரசிகர்களிடையே பலத்த சலசலப்பு எழுகிறது. கிருஷ்ணன் மிகப் பெருந்தன்மையுடன் மறுபடியும் ஆடிச் சிக்கலைத் தீர்த்து வைக்கிறார். கடைசியில் கிருஷ்ணனுக்கே ஆட்டத்தில் வெற்றி கிட்டுகிறது.

"என்ன இருந்தாலும் கிருஷ்ணன் கிருஷ்ணன்தான்! பழைய ஆட்டம் போகவில்லை!" என்று மதிப்பீடு வழங்குகிறார் கால்பந்தாட்டக் கழகத்தைச் சேர்ந்த திரு ராமச்சந்திரன்.

"இதே மைதானத்தில் கிருஷ்ணனுக்கும் மெக்ஸிகோ ஆட்டக்காரர் ஒருவருக்கும் நடந்த உக்கிரமான போட்டி நினைவுக்கு வருகிறது!" என்கிறார் கால்பந்தாட்டத் தலைவர் திரு விட்டல்.

பெங்களூர் ஹீரோ பிரேம்ஜித் லாலும் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் ஸ்டோனும் மைதானத்தில் இறங்குகிறார்கள். ஸ்டீல் மட்டையுடன் ஆடிய ஸ்டோன் பதின்மூன்று 'ஏஸ்' சர்வீஸ்களைப் பொழிகிறார். கிடுகிடுவென இரண்டே செட்களில் லாலை வென்று விடுகிறார். 'நெடுமால் திருமருகா'வைப் போல் உள்ள ஸ்டோன்!

"லால் பெங்களூரில் ஆடிய ஆட்டம் எங்கே?" என்று அங்கலாய்க்கிறார்கள் ரசிகர்கள்.

"எக்ஸிபிஷன் மாட்ச்தானே?" என்று பக்குவமாகப் பேசுகிறார் ஒருவர்.

ஸ்டோன் கல் மழையாட்டம் பிரமாதமாகப் பந்தடித்துத் தம் சர்வீஸ்களிலேயே ஆட்டத்தை முடித்துக் கொண்டு விடுகிறார்.

ராபின்ஸூம் ஸ்டோனும் கிருஷ்ணன் — முகர்ஜி கோஷ்டியினரோடு இரட்டையர் ஆட்டம் தொடங்குகிறார்கள். இரு ஜோடிகளும் பல தடவை ரசிகர்களின் கரகோஷங்களைப் பெறுகின்றனர். இறுதியில் ஆஸ்திரேலிய இரட்டையர்கள் ஸ்டோனும் ராபின்ஸூம் வெற்றி பெறுகிறார்கள்.

ஒன்பதரை மணி. சாரி சாரியாக மைதானத்தை விட்டு மக்கள் திரும்புகிறார்கள். மைதானத்தில் உள்ள ஒளிவிளக்குக் கம்பங்கள் 'ஒளிமயமான எதிர்காலம் நம் உள்ளத்தில் தெரிகிறது!' என்று பாடத் தொடங்கினாலும் அதிசயமில்லை.

—பி. எஸ். மணி

---

படங்கள் :

1. கூட்டத்துக்கு மத்தியில் நடுவர்!
2. ஆட்டக் கதாநாயகர்களான லால், ஸ்டோன், முகர்ஜி, கிருஷ்ணன், ராபின்ஸ்.
3. ஆட்டத் தொடக்கத்தில் அயல்நாட்டு விசிறிகள் விளையாடித்து மகிழ்ந்தனர்.

'ஹிராவதி' என்ற கப்பல், இரண்டு மூன்று தடவை உரசிச் சேட்டியடித்த பின் துறைமுகத்தில் வந்து இளைப்பாறியது.

"ரத்தினகிரி வந்துவிட்டது. ரத்தினகிரி! பெட்டி படுக்கைகளை இப்படிக் கொடுங்கள், இப்படி!" — நெடு நேரம் கூலியாட்களின் கூச்சல்; பிரயாணிகளின் ஓட்டம்.

ஒவ்வொரு துறைமுகம் வரும்போதும் நான் மேல்தட்டில் நின்று வேடிக்கை பார்ப்பேன். ஆனால் நாள் முழுவதும் பயணம் செய்து இப்போது உடம்பு ஓய்ந்து போயிருந்தது: 'இனி எழுந்திருக்கவே வேண்டாம்' என்று தோன்றியது. தவிர, இரவு மணி எட்டுக்கு மேலாயிற்று. ரத்தினகிரித் துறைமுகத்திலுள்ள நீண்ட விளக்கு வரிசைகள் கடல் நீரில் நிழலிட்ட எழிலை, நான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே கண்டு களித்தேன். சில்லென்று அடித்தது காற்று. பக்கத்தில் [illegible] வயதுப் புதல்வி மீனு தூக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். அவளது போர்வையைச் சரிப்படுத்தினேன்; கண்களை மூடிக் கொண்டு படுத்தேன்.

இரண்டொரு வார்த்தில் 'பொழியப் போகும் மழைக்கு முன்னறிவிப்பாக,' அவ்



மையில்தான் சிறு தூற்றல் போட்டிருந்தது. சற்றுக் குளிரும் இருந்தது. கடல் அலைகள் ஓயாமல் ஓங்கி மோதியதனால் கப்பல் ஆடிய படியே இருந்தது. ரத்தினகிரியில் ஏறிய பயணிகள் இரண்டாம் வகுப்பில் இடம் தேடி அலைந்தார்கள். உப்புக் காற்றின் தண்மை தாங்காமல் நான் துப்பட்டியை எடுத்துப் போர்த்திக் கொண்டு கண்ணயர்ந்தேன்.

ஏதோ வேகமாக இடிக்கவே என் கண் விழித்தது. என் காலில் தடுக்கித் தடுமாறி, யாரோ என்மேல் விழுந்தார்கள். விழுந்தவரின் முகம் என் முகத்தின் அருகில் இருந்தது. பெண் அவள் என்பதை அரைக் கணத்தில் உணர்ந்தேன். கம்மென்று மல்லிகை மணம், வெப்ப மூச்சு, மென்மையான பட்டின் ஸ்பரிசம் — என் உணர்ச்சி குழம்பியது, கொந்தளித்தது. பொங்கியது. அவள் இளம் பெண், அழகி என்பதை அந்த நிலையிலும் அறிந்தேன். இன்னதென்று விவரிக்க இயலாத இன்பம் உடலெங்கும் பரவியது.

ஆனால் அது கணப்பொழுது நிகழ்ச்சிதான். பரபரப்புடன் கலங்கிய அவள் கண்கள் சேலைத் தலைப்பில் மறைந்தன. அழகி தன்னைச் சமாளித்துக்கொண்டு அங்கிருந்து விலகினாள். நான் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தேன். அதற்குள் ஒரு பெரியவர் — ஐம்பதைத் தாண்டியவர் — அங்கு வந்து நின்றார்; ''மன்னிக்க வேண்டும். இன்று கப்பல் ஒரேயடியாக ஆடுகிறது. அதனால் என் மகள் நிலைதவறி உங்கள் மேல் விழுந்துவிட்டாள்!'' என்றார்.

அவர் முகத்தில் வருத்தம். இலேசாக முறுவல் பூத்தேன். இன்ப வெறியில் ஓர் எண்ணம்: 'எவ்வளவு இனிய இன்பமான மோதல்! இன்னும் அது சிறிது நேரம் நிலைத்திருந்தால்!'

என் கண் என்னையும் அறியாமல் இள நங்கையை நோக்கியது. அவளுடைய கரு விழிகள் இன்னமும் என் நோக்கத்தை ஆழம் பார்ப்பன போலவே தோன்றின. கப்பலின் மங்கிய ஒளியில் அவள் ஒப்பற்ற எழிலுடன் துலங்கினாள். மென் முறுவல் அவளது கொழுங் கன்னத்தில் நிழலிட்டது. என் உள்ளத்தை அவள் கலக்கி விடுவதை மறு கணமே உணர்ந்தேன்.

''உங்கள் பக்கத்தில் படுக்கையைப் போட்டுக்கொள்ளலாம் அல்லவா?'' — பெரியவர் கேட்டுக் கொண்டே என் அருகில் சமுக்காளத்தைப் பரப்பினார்.



ஷரத் விட்டல் வாரட்கர் மகாராஷ்டிர ராஜ்யத்தைச் சேர்ந்த கொங்கணத்தின் சிறு நகரமான கட்டாவில் பிறந்தவர். ஆசிரியத் தொழிலை மேற் கொண்டவர். கல்வித் துறையிலும் சமூகத் துறையிலும் சிறப்பான பணி புரிபவர். எழுத்துலகிலும் புகழ் பெற்றவர். நாவல், நாடகங்கள் எழுதித் தம் திறமையை நிலை நாட்டிக் கொண்டவர். அழகு பேசாமலே இருந்து கொண்டு எப்படி உள்ளத்தை ஊடுருவி ஆட்கொள்ளுகிறது என்பதைத் 'தங்க அரளி' என்னும் தம் கதையில் அழகாகச் சித்திரிக்கிறார். ❀

''பேஷாக! பம்பாய் வரையில் எனக்கும் நல்ல துணை'' என்று உல்லாசத்துடன் உரைத்தேன்.

பெரியவர் வம்பளப்பில் வல்லவர். என் அலுவலகத்தில் பலரை அவருக்குத் தெரிந்திருந்தது. படுத்த படியே நாங்கள் பேசினோம். அவருக்கு ஏதோ ஒரு நெசவாலையில் வேலை. குடும்பத்தில் இரண்டே பேர். அவரும் ஒரே புதல்வியும். தாரமில் எங்கோ குடித்தனம். கிழவரின் வாய் ஓயவில்லை. நான் வெறுமே 'ஊம்' கொட்டியபடி இருந்தேன். ஆனால் என் மண்டையில் விந்தைப் புயலொன்று வீசியது.

கிழவர் மெல்லத் தூக்கத்துக்கு வசமானார்; குறட்டையும் விடலானார். எனக்கு 'அப்பாடா' என்று இருந்தது. ஓசைப்படாமல் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தேன். பக்கத்தில் பார்வையை ஓட்டினேன். இளம் பெண்ணும் அந்தப் புறமாகத் திரும்பித் தூங்கிக் கொண்டிருந்தாள். மயக்கும் அவளது தூய எழிலை நான் எவ்வளவு நேரம் கள்ள விழியுடன் பார்த்தபடி இருந்தேனோ, தெரியாது! அந்த இளம் பெண் இருந்த இடத்தில் என் இறந்துபோன மனைவி உஷா தோன்றினாள். சின்னஞ் சிறு மின்னலைப் பார்த்தேன். பழைய நினைவுகள் கண்முன் சுழன்றன.

உஷாவின் உறவில் நான் வாழ்ந்தது மூன்றே ஆண்டுகள்தாம். அவள் பம்பாயில் ஒரு லட்சாதிபதியின் மகள். மிகவும் செல்லமாக வளர்ந்தவள். கல்லூரியில் 'பாட்மின்டன் சாம்பிய'னாகப் புகழ் பெற்றவள். ஒரு 'மாட்சி'ல் நாங்கள் அறிமுகமானோம். நானும் நன்றாக ஆடுவேன். என் திறமையைக் கண்டு அவள் வியந்தாள். அன்பு தீவிரக் காதலாக மலர்ந்தது. அவள் என்னை மணந்துகொள்ள விரும்பினாள். ஆனால் என் அறிவு அதைத் தடுத்தது. காரணம்: நான் ஏழை; ஒரு பாங்கில் குமாஸ்தாவாக இருந்து கொண்டே கல்லூரியில் படித்து வந்தேன். அவளுக்கு எத்தனையோ வகையில் அறிவுரை கூறினேன். ஆயினும் அவள் இம்மியும் அசையவில்லை. எனக்காகத் தன் செல்வத்தைத் துறக்கத் தீர்மானித்தாள். அப்புறம் நான் தடுக்க ஏதுமில்லை. பெற்றோர்களின் கடுமையான எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் அவள் என்னை மணந்தாள்.

காதலின் முதல் வேகம் தணிந்ததும் செல்வத்தில் வளர்ந்த உஷாவின் மனம், 'பத்தடிக்குப் பன்னிரண்டடி' அளவுள்ள

பெட்டி அறைக்குள் குமுற ஆரம்பித்தது. இதை நான் அடிக்கடி கவனித்தேன். அவளைச் சிரித்த முகத்துடன் சுமுகமாக வைத்துக் கொள்ள ஆனமட்டும் முயன்றேன். அவள் தன் துன்பத்தை உள்ளே அடக்கி வைத்து மேலுக்கு ஆனந்தமாக இருப்பதாகத் தோன்றினாள். முன்பு முகத்தில் கொழித்த அவளது எழில் நாளுக்கு நாள் வாடியது. அவளது ஸ்பரிசத்தில் கிளுகிளுப்பு இல்லை. உதட்டில் புன்னகையையும் நெஞ்சில் கண்ணீரையும் வைத்துக்கொண்டு அவள் வளைய வந்தாள். எல்லாம் தெரிந்திருந்தும் என்னால் ஏதும் செய்ய இயலவில்லை.

ஓர் ஆண்டு கடந்தது. உஷா உண்டாகியிருந்தாள். அவளுடைய பெற்றோருக்கோ அப்போதும் வைராக்கியம் தளரவில்லை. மீனு பிறந்தபோதுதான், ''போனதை மறந்து விடுங்கள். உஷாவுடன் எங்கள் வீட்டுக்கு வாருங்கள். எங்கள் ஒரே வாரிசு அவள். எங்கள் உடைமைகளை உங்கள் இருவருக்கும் எழுதி வைத்துவிட்டுக் காசி யாத்திரை போவதாக இருக்கிறோம்'' என்று அவர்கள் செய்தி சொல்லி அனுப்பினார்கள்.

ஆனால் உஷா தன்மதிப்பு மிக்கவள். 'வர முடியாது' என்று சொன்னதுடன், செய்தி கொண்டு வந்த காரியஸ்தரையும் அவள் அவமானப்படுத்தி அனுப்பினாள். அன்றையிலிருந்து அவள் மனத்துக்குள்ளேயே மறுகினாள், கரைந்தாள். முதற் பிரசவமே அவளுக்குத் தாங்கவில்லை. ஒரு மாதக் குழந்தை மீனுவை என் கையில் ஒப்படைத்து, அவள் கண் மூடினாள். என் குடும்பம் பாழாயிற்று. நான் தனியானேன்.

உஷா எனக்காகத் தன் செல்வம் அனைத்தையும் துறந்தாள்; என் இன்ப துன்பங்களுடன், என் எளிய வாழ்வுடன் ஒன்றினாள்.

அவளைச் சுகமாக வைத்திருக்க என்னால் முடியவே இல்லை. இந்த வருத்தம் எப்போதும் என் நெஞ்சில் இருந்தது. அவளுடைய உயர்வான நினைவுக்கு ஈடாக இருந்தாள் மீனு. உஷாவை உள்ளத்தில் இருத்தி, நான் வாழ்நாளைக் கடத்த நிச்சயித்தேன். பெண்களைப் பெற்றவர் பலர் என் வீட்டை நாடினார்கள். 'திருமணம் இனி வேண்டாம்' என்று கூறி, அவர்களைத் திருப்பி அனுப்பினேன். மீனுவின் கவலை எனக்கு. மறுமண எண்ணத்தையே வெறுத்தேன். மீனுவுக்கு ஏற்படக்கூடிய தொல்லை; உஷாவின் தெய்விகக் காதலுக்கு விளையக்கூடிய துரோகம்! உஷா கடைசி வரையில் எனக்காகவே வாழ்ந்தாள். அவளுக்காக நான் இவ்வளவு தியாகங்கூடவா செய்யலாகாது?

உஷா காலமான பிறகு நான் எங்கள் கொங்கணத்துப் பக்கம் போனதில்லை. அம்மாவும் மீனுவைப் பார்க்க ஆசைப்பட்டாள். ஆகவே, ஒரு மாத விடுமுறையில் ஊருக்கு வந்திருந்தேன். மீனு ஒரு வாரப் பொழுது மாங்கனிகளிலும் பலாப் பழங்களிலும் சுவை கண்டிருந்தாள். பிறகு அவளுக்குத் தன் பம்பாய்ச் சிறு தோழிகளின் நினைவு வந்து விட்டது. ''பம்பாய்க்குப் போகலாம்ப்பா!'' என்று என்னைத் துளைத்தெடுத்தாள். அப்புறம் கொங்கணத்தில் தங்கியிருக்க என்னால் முடியவே இல்லை.

மீனு தூக்கத்திலிருந்து எழுந்திருக்கவே என் நினைவுச் சங்கிலி அறுந்தது.

நான் பையிலிருந்து ஒரு பிஸ்கட்டை எடுத்து அவளிடம் கொடுத்தேன். அதைச் சுவைத்துக்கொண்டே அவள் ஓயாமல் பேசலானாள்: ''கப்பல் ஏம்பா நகரலே இல்லே?'', ''நாம் எப்போப்பா பம்பாய்க்குப் போவோம்?'', ''ஓட்டமாக ஓடினால் சீக்கிரம் போய்ச் சேரலாமே!'' — இப்படிப் பல கேள்விகள்: அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் விழித்துக்கொண்டார்கள்.

அருகில் வளையல்கள் கணீரென ஒலித்தன. அந்த இளம் பெண் சேலைத் தலைப்பை இழுத்து விட்டுக்கொண்டு எழுந்து அமர்ந்திருந்தாள். அவள் முதலில் என்னையும் அடுத்து மீனுவையும் பார்த்தாள். குழந்தையை எடுத்துக் கொள்ள அவள் கையை நீட்டினாள். குழந்தை உதட்டைக் குவித்துக்கொண்டு என்னைப் பார்த்தாள். ''அப்பா, இவள் என் அம்மாவா? இவளிடம் போகட்டுமா?'' என்றாள்.

என் அநுமதிக்குக் காத்திராமலே மீனு ஓடிப் போய் அவளை அணைத்துக்கொண்டாள். நான் கண நேரம் திடுக்கிட்டேன். என்ன பைத்தியக்காரக் குழந்தை இவள்!

நான் குற்றமிழைத்த பாவனையில் பெரியவரை நோக்கினேன். அவர் என் முகத்து மாறுதலையே கவனித்தார்.

''மீனுவின் பேச்சை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாதீர்கள். அவள் பிறந்ததுமே தாயை இழந்தவள்; அதனால் யாரைக் கண்டாலும் அம்மா என்று ஓடி விடுகிறாள்!'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் விளக்கினேன். ஆயினும் என் மன உறுதி தளர்ந்தது. காரணம்: மீனு இவளைத்தான் முதலில் பார்த்த கணமே 'அம்மா' என்று கூப்பிட்டிருக்கிறாள். 'உண்மையிலேயே இந்த அழகி எனக்கு மனைவியானால்?' என்ற வேண்டாத நினைப்பு என்னுள் எழுந்தது.

மீனு அந்த யுவதியின் மடியில் இடம் பிடித்துக்கொண்டு, அவள் கொடுத்த மாம்பழத்தைச் சுவைக்கலானாள். மஞ்சள் நிற மாஞ்சாறு மீனுவின் வாயிலிருந்து அந்தப் பெண்ணின் உடலிலும் உடையிலும் பெருகியது. ஆனால் அதைப் பற்றிய நினைவே அவளுக்கு இல்லை. போதாக் குறைக்கு அவள் தன் புடைவைத் தலைப்பினால் மீனுவின் வாயைத் துடைத்தாள்; குழந்தையின் உதட்டிலும் கன்னத்திலும் ஓயாமல் முத்தமிட்டாள். குழந்தையை அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

நான் இவ்வளவையும் கண் களிப்பப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''இவள் என் மகள் சாந்தா. பத்து வயதில் இவளுக்கு விஷக் காய்ச்சல் ஒன்று கண்டது. அதில், இவளுக்குப் பேசும் சக்தி போய்விட்டது! கலகலவென்று பழகும் சுபாவம். பாருங்களேன், உங்கள் குழந்தையை இவள் எப்படிக் கவர்ந்துவிட்டாள்!'' என்று சொன்ன கிழவர், கண்ணீரை விரல்களால் துடைத்துக்கொண்டார்; ''எனக்கு இவளைப் பற்றித்தான் கவலை. இவளுடைய வருங்காலம் என்ன? இவளழகு லட்சத்தில் ஒருத்திக்கு வராது. சுபாவம், குணம்—எல்லாம் பத்தரை மாற்றுத் தங்கம். ஆனால்,

# வாழ்க்கையில் முன்னேற வளமான திட்டம்

எங்களிடம் கீழ்க்கண்டோர் பயனடையும் வகையில் எளிதான நிபந்தனைகளில் பல கடன் வழங்கும் திட்டங்கள் இருக்கின்றன

- போக்குவரத்து இயக்குனர்கள்
- மெகானிக்குகள் பழுதுபார்ப்போர்
- சில்லறை விற்பனையாளர்
- மாணவர்கள்
- டாக்டர்கள்
- சம்பளம் வாங்குவோர்
- விவசாயிகள்
- சிறு தொழில் அதிபர்கள்
- ஏற்றுமதியாளர்கள்

## பஞ்சாப் நேஷனல் பாங்க்












Freshness is Forbina. Because Forbina is a deodorant as well as a talc. Checks excessive perspiration. Mildly antiseptic, Forbina prevents skin irritations, prickly heat and rashes. And it is gentle enough for the most tender skin.

*freshness is a feeling*
*you can wear all day long*

*freshness is a fragrance*
*you can wear all day long*

*freshness is forbina*
*you can wear all day long*

CIBA Cosmetics

எவன் இவளுக்குத் தாலி கட்டுவான்? அந்தக் காய்ச்சலிலேயே இவள் சிறு வயதில் செத்துத் தொலைந்திருந்தால் தேவலை என்றுகூட எத்தனையோ தடவை நினைத்திருக்கிறேன்!''

கிழவரின் இந்தப் பேச்சு, கண்டபடி தாவிச் சென்ற என் சிந்தனைக்கு முட்டுக் கட்டை போட்டது.

சாந்தா ஊமை! இவ்வளவு அழகிய இனிய பெண் ஊமையா! எனக்கு நம்பிக்கையே விழவில்லை. சாந்தாவை மணக்கும் கள்ள நினைவு என்னுள் பனியாக உறைந்தது. என் கண் அவளது உள்ளத்தை ஊடுருவி ஆராய்ந்தது.

எப்படி இது சாத்தியம்? சாந்தாவின் குவளையங் கண்களில் என்ன கனிவு, என்ன உணர்ச்சி! இவளது கடைக்கண் வீச்சினால் ஊமையனும் வாக்கு வல்லமை பெறுவானே; உணர்வற்றவனும் உணர்ச்சிக் களஞ்சியமாவானே!

மீனு சாந்தாவின் மடியில் தூங்கிவிட்டாள். சாந்தா அவளை அன்புடன் தட்டிக் கொண்டிருந்தாள். எனக்கு உஷாவின் ஞாபகம் வந்தது. சாந்தாவின் வடிவில் உஷா தான் மீனுவைத் தூங்க வைப்பதாக ஒரு கணம் தோன்றியது. அதே அமைதியான முகம், மோகன அன்பு வடிவம்! சிறிது நேரமே இந்தப் பிரமையில் இருந்தேன்; கசப்பான உண்மை எனக்குக் கொடிய எதிரியாக நின்றது. அடுத்த கணமே, என் நெஞ்சில் இருந்த வடிவம் புகையுண்டது. பேசா மடந்தை சாந்தா, பேச்சில் வல்லவளான என் உஷாவின் இடத்தை எய்த முடியுமா? நடக்கவே முடியாத காரியம்!

சாந்தா என்னையே உற்றுப் பார்த்தவண்ணம் இருந்தாள். எனக்கு என்னவோ சங்கடமாக இருந்தது; பார்த்தும் பாராதவனாக நான் படுக்கையில் சாய்ந்தேன்.

**பொ**ழுது விடிந்தது. பம்பாய்த் துறை முகம் நெருங்கியது. பயணிகள் பெட்டிகளைப் பூட்டினார்கள்; மூட்டைகளைக் கட்டினார்கள். நான் சோம்பலை உதறிச் சடக்கென்று எழுந்தேன். 'வாஷ் பேஸினி'ல் முகத்தைக் கழுவிக் கொண்டு வந்து, உடையை மாற்றினேன்.

சாந்தாவின் தந்தை இன்னமும் குறட்டை விட்டபடி இருந்தார். அவள் அப்பொழுது தான் விழித்துக் கொண்டாள். மீனு ஒரு கையால் அவள் கழுத்தை அணைத்தவண்ணம் அவள் மார்பில் படுத்திருந்தாள். நான் மீனுவை எழுப்புவதற்காகச் சாந்தாவின் அருகில் சென்றேன். சாந்தா என் கையைப் பிடித்துக் கொண்டாள். என்னைக் கூர்ந்து நோக்கிய அவள் கண்கள், அவளது இருதயத் துடிப்பின் வேகத்தை எனக்கு விளக்கின. அவளது மாதுளங் கன்னம், தூக்கத்தில் கலைந்த கூந்தற் சுருள், செவ்விதழ், கட்டிளமை!

அவளுடைய பேரழகை அப்பொழுதுதான் அருகிலிருந்து பார்த்தேன். அவள் என் கையைப் பற்றியிருந்த பிடிப்பில் பெண்மையின் ஆற்றல் இருந்தது; பட்டின் மென்மை இருந்தது; வேட்கையின் வேகம் இருந்தது. அவளது துடிக்கும் இதயம், 'நீ எனக்கு உரியவன்; என்னுடையவன் ஆக வேண்டியவன்.





| | |
|---|---|
| திருடன் உங்களிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தான்! | ஆமாம் |
| அதை நீங்க பிரிச்சுப் பார்த்துக்கிட்டிருந்தீங்க! | ஆமாம் |
| அந்தச் சமயத்திலே அவன் உங்க பர்ஸை அடிச்சுக்கிட்டுப் போய் விட்டான்! | ஆமாம் |
| அதுசரி, அந்தப் பொட்டலத்திலே என்ன இருந்தது? | கடுக்காய்! |

உனக்கு நான் தேவை. இதை உன் கண்ணிலிருந்து அறிந்தேன். உன் மனத்து ரகசியம் எனக்குத் தெரியுமே!' என்று என் காதோடு கொஞ்சியது.

மந்திரத்தினால் கட்டுண்டவன் போல் நான் அந்த நிலையிலேயே ஒரு கணம் இருந்தேன். அந்தப் பேசா மடந்தையின் உள்ளத்தில் எழுந்த இசையலைகள் என் காதில் வந்து ஒலித்தன. மயங்கிய மன நிலையிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டு, மீண்டும் அவளைப் பார்த்தேன். அவள் கண்களிலிருந்து நீர் பெருகியது. 'நான் துணையற்றவள், கதியற்றவள்' என்று அந்தக் கண்ணீர் பேசியதை உணர்ந்தேன்.

'கண்ணுக்கு அழகாக அமர்ந்து உலகை மகிழ்வித்து, மங்கையர் கூந்தலில் திகழாமல், தானே வாடி உதிரும் தங்க அரளிப் பூவைப் போல, சாந்தாவின் வாழ்வு வதங்கியே போகுமோ? இவளுக்காக நான் என்ன செய்ய முடியும்?' என்று நினைக்கலானேன்.

அநுதாபத்துடன் இலேசாக அவள் கண்களைத் துடைத்தேன். அவள் மனம் விட்டுச்

சிரித்தாள். கைப் பிடிப்பைப் பின்னும் இறுக்கினாள். அதற்குள் அவள் தந்தை தூக்கம் கலைந்து புரண்டார். நான் படக்கென்று என் கையை இழுத்துக் கொண்டு நகர்ந்தேன்.

"அடடா! பம்பாய் வந்துவிட்டதா — எழுந்திரு பெண்ணே!" என்று சொல்லிக் கொண்டே, அவர் எழுந்து உட்கார்ந்தார். சாந்தா மீனுவை எழுப்பினாள். தூக்கம் முற்றும் கலைந்த பிறகுதான் மீனுவுக்கு என் ஞாபகம் வந்தது. "அப்பா, நான் அம்மாவிடம் எவ்வளவு நன்றாகத் தூங்கினேன், தெரியுமா?" என்றாள்.

என் மனம் உள்ளுக்குள்ளேயே குலுங்கி அழுதது. சாந்தாவின் ஸ்பரிசத்தில் ஏதோ மாயம் இருந்தது. அவள் பொய்மை நிறைந்தவளாயினும் அவளது ஸ்பரிசம் [illegible], உணர்வை ஊட்டியது. வெறும் மீனுவின் உள்ளத்தை மட்டுமின்றி, என் நெஞ்சையும் அவள் கலக்கியிருந்தாள். ஆயினும், நான் என் மனத்தை அடக்கிக் கொள்ளத்தான் வேண்டும். என் உள்ளத்திலிருந்து அவளை அறவே நீக்கத்தான் வேண்டும். காரணம்: அவள் ஊமை; நங்க அரசி!

கப்பல் துறைமுகத்தில் நின்றது. நாங்கள் எல்லோரும் இறங்கினோம். மீனு சாந்தாவை விட்டு வர இணங்கவே இல்லை. "நாம் மறுபடியும் அவர்களிடம் போகலாம்" என்று எப்படியோ சமாதானப்படுத்தி, டாக்ஸியில் அவளை உட்கார வைத்தேன். சாந்தாவும் அவள் தந்தையும் இன்னொரு டாக்ஸியில் அமர்ந்தார்கள். என்னையே சாந்தா பார்ப்பதைக் கவனித்த நான் என் பார்வையைத் திருப்பி, டாக்ஸிக்காரனிடம், "கிர்காமுக்கு விடப்பா!" என்றேன்.

நான் சாந்தாவை மறக்கப் பெருமுயற்சி செய்தேன். மீனுதான் அன்றையிலிருந்து பைத்தியம் போல் ஆகிவிட்டாள்; 'அம்மா! அம்மா!' என்று வீடு முழுவதிலும் சாந்தாவைத் தேடினாள்; தெருவில் ஓடி அலைந்தாள். அதனால் என் மனக் கலவரம் அதிகமாயிற்று.

சாந்தாவின் அழகு என்னை மயக்கியது என்பது உண்மை; ஆயினும், 'அவள் ஊமை' என்ற உணர்வு மறுகணமே எழும். நான் எப்படி ஊமைப் பெண்ணை மணக்க முடியும்? என் வாழ்வு என்ன ஆகும்? தவிர, உஷாவின் ஆன்மா என்ன நினைக்கும்? அவளுடைய அன்பைப் போற்றும் அளவுக்குக்கூடவா என்னிடம் மனிதத் தன்மை இல்லை? சே! சாந்தாவை மனைவியாக எண்ணிப் பார்ப்பதே நடக்கக் கூடாத விஷயம்.

மீனு சாந்தாவை மறக்க வேண்டும் என்பதற்காகச் செய்யாத உபாயம் இல்லை. பல வகை விளையாட்டுப் பொருள்களை வாங்கி வந்தேன். குழந்தையைத் திரைப்படங்களுக்கு அழைத்துச் சென்றேன்; உலாவ அழைத்துப் போனேன். ஆனால், 'அம்மா, அம்மா' ஜபம் ஓயவே இல்லை. இப்போதெல்லாம் சாப்பாட்டில்கூட அவளுக்கு அக்கறை இல்லை. நாளுக்கு நாள் இளைத்து வந்தாள்.

எனக்கு எல்லாம் தெரிந்துதான் இருந்தது. ஒரு நாள் அவளுக்குக் கடுமையான காய்ச்சல் வந்தது. அப்போதும் அவள் சாந்தாவை மறக்கவில்லை.

என் நெஞ்சில் சுரீலென்றது. மனம் என்னை ஏசியது:

'வீண் தற்பெருமை பாராட்டிக்கொண்டு நீ குழந்தையை வருத்துகிறாய். சாந்தா உனக்கு மனைவி என்ற முறையில் தேவையற்றவளாக இருக்கலாம்; தாயாக அவள் மீனுவுக்குக் கட்டாயம் வேண்டும். நீ இன்று வரை ஏன் மறுமணம் செய்து கொள்ளவில்லை? மீனுவுக்கு மாற்றாந் தாயின் தொல்லை கூடாது என்றுதானே? இப்போது மீனுவுக்குச் சாந்தாவின் வடிவில் தாய் கிடைத்து விட்டாள். அவள் சொந்தத் தாயைப் போலவே இந்தக் குழந்தையிடம் பாசம் வைத்திருக்கிறாள். குழந்தைக்கும் அவளிடம் உயிர். எனவே, மீனுவுக்காகவாவது நீ சாந்தாவை மணந்துகொள்ள வேண்டும்.

'சாந்தாவுக்கும் புகலிடம் ஒன்று தேவை தானே? நீ உலகை ஏமாற்றலாம்; ஆனால் உன்னையே ஏமாற்றிக் கொள்ள முடியாது! சாந்தாவிடம் உனக்கு ஒரு பரிவு, கனிவு, நெருங்கிய அன்பு இருக்கத்தான் இருக்கிறது. அவளுக்கு நீ நம்பிக்கையூட்டினாய். அன்று இருண்ட வாழ்வில் நீ ஒளியாகத் தலை நீட்டினாய். அவளுடைய இன்பக் கனவுகளைச் சிதைக்க உனக்கு உரிமை ஏது? அவளுடைய உணர்ச்சியை அழிக்கும் பாவத்தை நீ ஏன் புரிகிறாய்?

'உஷாவைப் பற்றித்தானே சிந்தனை? மீனு சுகமாக வாழ்ந்தால், சொர்க்கத்தில் உள்ள உஷாவின் ஆன்மா அமைதியுறும். அவள் தன் நல்வாழ்த்துக்களைப் பொழிவாள்; அதனால் உன் எதிர்காலம் ஒளிமயமாகும்.'

தாறுமாறான சிந்தனைச் சுழல்கள் மண்டையில் வட்டமிட்டன. மண்டையே பிளந்து விடுமோ என்னும்படி பல வகை எண்ண ஓசைகள் வன்மையாக ஒலித்தன. நெடுநேரம் ஆராய்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தேன். மெதுவாக மனம் நிம்மதி பெற்றதுமே, சாந்தாவின் தந்தையுடன் பேச, நான் 'போனை' எடுத்தேன்.

மீனுவின் காய்ச்சல் எங்கோ பறந்தே போயிற்று!

சாந்தாவை அணைத்துக் கொண்டு, அவள் கன்னத்துடன் தன் கன்னத்தை இழைத்த வண்ணம், "எங்கேயம்மா போயிருந்தாய்; இவ்வளவு நாள்? இனி என்னை விட்டுப் போகவே கூடாது! ஊம்! நல்ல அம்மா வாச்சே நீ!" என்று மீனு கொஞ்சினாள்.

என் கண்கள் பனித்தன. சாந்தாவின் தந்தை மேல் துண்டினைக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

எனக்குத் தாங்கவில்லை; "மீனு, இவள் இனி உன் அம்மாவேதான். — பெரியவரே, உங்களுக்கு ஏதும் தடை இல்லையென்றால் நான் சாந்தாவை மணந்து கொள்ளத் தயார்!" என்றேன்.

பெரியவர் இவ்வளவு நேரமும் தடுத்து வைத்திருந்த ஆனந்தக் கண்ணீர் இப்போது வெளியே பொங்கிப் பெருகியது.

— தமிழாக்கம்: கா. ஸ்ரீ. ஸ்ரீ.

# மனமகிழும் காலைப் புத்துணர்வு மணிக்கணக்கில் நிலைத்திருக்க...

**குளித்த பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்! பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கின் நீங்காத நறுமணம்... ஈரத்தை இழுக்கும் தன்மை... நாள் முழுவதும் காலைப் புத்துணர்வின் சுகம். இவை யாவரையும் உங்களிடம் ஈர்க்கும்.**

**கோடையானாலும் இறுக்கமானாலும் நறுமணத்துடன் புதுமைப் பொலிவில், குளுமை உணர்வில் உங்களை திகழ வைக்கும் எக்காலத்துக்கும் ஏற்ற பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் இந்தியாவிலேயே அதிக விற்பனையாகும் டால்க்.**

**மூன்று அளவுகளில் கிடைக்கிறது. ஃபாமிலி, பெரியது, மத்திமம்.**




# பாண்ட்ஸ்

## ட்ரீம்ஃப்ளவர் டால்க்

**சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்**

சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

திரு நாராயணஸ்வாமி அய்யர்

திரு ஆர்.எஸ். கணபதி அய்யர்

# ஹிட்லரைச் சட்னி செய்தவர்

இரண்டாம் உலக மகா யுத்தம் மும்முரமாக நடந்து கொண்டிருந்த தருணம். பொது மக்களிலிருந்து அரசியல்வாதிகள் வரை ஜெர்மன் சர்வாதிகாரி ஹிட்லரைச் சபித்துக் கொண்டிருந்த வேளை.

அந்தச் சமயத்தில் ஹிட்லரைச் சட்னியாக்கிவிட விரும்பிய பொதுமக்கள் சென்னை நம்புச் செட்டித் தெரு ஸ்ரீ ராமபவன் ஹோட்டலுக்குப் படையெடுத்துப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆம். அங்குதான் இட்லிக்குத் தொட்டுக்கொள்ளக் காரசாரமான கொத்தமல்லித் துவையல் ஒன்றைச் செய்து-அதற்கு 'ஹிட்லர் சட்னி' என்ற பெயர் கொடுத்துப் பிரபலமாக்கியிருந்தார் அந்த ஹோட்டல் அதிபர் ஸ்ரீ ஆர். எஸ். நாராயணஸ்வாமி அய்யர்.

உத்தியோகம் தேடிச் சென்னைக்கு 1935ல் வந்த இவர் கார்ப்பரேஷனில் அட்டெண்டராக வேலைக்கு அமர்ந்து மூன்றே நாட்களில் அந்த வேலைக்கு முழுக்குப் போட்டுவிட்டுப் பெரியவர்கள் தொடங்கிய ஹோட்டலின் முன்னேற்றத்துக்காக உழைக்கத் தொடங்கிவிட்டார்.

நாளடைவில் தம்பி ஸ்ரீ ஆர். எஸ். கணபதி அய்யர் 'பாகஸ்தராக'ச் சேர்ந்து கொண்டார். இரவு 10–30 மணி வரை ஸ்ரீராமபவன் ஹோட்டலில் சூடான இட்லியும் சட்னியும் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடம் பரவியது.

வியாபாரத்தைப் பயனுள்ள பல வழிகளில் விஸ்தரிக்கத் தொடங்கினார்கள். லாட்ஜிங் ஹவுஸையும், காப்பிப் பொடி தயாரிப்பையும் தொடங்கினார்கள். பிறகு ஊறுகாய்கள், ஜாம் ஜெல்லி வகைகள் தயாரிக்க ஸ்ரீ கணேஷ்ராம் கம்பெனியைத் தொடங்கினர். தங்களுக்குக் கிடைத்த 777 என்ற லைசென்ஸ் நம்பரையே தங்கள் தயாரிப்புகளில் டிரேட் மார்க்காகச் செய்து "மூன்று ஏழு" என்பதையும் முன்னெச்சரிக்கையாக ரிஜிஸ்தர் செய்து கொண்டுவிட்டார்கள். இப்போது ஊர் உலகம் எல்லாம் பிரபலமாக இருக்கும் 777 என்ற எண்கள் பிறந்த விவரம் இதுதான். ரெடி பாயஸம், ரெடி இட்லி, போண்டா, பஜ்ஜிகளும் தோன்றின.

ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் வசிக்கும் தமிழர்களுக்கு ஸ்ரீ கணேஷ்ராமின் தயாரிப்புகள் வரப்பிரசாதமாக விளங்குகின்றன.

சென்னை நகரிலேயே சுத்தமான ஹோட்டல் என்பதற்கான மாநகராட்சியின் சுழல் கேடயம் ஸ்ரீராம பவனுக்கு இருமுறை கிடைத்துள்ளது.

உணவுப் பொருட்களில் கலப்படம் தலைவிரித்தாடி மக்களின் உடல் நலனைப் பெரிதும் பாதித்து வரும் இந்நாளில் சாம்பார் பவுடர், கறி பவுடர் போன்ற மசாலாப் பொருட்களை அதிகாரிகள் 'அக்மார்க்' கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்ததைப் பெரிதும் பாராட்டுகிறார் திரு நாராயணசாமி அய்யர். நல்ல சரக்குகளைச் சுகாதார முறையில் சிறந்த மேற்பார்வையின் கீழ் தயாரிப்பதற்குத் துணை புரியும் தரக் கட்டுப்பாடு நிர்ணய ஆய்வகம் ஒன்றை இவ்வாண்டு தொடங்கியிருக்கிறார். தம் தயாரிப்புகளைப் பதனப்படுத்தவும் பக்குவமாகப் 'பாக்' செய்தனுப்பவும் உள்ள இயந்திரங்களில் சில ஸ்ரீ அய்யர் கொடுத்த யோசனைகளின் அடிப்படையில் உள்ளூரிலேயே செய்யப்பட்டவை.

இந்தியாவிலிருந்து சுமார் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள மசாலாத் தூள்கள் ஆண்டுதோறும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. இதில் 75 சதவிகிதம் சென்னை துறைமுகத்திலிருந்து ஏற்றுமதியாகிறது. இத்தனை முக்கியத்துவம் வாய்ந்த ருசிமிக்க தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் அயல் நாடுகளில் தமது புகழ் 777 சதவிகிதம் 'ஜம்'மென்று உயர உதவுவார்களாக!

— மகரம்

## விபத்துக்கு விடுமுறை

அமெரிக்க நாட்டுத் தொழிற்சாலைகளில் ஏற்படும் விபத்துக் களின் காரணங்களை ஆராயச் சமீபத்தில் ஐந்நூறு விபத்துக் களைப் பரிசீலித்தார்கள். இந்த ஐந்நூறு விபத்துக்களில் அறுபது சத விகிதம் திங்கட்கிழமைகளில் காலை நேரத்தில் வேலை தொடங்கிய முதல் ஒரு மணி நேரத்தில் நிகழ்ந் திருக்கின்றன. இருபத்து ஐந்து சத விகித விபத்துக்கள் வெள்ளிக்கிழமைகளில் வேலை நேரம் முடிவதற்குச் சில மணி நேரங்கள் முன்னால் ஏற்பட்டிருக்கின்றன.

சனி ஞாயிறு விடுமுறை தினங்களை எந்தவிதக் கட்டுப் பாடுமின்றிப் பல்வேறு உல்லாச இடங்களில் கழித்ததினால் ஏற்பட்ட அலுப்பும் களைப்பும் முன்னதற்குக் காரணம். வர விருக்கும் விடுமுறை தினங் களை எப்படி இஷ்டம் போல் கழிக்கலாம் என்ற யோசனை யும் ஆர்வமும் இரண்டாவ தாகக் குறிப்பிட்ட விபத்துக் களுக்குக் காரணம் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள்!



## கும்பகர்ணன் எழுதும் கொட்டாவிக் கதைகள்!

"அன்பே! பேசிக்கொண்டே இருக்கிறேன்! நீ கொட்டாவி விட்டுக்கொண் டிருக்கிறாயே?"

"உங்க காதல் உளறல்கள் காதில் விழாமல் செய்ய அந்தக்



கொட்டாவி துணை செய்கி றதே! இந்தக் கொட்டாவி வரலேன்னு நான் அப்பவே எழுந்து போயிருப்பேன்."

✿

"என்ன சார் வேடிக்கையா இருக்கு? அடிக்கடி கொட்டாவி வர ஒரு மருந்து வேணும்னு கேட்கிற முதல்நபர் நீர்தான்!"

"அதற்காக நான் என்ன செய்வது டாக்டர்! நான் என்ன சொன்னாலும் நான் கவனமாகக் கேட்பதாக என் மனைவி தன் சிநேகிதிகளிடம் பெருமை அடித்துக் கொள் கிறாளே! அவளை நான் எப்படித் திருத்துவது?" [அவ்வளவு தான் வாயை மூடலாம்!]




கோமதி சுவாமிநாதன்

## அவகாசமா? அவசரமா?

(1)

அறுபது வேலை நாட்க ளுக்கு மேலாக நடந்து முடிந்து இதுவரை சுப்ரீம் கோர்ட்டில் நடந்திருக்கும் வழக்குகளிலேயே பெரிய வழக்கு என்று பெயர் பெற்ற ஜனாதிபதி தேர்தல் ஆட்சேப வழக்கிற்கான மனுக்கள் தள்ளுபடி உத் தரவை நீதிபதி ஐந்தே நிமிடங்களில் படித்து முடித்து விட்டார். - செய்தி



## ஒரு பிரிவுபசாரக் கவிதை!

நான்காண்டு சேவைதன்னை
நலம் பெறவே புரிந்துவிட்டு
பாங்காக இடம் மாறும்
பாக்கியவான்........க்கு

உடன் உழைத்த நண்பர் பலர்
உகந்தளிக்கும் பாராட்டை
ஒரு முகமாய்க் கேட்டிடுவீர்
ஓங்கிக் கை தட்டிடுவீர்!

அவர் அறிவைப் பகிர்ந்தவர்கள்
அதிகம் பேர் இல்லை
அவர் டிபனைப் பகிர்ந்தோரோ
அனைவருந்தான்! அனைவருந்தான்!

தோசை மணக்காது டிபன்பாக்ஸ்
ஓசையும் ஒலிக்காது
ஆசையுடன் கேலி செய்ய
ஆசாமி கிடைப்பாரா?

நெஞ்சம் மறக்காது; நேசம் குறையாது
நினைவு தேயாது அன்பு தீராது
எங்கிருந்தாலும் வாழ்க - அவர்
எவர்சில்வர் டிபன்பாக்ஸும் வாழ்க!



## பட்டு மாமா—சிட்டு மாமி!

"குழந்தை எழுத்தாளர் சங்கக் கூட்டத்துக்குப் போயிருந்தேன். வீடு திரும்ப பஸ்ஸே கிடைக்கலே. நடந்து வந்துட்டேன்."

"தவழ்ந்தே வந்துவிட்டேன் என்று சொல்லாமல் விட்டீர்களே!"



## சாத்தமான முறையில் சதி

அந்தக் கப்பல் தலைவர் மகா கண்டிப்புக்காரர். துணைத் தலைவராகக் கப்பலுக்கு ஓர் இளைஞர் வந்து சேர்ந்தார். வேலையில் சேர்ந்த அன்று துணைத் தலைவர் உற்சாகமிகுதியில் அதிகமாக மது அருந்திவிட்டிருந்தார். இதைக் கவனித்த தலைவர், அன்று குறிப்புப் புத்தகத்தில் "துணை அதிகாரி இன்று குடிபோதையில் காணப்பட்டார்" என எழுதிவிட்டார்.

இந்த விஷயம் தெரிந்ததும் துணைஅதிகாரி தலைவரிடம் ஓடி வந்து 'நான் இதற்குமுன் இப்படி இருந்ததே இல்லை. வேலை கிடைத்த மகிழ்ச்சியில் அதிகமாகக் குடித்துவிட்டேன். இது என்மேல் தப்பபிப்பிராயத்தைத் தோற்றுவிக்கும். அதை அடித்துவிடுங்கள்' என்று கெஞ்சினார். தலைவர் மசியவில்லை.

மறுநாள் கப்பல் தலைமைப் பொறுப்பு ஏற்றவர் துணைத் தலைவர். தலைவருக்கு ஓய்வு. அன்று குறிப்புப் புத்தகத்தில் துணை அதிகாரி கீழ்க்கண்டவாறு எழுதினார். "இன்று கப்பல் தலைவர் குடிக்கவில்லை. சுய அறிவோடேயே இருந்தார்."

இக்குறிப்பை மறுநாள்பார்த்த தலைவர் விக்கித்துப் போனார். உண்மையான விஷயம்தான். ஆனாலும்அது எப்படிமுழிக்கிறது?



## சிலர் படிப்பார்! சிலர் வெடிப்பார்!



"என் பையன் கல்லூரியில் படிக்கிறான்" என்று பெருமையாகச் சொல்லிக்கொள்ளும் பெற்றோர்கள் சற்று யோசிக்க வேண்டும். 'பையன் கல்லூரியில் வெடிக்கிறான்' என்றால் தான் இனிப் பெருமையாக இருக்குமோ என்னவோ? கல்கத்தாவிலும் அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ள கல்லூரிகளைப் பாருங்கள்! எத்தனை வெடிகுண்டுகள் அகப்படுகின்றன? மாணவர் விடுதிகளில் எத்தனை குண்டுகள் வெடிக்கின்றன!

## பழசும் அதிபழசும்!

"என்ன சார்! இன்றைக்கு 'கிராண்ட்ட்ரங்க்' எக்ஸ்பிரஸ் கரெக்ட் டயத்திற்கு வந்துவிட்டது?.... என் பாராட்டுக்கள்" என்று ஒருவர் ரயில் நிலைய சிப்பந்தியைப் பாராட்டப்போக அந்தச் சிப்பந்தி தலைகுனிந்து, "மன்னிக்கவேண்டும்! இது நேற்று வர வேண்டிய ரயில்" என்று சொன்னாராம்! 'ஐயய்ய, பழைய ஜோக்குன்னு இது!' என்று சண்டைக்கு வராதீர்கள். இது இப்போ ஞாபகத்துக்கு வரக் காரணம் இருக்கிறது.

பீஹார் மாநிலத்தில் 1969-ம் ஆண்டில் நடந்திருக்க வேண்டிய எம். ஏ. பரீட்சைகள் இன்னும் நடக்கவில்லை. இந்த ஆண்டு மத்தி வரை நடக்குமென்றும் தோன்றவில்லை. 1969-ம் ஆண்டில் நடந்த பி. ஏ. பரீட்சை முடிவுகளும் இதுவரை வெளியாகவில்லையாம்!



## அவகாசமா? அவசரமா?

(2)

"வருஷக் கணக்கில் உழைத்துப் பல லட்சக் கணக்கான ரூபாய்களைக் கொட்டித் தயாரிக்கப்படும் சில தமிழ்த் திரைப்படங்கள்



ஒரே வாரத்தில் தியேட்டர்களை விட்டு வெளியே ஓடிவிடவில்லையா என்ன?" என்கிறார் ஒரு மாஜி திரைப் படத் தயாரிப்பாளரின் மாஜி செக்ரட்டரி!



பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

அண்மையில் நாமக்கல்லிலிருந்து சேலம் போகும் சாலையில் சூறாவளிக் காற்றினால் ஒரு மரம் முறிந்து கீழே விழுந்து விட்டது. நல்ல வேளையாக ஓடும் பஸ்ஸின் மீது மரம் விழவில்லை. இதனால் அன்று பஸ்கள் வேறு சாலை வழியாகச் சென்று, சேர வேண்டிய ஊரைத் தாமதமாக அடைந்தன. சாலையில் இற்றுப் போய்க் கீழே விழுகின்ற நிலையில் உள்ள பெரிய மரங்களைக் காற்றினால் முறிந்து சாலையில் விழுவதற்கு முன்பாகக் கவனித்து வெட்டி விட்டால் என்ன?

தேவராயபுரம்
13–5–70 வீ. தேவராசு

சில நாட்களுக்கு முன்னால் எங்கள் ஊரில் (கும்பகோணத்தில்) சில கம்யூனிஸ்டு விவசாயிகள் ஏதோ கோஷித்துக் கொண்டு சென்றனர். அது என்னவென நான் அருகில் சென்றறிய விரும்பினேன். 'நிலங்கள் எல்லாம் உழுபவனுக்கே சொந்தம்' போன்ற பல கோஷங்களை அவர்கள் எழுப்பிக் கொண்டு சென்றனர். எனக்கு அதைக் கேட்டதும் பல ஆண்டுகளுக்குமுன் அமரர் திரு கல்கி அவர்களின் நவீனமாகிய 'அலை ஓசை'யின் ஒரு பகுதி நினைவுக்கு வந்தது.

''இன்றைக்கு 'உழுகிறவனுக்கு நிலம்' என்பார்கள். நாளைக்கு 'அறுக்கிறவனுக்கு நெல்' என்பார்கள். அப்புறம் 'கொத்தனுக்கு வீடு' 'வண்ணானுக்கு வேஷ்டி'. 'டிரைவருக்கு மோட்டார்' என்றெல்லாம் வரும். 'சமைக்கிறவனுக்குத்தான் சாதம்' என்று சொன்னாலும் சொல்வார்கள்.' – இது ஒருவரது கூற்று.

''அது இருக்கட்டும். உழுகிறவனுக்கு நிலம் சொந்தம் என்கிறார்களே! உண்மையில் உழுகிறது யார்? மாடு அல்லவா கலப்பையை இழுத்துப் போய் உழுகிறது? அதை விடுங்கள். சீமையிலே இப்போது எல்லாம் உழுவதற்கு டிராக்டர் என்று ஒரு மெஷின் வந்திருக்கிறதாம். ஒரு டிராக்டரைக் கொண்டு நூறு ஏக்கர் நிலம் உழலாமாம். அப்போது அந்த டிராக்டரைக் கொண்டு உழுபவனுக்கு அந்த நூறு ஏக்கர் சொந்தமாகி விடுமா? அப்படியென்றால் நான் எப்படியாவது ஒரு டிராக்டரை வாங்கி ஓட்டவும் கற்றுக் கொண்டு விடுகிறேன்.'' இது மற்றொருவர் கூற்று.

இந்தச் சம்பாஷணை ஹாஸ்யம் நிறைந்ததாயிருப்பினும் எத்தனை தூரம் இதில் உண்மை மறைந்து அடங்கியிருக்கிறது என்பது இதை நன்கு ஆழ்ந்து சிந்தித்தால் புலப்படும்.

கும்பகோணம்
11–5–70 ந. ஜெயம்

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு ஊழியர்கள் அண்மையில் வேலை நிறுத்தம் செய்தது அருவருப்பான விஷயம். இரண்டு அதிகாரிகளுக்கு இடையில் ஏற்பட்ட சச்சரவு காரணமாக ஆயிரக்கணக்கான டெபாஸிட்டர்கள் அவதிக்குள்ளாகி யிருக்கிறார்கள். நாடெங்கிலும் உள்ள இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கு அதிகாரிகளும் ஊழியர்களும் ஸ்ட்ரைக் செய்து விட்டனர்.

எங்கள் வீட்டில் கல்யாணம் நிச்சயமாகி யிருப்பதால் அவசரமாகப் பணம் வாங்க தி. நகர் கிளை பாங்குக்குப் போனேன். கதவு மூடப்பட்டிருந்தது. பணத்துக்கு வேறு ஏற்பாடு செய்யவேண்டி யிருந்தது. என்னைப் போல் பணம் அவசரமாகத் தேவைப்பட்டவர்கள் எத்தனை பேர் வேறு ஏற்பாடு செய்ய இயலாமல் அவதிப்பட்டார்களோ?

தேசியமயமாக்கப்படுவதற்கு முன் பாங்குகளில் வேலை நிறுத்தம் என்றால் உயர் அதிகாரிகள் மட்டுமாவது வேலை செய்து பணம் போட்டவர்களுக்கு அதிகத் துன்பம் நேராமல் பார்த்துக் கொண்டார்கள். தேசியமயமாக்கப்பட்டதும் அதிகாரிகளே வேலை நிறுத்தம் செய்வதில் முனைகிறார்களே, என்னவென்பது!

சென்னை–34
21–5–70 சிரமப்பட்டவர்

உச்செள்ளு (பேய் எள்ளு; Nigar Seed) என்னும் ஒரு வகை விதை ஒரு வகைச் செடியின் பூவிலிருந்து உதிர்க்கப்படுவது. விசேஷமாக மைசூர் பிரதேசங்களிலும் ஆந்திரப் பிரதேசங்களிலும் விளைவிக்கப்படுகிறது. அதனின்றும் பிழியப்படும் எண்ணெய் மிகவும் உஷ்ணமானது. பரிசீலனைக்கு அதன் தரங்கள் அநேகமாய் எள்ளின் தரங்களை 99 சதம் ஒத்திருக்கிறது. அதை எள்ளுடன் கலந்து ஆட்டினால் அந்த எண்ணெய் சுத்தமான எள்ளு எண்ணெயின் தரங்களைப் பூர்த்தி செய்கிறது. அந்த எண்ணெய்க்குப் பரிசோதனைச் சாலைகளில் – அக்மார்க் முத்திரை அளிக்கப்படுகிறது. அசல் எள்ளுக்கும் உச்செள்ளுக்கும் ஒரு மூட்டைக்கு விலை வித்தியாசம் நூறு ரூபாய் வரை ஏற்படுகிறது. இதனால் பொதுமக்கள் அரசாங்கப் பாதுகாப்புடன் ஏமாற்றப்படுகிறார்கள். நாணயமான வியாபாரிகளின் மனச்சாட்சிக்கும் சோதனை ஏற்பட்டிருக்கிறது. இது சம்பந்தமாக ராஜ்ய வாணிப அதிகாரி (State Marketing Officer) 29–4–70 தேதி அன்று திருப்பூர் விஜயம் செய்தபோது அவரிடம் விளக்கியதில் இதில் இயலாமையை ஒப்புக்கொண்டு வியாபாரிகள்தான் மனம் திருந்தி நியாய உணர்வுடன் நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவுரை வழங்கினார்.

ஈரோடு
9–5–70

ஏ. வி. ராமசாமி, பார்ட்னர்,
எஸ். எம். அருணாசல முதலியார் கம்பெனி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !




# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள் : கோத்ரேஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 அளவுகள் :
40 mm (5 லீவர்கள்)
60 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
86 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரேஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon